அவை யுண்டெனுமளவும், அத்தோற்றங்கள் விசாரணையில் தமக்கெனப் பொருளின்றித் தத்தங்காரணங்களி லொடுக்கிக் கொண்டு போகியு மின்மையாக முற்றுமுடிதலா வில்லையெனவும் வழக்கு வருமன்றே; வருதலால், ஆமென்று முண்டென்றும் நாட்டுதலாலென்னபயன். தீராவழக்காதலால் விட்டுவிடுதலே நன்மை. விட்டுவிட்டால் அல்லவில்லை யென்னு மாட்சேபனையேன் வரும். வரமாட்டாதென்று ஆமென்றும் உண்டென்றுங் கூறும் வசனங்களை நாம் விட்டுவிட்டால், இருக்கிற சகசீவபர மில்லாமற் போய்விடுமோ? இருப்பதாயின், வஸ்து சோதனையி லில்லையெனப் போகாதிருப்பதாகக் காட்டவல்லா ராருளர், எங்கணு மில்லவேயில்லை—எ-று.

ஞா-வி—ஆயினிவ்விருவர் வழக்காற் பயனின்றே வெனின்?

ஆ-விடை—"தன்னு லறிவதெலாந் தன்னிழலென் றெண்ணமில்லார், தன்னிழலை யாரளப்பார் தாமளப்பார்-இன்னவிதங், காணுரிவரிருவர் கற்றமொழி முற்றுறுமோ, வீணுர வீணரிலை வேறு." எ-து. தன்னு லறியப்ப டுவனவாகியதத்துவக்கூட்டங்க ளனைத்துந் தனதெதார்த்த சொரூபமாகிய சுத்த சைதன்யத்தி னிழலென்று எண்ணமே யில்லாதா ரெங்ஙன மவற்றை யறிந்தளப்பார். ஆயினிலரோவெனின், தனது தேகநிழலை யளக்கவல்லார் யாரோ, அவர்களே அவற்றை யளக்கவல்லார். இன்னவித நிலையுண்டெனச் சத்தத்தாலுங் காணுத விவ்விருவர் மிகுதியுங் கற்றுணர்ந்து வழக்கிடு மொழிகள் முடிவு பெறுமோ? பெறாதாயி னிவர்கள் வழக்கிடுவானேன். வீணுர வீணர்க ளிவர்களெனக் காட்டுதற்கு வேறுள ரிவர்களாகாரெனின், வீண்வழக்கி லிவர்களினும் வேறிலரென்க.

ஞா-வி—இனி யிவ்விருவர் வழக்கும் வீணுயின் உண்மை விளங்குமாறுதா னெங்ஙனே வெனின்?

ஆ-விடை—விசாரம் - மனனம் - ஆதாரநோக்கு - பாவம் அபாவம்-தேடல்-பிராந்தி - எழுச்சி - புடைபெயர்ச்சி-வினைமுதல்-என்னுமிப்பத்தும் ஊர்த்தமுக சோதனையால் மூடமகன்று உண்மையினையதென விளங்குமென வறிக.

ஞா-வி—இவற்றுள் விசாரமாவ தியாதெனின்?

ஆ-விடை—விசாரமாவது; அறிவு தனக்குப் புலப்படுவனவனைத்து முபாதான வுபாதேய தர்ம்மத்த தெனவும், விகார நிலைய

தெனவும், கிஞ்சித்து முணராத்தன்மையால் மெய்ப்பொருள் எனக்கருத, அதனுல் இச்சாஞானக்கிரியை விளேவும், அதனுல் அதோமுகத்தாழ்தலுந், தற்பிரியமெனக் காணுது அவற்ருல் விளேவதெனக் கருதிச் சுகித்தலும்; அங்ஙனஞ் சுகித்தலால் மாருத்திருத்தியின்மைக்கு உளஞ்சுழறலும்,அச்சுழறலா லின்பமெலாந் துன்பமாத்தோற்றலும், அத்தோற்றத்தாற் சுயசுகமாவ தியாதெனக்கருதலும் வருமன்ருே? அங்ஙனம் வரும்போது திரிசியமனைத்தும் பிரியவடிவாயின் வெறுப்புக்கிடமென்ன. வெறுப்புக்கு மிடமாதலின் பிரியசாதனக் கருவியாகவேண்டும். ஆனுற் பிரியவடிவமாவ தியாதெனவரும். வரின் சோதனே செய்யவேண்டிவரும். வரின், சடமனைத்துமல்ல வல்லவென வகலும். அகலவே, சித்தெனவரும். வரவே, சித்திற் கற்பிதமோ - எதார்த்தமோ எனவரும். இங்ஙனம் வருவதெல்லாம் விசாரமெனப்படும்.

ஞா-வி௵— இத்தனேயு மொன்றில் விளக்கிக் காட்டவேண்டுமெனின்?

ஆ-விடை—கடபடமென்பவற்றுள்; கடமென்புழிப் பருத்துஞ், சிறுத்துங், குவிந்தும், வளேந்தும், நீண்டு, மிது முதலான விகாரம் பெற்றிருக்குந் தோற்றமென்ருது மெய்யெனக் கருதுமாறுபோன்று, தேக மென்புழி மண்ணின் சட்பாவவிவகாரத்தோற்றமெனக் கருதாது, மெய்ப்பொருளெனக்கருதித், திணேபாலிடங்களி லொவ்வொன்றின்பாலதாக்கித், தேகியாகப்பாவித்து, யானெனதெனப் பந்தித்தல் துக்கமேயாதலின், துக்கமெனவுணர்ந்தான்; யாதினுலிவ்வுடல் துக்கமாகக் காண்பதென விசாரிப்பது, **விசாரமெனவும்**; அங்ஙனம் விசாரிப்புழி யிங்ஙனங் காணப்பட்டு நின்றுள்ள வடிவங்களனைத்தும் நாசகாலத்தில் மண்ணு யழிந்ததைக் கண்டுகொண் டிருக்கிருேம், இப்போ திருக்கிற வுடல்களு மவ்வண்ணந் தானே யென விசாரத்தாற் றீர்ந்ததைத் தோற்ற லாகார மாகாது சிந்திப்பது **மனனமெனவும்**; அங்ஙனஞ் சிந்திப்புழிச் சராசர வடிவங்க ளனைத்து மண்ணின் விகாரமெனத் திடந்தரலால், உட லெங்கெங்கு காணினு மயங்காதிருத்தற் காதார நோக்காகிய மண்ணுட்ட சாதனம் வேண்டுவதாதலால், **ஆதாரநோக்கெனவும்**; அங்ஙன மாதார நாட்டமீக்குழி, எவ்வுட லெங்கெங்கு தோற்றினு மண்பாவ மேலிடலால், முன்னர் உடலினது விகார மண்ணெனல்போய், இப்போது மண்ணினது விகார முடலென்னு மனுபவந் தரலானும், இந்தப் பாவத்தில் உடல்

தோற்றுமையானும், **ஆதாரபாவமே பாவமெனவும்;** இந்தவாதார பாவ மேலீட்டி லிந்த வாதேயமாகிய தேகபாவம் நாளுக்குநாள் அணு வணுவாக மெல்ல மெல்லத் தெரியாது அப்பி லுப்புபோற் கரைத லால் **அபாவமெனவும்;** இங்ஙனம் பாவம்சேரிட்டுழி, முன்ன ருண்மை யாகத் தோற்றிய வுடல்க ளெங்கே யெங்கே யெனத் தேடவேண்டி வருதலால் **தேடலெனவும்;** அங்ஙனந் தேடலுற்றுழி யிருந்தால் காணுதா? காணுததா லில்லவேயில்லையெனவரும். வரின், முன்னர் நாமே யுடலைக் கர்த்தத்துவ சாதனக் கருவியாக் கொண் டிவ்வுலக சுகத்தை யனுபவித்தோ மிப்போது அதுபோனவழியெங்கேயென வரும். வரின், உடல்கள் தோற்றுவதற்கு முன்னு முடல்கள் மண் ணே. தோற்றி நின்ற விடத்தும், மண்ணினது விகாரமன்றி அவ யவங்கட்குச் சொரூப மின்மையால் உடல்களிப்போதும் மண்ணே. அழிந்த விடத்து மனுபவமாக் காண்டலால் பின்னுமண்ணே. இம் மூன்றுகாலத்தும் மண்ணையன்றிப் பிரத்தியட்சத்தானும் - அனுமா னத்தானும்-அருத்தாபத்தியானும் வேறுகாணுத வுடல்கள் எப்போ தும் மண்ணே. ஆதலின், மண்ணினது விகாரவடிவமுடல்களெனக் காணுதது; உடல்களோ, வேறோ? வேறாயின், மண்ணை யன்றிக் காட்டலாம். உடல்களெனின் அங்ஙனமோர்முதலன்றாதலின், ஒன் றையொன்றாக் கொள்ளு மயக்க மென்னலாம். அம்மயக்கம் புத்தி விகற்ப மாதலினானும், அன்னிய மன்றாதலானும், உடல்கள் எனல் வந்ததுமில்லை, இருந்ததுமில்லை, போனதுமில்லை. உடல்களாக வந் தது மிருந்ததும் போனதும் புத்தி விகற்பே, ஆதலிற் **பிராந்தி** யெ னவும்; ஸ்மரணை தன்னையுந் தனக்காதார சுத்த சைதன்னியத்தையு மறந்தது அவசர நிலையே பிராந்தி ரூப வெழுச்சி ஆதலால், அதனை **எழுச்சி** எனவும்; அகண்ட வெளியில் ஏகதேசமாக அவ்வெளி யே பரமாணுவிலும் அதிநுட்பமாகச் சலிக்கவெழுந்த எழுச்சிபோல அகண்ட பரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாச சைதன்ய வெளியில் தானே யேகதேச வத்தியாச பரமாணுரூபமாக வெழுந்த வெழுச்சி ஆதலால் அதனை **எழுச்சி** எனவும்; காற்றுகத் தடிக்க வெழுத லாகிய புடைபெயர்ச்சி இன்றி அவ்வெழுச்சி இல்லாமை போல, அகண்ட சைதன்யவெளியில் அயலாக ஸ்புரிக்க வெழுதலாகிய புடை பெயர்ச்சியின்றி, ஸ்புரிப்பாகிய வெழுச்சி இல்லாமையால் அவ்வ சைவைப் **புடைபெயர்ச்சியெனவும்;** வெளியாகிய வினைமுதலையன் றிப் புடைபெயர்ச்சியாகிய அசைவில்லாமைபோலச், சிதாகாசமாகிய

வினைமுதலையன்றி ஸ்புரிக்கவெழுதலாகிய புடைபெயர்ச்சி யென்னும் அசைவில்லாமையால், இங்கே சைதன்யத்தை வினைமுதலென்றும்; சத்துக்கள் சொல்லுவார்கள். இதனாற் சர்வத்திற்கு மாதாரஞ் சைதன்யமெனவும்; அதனை மறவாதிருக்கின் இந்த விபரீதங்க ளெல்லாம் இல்லையெனவும்; ஆதாரந் தெரியாவிடத் திவ்விருவர் வழக்காற் பயனின்றெனவுங் குறிப்பித்த வாறுயிற்று.

ஞா-வி௵— இங்ஙனமிருக்க; முன்னர் இவ்விருவழக்கு மின்றி யமையாமை யெனக் கூறுவானே னெனில்?

ஆ-விடை— ஒருவர் அனுமானத்தா லுண்டெனவும்; ஒருவர் பிரத்தியட்ச மில்லாமையால் இல்லையெனவுங் கூறுதொழியில் ஒரு தலைத்தீர்ப்பாகவும், வாச்சியார்த்த லட்சியார்த்தங்கட்கு இடமின்றாகவுமுடியு மாதலைப்பற்றியென்க.

ஞா-வி௵— பரசீவ ருண்டெனக் கூறலாற் றடையென்னை யெனின்?

ஆ-விடை— உபாதி குணச்சேட்டையைப் பரசீவரெனின், பரசீவராகுமா? தன்னை யறிதற்பா லதன்றுமையி னென்க.

ஞா-வி௵— உபாதி காரணமாக வுபாதிசகித பரசீவர் வெளிப்படுவா ரென்றற் கன்றோ விட்ட விலக்கணை யேற்படுத்தப்பட்ட தெனின்?

ஆ-விடை—மெய்யே;ஒன்றும் கூறுதும் அதனைக்கேளுதி "அறிவோ வழக்கிடுவ தன்றி யுடலோ, அறிவே லுடல்மயம தாகா-தறிவாநின், றிட்டால் வழக்கெங்கே யில்லையுண் டென்பதெங்கே, விட்டிடினுந் தேர்வதெங்ஙன் வீடு." எ-து. இருவராக நின்று வழக்கிடுவ தறிவோ, உடலோ? உடலெனிற் சடமறிந்துணர்த்துமா? அறிவெனில், உட லன்னியமாதலால் அதன் மயமாகாது அறிவாகாரமா நின்று வழக்கிட்டால்,அன்னிய மென்ப தில்லாமற் போகும் ஆதலால் வழக்கென்பதும், இல்லை யுண்டென்பது மெங்கே. தேகநானென்று அதன்மயமாமளவுந் தேவையின்றி யிங்ஙன மாராயும் வழக்கை விட்டுவிடினும் உபசாந்தி நிலையாகிய மோட்ச மெனப்படுவ தெங்ஙனம் விசாரித்துத் தெளியப்படும். எ-று, தெளியாவிடத்து விஸ்ராந்தி யில்லையென்பதாம்.

ஞா-வினா—ஆயின், யாது சைதன்னியத்துக்கு அலாகத்தோற்றுகின்றதெனின்?

ஆ-விடை— "மறந்திடின் மண்ணை மறப்பே யுடலாம், மறக்கி லறிவை மறப்பே பிறிதாகத், தோற்று மனர்த்தமதாஞ் சொல்வழக்கா லென்னபயன், தோற்றளவும் வேண்டுந் துணிவு." எ-து. உடலாகத் தோற்றுவன வனைத்து மண்ணின் பிரிதிபலனமேயன்றி வேறில்லாமையால், அவைகளை மண்ணாகப் பார்ப்பதை மறக்கின் அந்த மறப்பே யுடல்களாகத் தோற்றுமன்றி வேறுகாரணமின்றாம். அது போல, எவ்வுயிரும் நானென்னு மறிவை மறக்கின் அந்தமறப்பே தேகாதிப் பிரபஞ்சமென்னு மனர்த்தரூபமாகத் தோற்றுமன்றி வேறின்றாம். இதனை யங்ஙனமன்றி அர்த்த ரூபமாகப் பார்ப்போர் சொல்லாலுண்டெனவு மில்லையெனவும் வழக்கிடுவதால்ாய பயனென்னை? வழக்கிடல் வேண்டுவதின்றோ வெனின், திரிசியமனைத்து முண்மையாகத் தோற்றளவும், விபரீதத்திலாழ்த்து மாதலின் உண்டில்லை யென்னும் வழக்கு வேண்டும். யாதுக்காகவெனின், உபசாந்தி நிலை வாய்த்தற் குண்மைத் துணிவு பற்றி எ-று.

ஞா-வினா— வழக்கினுக்கு முடிவின்றாமையால் என்செய்வதெனின்?

ஆ-விடை— "உள்ளச் சகத்தடிப்பை யோட்டத் தெரியாதார், உள்ளதில தென்பதெவனென்றுறுமோ - தள்ளிவிடில், பந்தத்தறுதியெவன் பற்றறுமோதேகோகம், எந்தவிதத் தும்வேண்டு மிங்கு." எ-து. உள்ளத்தின்கண் ணதனைவிடாது பாலு நீரும்போ லபேதமாகத் தோற்றுஞ் சகத்தடிப்பை யினையதென் றுணர்ந்து ஓட்டத் தெரியாதார் பரசிவ ருளரென்றும் இலரென்றும் வாதிப்பதா லாய பயன் யாது, இது சுருதி யுத்தி யனுபவத்துக் கியையுமா, இயையாதது பற்றித் தள்ளிவிடலாமால், தள்ளிவிட்டால் உடலுயிராகிய சித்து சடபந்த மயக்கத்துக்கு விமோசன மெங்ஙனங் கூடும். அன்றியும்; தேக நானென்னும் அகம்பாவமயல் எங்ஙனம் பற்றறும். கூடாததலால் எந்த விதத்தால் யோசிக்குமிடத்தும் இங்கிந்த விசாரணைவேண்டும். எ-று. "பூதச் சுயம்பிதெனப் பொன்றளவுங் கேட்டறியார், ஏதுக் கிலையுண்டென் றிவ்வழக்குச் - சாதிப்பேன், விட்டிடுமோ துன்பமயல் விட்டிடினு மிவ்வழக்கைக், கட்டமெனி னும்வேண்டுங் காண்." எ-து. ஐம்பூதங்களின் சுயம்புவடிவ மிஃதெனச் சாவளவுங்

கேட்டற் கிடம்பெறத் தகாத விவ்விருவரும் பரசிவருண்டெனவும், இல்லையெனவு மிடும் வழக்கால் யாதுபயன். முடிவுபெறற் கிடமின் ருதலால் ஒருவரை ஒருவர் வழக்காற் சாதிக்கப் புகுவானேன்? இவ்வழக்காற் பயனின்றே விட்டுவிடலாமே? விட்டுவிடினும் பொ ருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளும் பிராந்தி ரூபமாகிய துன்பப்பெருக்கு எம்மைவிட் டகலுமோ? ஒருக்காலு மகலாதுபற்றி யிவ்வழக்குக் கட்டமாயினு மவசியஞ் செய்யவேண்டு மென்பதை நீயே கண்டுணர்க. எ-று.

ஞா-வி— திருக்குத் திரிசிய மென்பவற்றுள்; யாதால் விளை ந்ததோ விவ்விருவழக்குமெனின்?

ஆ-விடை— அறிவை யன்றி யறியாமையும், அறியாமை யன்றி யறிபடு பொருளு மின்மையால் அவாந்தரப் பொருளதாகிய அறியா மைபற்றி விளைந்த தென வறிக.

ஞா-வி— அறியாமைக்கோ ரடையாளங் கூறவேண்டு மெ னின்?

ஆ-விடை— ஒன்றை யொன்று யறிவது. அது; பழுதையைப் பாம்பென் றறிவது போல்வன.

ஞா-வி— இங்ஙன மறிவது மறிவன்றோ வெனின்?

ஆ-விடை— அறிவாயினு முண்மையை யறிவ தன்றாமையின் அறியாமை யெனப்பட்டது.

ஞா-வி— ஆயி னிவ்விருவா தறிவுங் கல்விஞானத்திற் சிறப் புற்றதன்றோ, இதனையு மறியாமை யென்னலாமா?

ஆ-விடை— கற்பனை கடவாததாற் சிறந்ததன்று.

ஞா-வி— கற்பனை யாவ தியாது?

ஆ-விடை— பழுதை பாம்புபோற் றோற்றல் முதலியன.

ஞா-வி— ஆயின், கல்வி, யுணர்த்து ஞான முண்மை ஞான மன்றோ?

ஆ-விடை— உணர்த்துமாயின் கற்பிதங் கழலாரா? கழலாரா தலி னுண்மை ஞானமன்று.

ஞா-வி— உண்மை ஞானமாவ தியாதோ?

ஆ-விடை— காரண காரியவாத முதலிய ஐந்தபேத வாதத்தா னும்; விருத்தி-பரிணாமம் - ஆரம்பம் - உற்பத்தி - விவர்த்தம் - என்னு மைந்து திருஷ்டாந்தத்தானும் ஐயந் திரிபின்றிச் சுருதி யுத்தி யனு பவத்தக் கொத்துத் தெளிவதே யுண்மை ஞான மெனப்படும்.

ஞா-வினா— இவ்விருவரு முண்மை ஞானமுடைய ரல்லரென வெங்ஙனம் விளங்கும்?

ஆ-விடை— உயிர்களாகிய வறிவு சத்தெனக் கணித்தற்கும்; உதாரணந் தக்க திதுவெனத்தரற்கும்; தன்னை விலட்சணமாகவுஞ் சலட்சணமாகவு மனுபவித்தற்குங் கிஞ்சித்துந் திறமையில்லா ததி னாலென வுணர்க.

ஞா-வினா— இவ்விருவர் வழக்கிங்ஙனமிருக்க; வேதமாதாவும் இவ் விருவாதத்திற்குஞ் சம்மதித்த தென்னை?

ஆ-விடை—"தானலாதொன்றுதன்னைத்தானெனக்கருதிக்கொ ண்டே, யானெலாஞ்செய்தேனென்னும்" அகங்காரநிலையல்லாததா லதனைத் தவிர்க்கவேண்டித் தனுகரண புவனபோகவாய்ப்பு நமதிய ற்றலாலன்றே; வேறொருவன்பாலதாதலின், அவனையன்றி யெமக் கோர் சுதந்தரமின் றாதலால், யாமடிமை பூண்டு அவனைப் பூசிக்கவே ண்டுமென்றும், எமதெண்ணங்களை முடிப்பித்துக்கொள்ள வேண்டு மென்றும் பிரதிவாதிப்பது முறையாதலால் அதனை ஆஸ்திகமென வும்; தன்னைத்தானுணர்ந்து தானேதானாதல் ஐக்கியமுத்தியாதலால் அந்நிலை வருதற்குத் தந்திரமாக ஏற்படுத்திய படித்துறைகளில் இது முதலென வறியாது இதுவே முத்திநிலைக் கடுத்த படித்துறையென மயங்கிய மயக்கந்தவிர்ந்து மேலேமேலே, பற்றற்கு இந்நிலையெல்லா மெய்யெனவும்; அல்ல அல்ல வெனவுஞ் சொல்லி யழைத்துக்கொ ண்டுபோய் அந்தத்திற் றன்னைவிளக்கி யுன்னையன்றி யற்பமுமில்லை யென முடிக்குமாதலின் அதுபற்றிச் சீவேசரில்லையெனப் பிரதிவா திப்பது முறையாதலால் அதனை நாஸ்திகமெனவுங் கூறுப. இதன்றி யும், பொருளல்லதைச் சீவேசரெனக் கொண்டவருண்டெனக் கோ டல் விபரீதமாதலானும், அம்மயக்கந் தெளியாவளவும் துக்கமே சுகமாகத் தோற்றிப் பிறவிப் பெருங்கடலி லாழ்த்து மாதலானும், அதனையகற்றித் தெளிவிக்கவேண்டிச் சீவேசரில்லையெனவும்; இரு ந்தாற் காணப்படாரா வெனவுங் கருணைபற்றிக் கூறவந்ததேயன்றி வேறன்றென வுணர்க.

ஞா-வினு— சிவேசருண்டெனக் கூறி யழைத்துக்கொண்டுபோவது முத்திநெறிக் கியைந்த முறையோ, அவரில்லையெனக் கூவி யழைத்துக் கொண்டு போகாதது முத்திநெறிக் கியைந்த முறையோ கருணைபற்றிக் கூறவந்ததெனின்?

ஆ-விடை— உண்டெனி னஃதோர் மேலான விநோதமென்றி யற்றிக் களிப்பரன்றிச் சோதனையாற்றெளிந்து ஏகமாகார். இதனை யில்லை யென்பமே யெனின், பயபத்திக் கிடமின்றாயும் - வைதீக நடையேற்றற்கும், அனுட்டித்தற்கு மிடமின்றாயும்; அகங்கார மடங்கற் கிடமின்றாயும் பட்டிமாடுபோற் கட்டுக்கடங்காதுயிர்கள் அழிவ ரென்னு நோக்கல் இருமையுங் கூறற்கியைந்தது கருணைபற்றியன்றே, அல்லவென வெஃகனமறுக்கப் படுமெனவறிக.

ந - வது.

ஆஸ்திகநாஸ்திகமின்றி யமையாமை

முற்றிற்று.

---







திருச்சிற்றம்பலம்.
சிவமயம்.

ச - வது.

இனி

# அவாந்தரவாதம்.



ஞா-வி௫— அவாந்தரவாத மாவதென்னே?

**அவா-விடை—** ஆஸ்திகம்-நாஸ்திகம் - துவிதம்-விசிட்டாத்துவிதம்-அத்துவிதமென்னும் வாதங்களி லொன்றன்பாலு மாகாமல், கோழி கோழி-என்னவிலே - யென்னவிலே யென்றாற்போல வாதிக்கும் வாதமெனவறிக.

ஞா-வி௫— இதுபோல வாதிக்கும் விபரம் யாதெனின்?

**அவா-விடை—** யாமெந்தக்கட்சியுமாகாமல் அவரவர் கட்சியை மறுப்பதே யெமது மதமென்பர். ஆயினும் உமக்குடன்பாடுதான் யாதோ வெனின்? அதுகேட்பானேன் பேசுமென்பர். நம்மைப் போல் மற்றவரையும் பார்க்கவேண்டு மெனின், எதிலேயென்பர். துயரத்துக் கிடமில்லாததி லெனின், துயரமாவ தென்னெனன்பர். சுக விழப்பெனின், சுகமாவதும் இழப்பாவதும் என்னெனன்பர். சுகமாவது மனமலேவின்றி நிற்றலெனின், மனமாவதென்னெனன்பர். ஸ்மரணேரூபமெனின், ஸ்மரணேரூபம் யாதென்பர். உன்னுடைய நினேவெனின், என்னுடைய நினேவாவ தெதுவென்பர். இப்போது பேசுகிறது உன்னுடைய நினேவல்லவா வெனின், என்னுடைய தென்பதென்னெனன்பர். நீயாகிற வஸ்துவெனின், நானுகிறவஸ்து யாதென்பர். அறிவெனின், அறிவென்ற தென்னெனன்பர். அறியுந் தர்மத்தையுடையதெனின், அறியுந்தர்மம் யாதென்பர். எம்மைக்கேட்கப் புகுந்தீரே யறிந்துதானே யதுதானெனின், அதுதானென்ற தென்னெனன்பர். இப்படியே தொலேயாவழக்கா முடிந்து எடுத்தநிலே நிறைவுபெருது கலேப்பதெனவறிக.

ஞா-வி௫— இப்படியாஞ லிப்படியென் றனந்தமதக் கட்சிகளாகிய விஷய நிச்சயங்களே யெட்டுகிறதும், பூர்வபட்சம் - சித்தாந்தமென்னு மிரண்டனுள் ஒன்றன்பால தாக்கலு மெங்ஙனம் வாய்க்கும். வாய்க்காவிடத்தென்ன சிறப்பெனின்?

அவா-விடை— "இன்னவிதக் கேள்வியினு லென்னபய னென்னுதே, என்னவிதக்கேள்வியு மெம்மதே-அன்னவற்றிற், கானவிடை நும்மதே யார்வெல்வா ரெங்கட்சி, ஈனமுறு மோவென்ப ரிங்கு." எ-து. இன்னவிதமாயுள்ள கேள்வியாலாயபயன் யாதென் றசட்டை செய்து மறுக்காதே, எந்தவிதமாகக் கேட்கப்படுங் கேள்விகளனைத்து மெமது பட்சத்ததே, அவ்வினுவுகளுக் கெல்லாம் விடைதரத் தக்ககட்சி யுமது சுதந்தரத்ததே, எமது கட்சியை வெல்லத்தக்கவரார், வினுவத்தக்கார் விடைதரவும், விடைதரத்தக்கார் வினுவவுந்தக்க வவசரம் வரும், இங்ஙனமிருக்க; வினுவுவதே யெமது கட்சியென்பதென்ன சிறந்த விவேகமென் றிழிவுவருமேயெனின், இதினு லெமக்கென்ன, இழிவுவந்தால் இங்கே யெம்மை யென்ன செய்யும் என்று சொல்லுவார்கள்.

ஞா-வி— யாது பயன்கருதி யிங்ஙனம் வினுவத்துணிவதோ வெனின்?

அவா-விடை— கைகொட்டிப் பழிக்க வேண்டியென வறிக.

ஞா-வி— இதனுல்வரும் பய னிவர்களுக்கு யாதெனின்?

அவா-விடை— கொஞ்சநேரமாவது சிரித்துச் சுகமுறுவதற் கெனவுணர்க.

ஞா-வி— வேறுகாரணத்தா லிச்சுகமடைதற் கினரோ வெனின்?

அவா-விடை— ஈனர்ல்லராயினிங்ஙனம் புரிவார்களா, இவர்கள் யோக்கியப் போக்கிரிகளெனப் பிறர் நம்மை யெண்ணுவார்களேயென்ற யோசனையும் நாணமுஞ் சிறிது மில்லாதவர்களென வறிக.

ஞா-வி— இவர்கள் பாஷைகளிலேனுஞ் சிறந்தவர்க ளன்றோ? இவர்கள் வாசிக்குங்காலத்தில் பொருள்கொடுத்தும், உபாத்தியாயருக்குக் கீழ்ப்படிந்துந் தானே அர்த்தங் கேட்கவேண்டியது. கொடுக்கக் கெதியற்றகாலத்திற் றெண்டுசெய்தாவது கேட்கவேண்டியது. அதுவுமின்றிக் கேட்கிறதென்று லதிகாரத்தினு லாகவேண்டும். அதுவுமில்லாவிடத்திற் கேட்கிறது சொல்லுமே பார்ப்போமுமது வல்லமையையென் றுகவேண்டும். இவைகளிற் கடைசியிற் சொன்னவாறு கேட்கத்துணிவது, உத்தமர் - மத்திமர் - அதமர்களி லதமரன்றோ வெனின்?

அவா-விடை—அங்ஙன நீங்க ளெண்ணிக்கொள்வதா லெமக்கு நட்ட மென்ன வென்பார், அவர்களுக் கீதோர் விநோதமென வறிக.

**ஞா-வி**— நல்லது; வினவுக்குரிய வுண்மை யர்த்தத்தைச் சொன்னவிடத்திலாவது அறிந்து அடங்குவ துண்டாவெனின்?

**அவா-விடை**—நீ கெட்டா-நீ கெட்டா என்ற வனுபூதியார்த்தம் விளைவளவும், அவர்களுக்குத் திருத்தியுமில்லை - வாயுமடங்காரென வறிக.

**ஞா-வி**— இவ்வாறுன மானங்கெட்ட வாதிகளு முளரோ வெனின்?

**அவா-விடை**— மிகுதியுமென வறிக.

**ஞா-வி**— இவர்க ளெதிற் சிறந்தவர்களெனின்?

**அவா-விடை**— தெளிவைக் கலக்கிக் குடிக்கு மெருமைபோலும், சலமின்றிச் சந்தனமுரைப்பவர் போலும், பயனின்றியசொல் வழக்கிற் சிறந்தவரென வறிக.

**ஞா-வி**— இது ஒரு பரம்பரையோ வெனின்?

**அவா-விடை**— தான்தோன்றித் தறுதலைப் பரம்பரை யென வறிக.

**ஞா-வி**— அறிவை மழுக்கத்தக்க சாலவித்தையிற் சிறந்தவராமே யெனின்?

**அவா-விடை**— இருந்தாலிருக்கட்டும்; வஸ்து நிர்ணயவுண்மை யென்ன தெரியும், தெரிந்தவர்போல் வாதிப்பதி லென்ன வுண்டு. ஆனல், வரம்புகடந்து வாதிக்கு முறைமையி லிவர்போல் சிறந்த அவிவேகிக ளில்லையெனவறிக.

**ஞா-வி**— பயனின்றிய இவ்வாதிகளைப் பற்றி யிங்கே கூறுவானேன்?

**அவா-விடை**— இனையரெனத் தெரிந்தவிடத் தகற்றவேண்டுதலைப் பற்றியென வறிக.

சா - வது, அவாந்தரவாதம்

முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.
சிவமயம்.

ரு - வது.

# துவிதவாதம்.

சாமானியசம்பாஷணை.

துவிதம்-விசிட்டாத்துவிதம் - அத்துவிதம்-என்னும், இம்மூன்றும் தத்துவமசியென்னும் மகாவாக்கியங் காரணமாகப் பிரதிவாதிக்கப் பட்டது.

இம்மூன்றனுள்; துவிதமாவது.

**ஞாயவாதி-வினா—** தத்துவ மசியென்னும் வாக்கியம், ததிவா-துவம்-தத்துவம்-எனப் பிரித்தற்கும் பரத்தைப்போனீயானா யென ப்பொருள் கோடற்கும் இடங் கொடுத்தற் கேதென்னை?

**துவிதி-விடை** இங்ஙன மனுபவ மிருத்தல் பற்றி யென்க.

**ஞா-வினா—** அஃதியாதெனின்?

**து-விடை—** உயிர்கள் தம்மா லிம்மையி லியற்றி யடைதற்கரிய தனுகரண புவன போகங்களைத் தமக்குக் கொடுப்பித்துப் புசிப்பித்துத் தொலைப்பித்து வரு முயற்சிக்குக் கர்த்தா வேறொன்றாக வேண்டும். ஆதலின், இவற்றைத்தக்கவாறிடுவோன் பகவானும்; ஏற்றனுபவிப்போன் சீவனுமெனத் தானே யருத்தாபத்தியா லமைதலின் இவனவ னாகா னவ னிவ னாகா னெனக் குறிக்கவியைய நின்றதென வறிக.

**ஞா-வினா—** தனுகரண புவன போகங்க ளுயிர்க ளாமோ வெனின்?

**து-விடை—** அன்னிய மாதலின் ஆகாவெனக் கொள்க.

**ஞா-வினா—** நிலை யல்லாத தன்றோ அன்னியம் பெறுதற் கேதென்னை?

**து-விடை—** சுகப்பேறுக்கென்க.

**ஞா-வினா—** இந்நான்குஞ் சுகவடிவாமா?

**து-விடை—** தனுகரண மிரண்டுங் கர்த்தத்துவ சாதனக் கருவியாயும், ஏனைய விரண்டுஞ் சுகசாதனக்கருவியாயு மிருக்கு மன்றிச் சுகவடி வாகா வென்க.

ஞா-வி௲— இங்ஙன மிருக்கச் சுவடிவாகக் கொள்ளற் கேதென்னை?

து-விடை— அறியாமையாலென்க.

ஞா-வி௲— மேலாய பதவிப்பயனு மன்னிய மன்றோ வெனின்?

து-விடை— பரமன்னியமாதலிற் பயனும் அன்னியமாமென்க.

ஞா-வி௲— விடையமும் பரமு மன்னியமா யிருத்தலி னிவை யுயிர்களினது சற்கரும துற்கருமங்களுக் கேற்றவாறியையு மன்றோ, இவற்றா ளவையு நிலையல்லவே யெனின்?

து-விடை— நிலை யாகா வென வறிக.

ஞா-வி௲— ஆயின் எம்மதத்தர் வேதங்களும் பரமானந்த வாழ்வை யழியாதெனக் கூறுவ தென்னை?

து-விடை— விடையானந்தவாழ்வும், பரமானந்தவாழ்வுமென் றுமிருந்தவண்ண மிருக்கும். இவற்றை யடையு முயிர்க்கு நிலையாமை சொல்லவந்ததே யன்றி யவற்றிற் கன்றெனக் குறித்தென்க.

ஞா-வி௲— எங்ஙன மெனின்?

து-விடை— சிற்றின்ப நுகர்தற்கண் பேரின்பமின்மையும், பேரின்ப நுகர்தற்கண் சிற்றின்ப மின்மையு மனுபவமாதலி னென்க.

ஞா-வி௲— பேரின்ப வாழ்வெனச் சிறப்புற்ற தென்னை யெனின்?

து-விடை— விறகுதலையன் வாழ்வினுஞ் சக்ரவர்த்தி வாழ்வு சிறப்புற்றாற்போலு மெனவறிக.

ஞா-வி௲— இவ்விரண்டு வாழ்வு முயிர்களுக்கு நிலையாததற் கேதென்னை?

து-விடை— காமியம், நிட்காமிய மென்னுந் தவமுயற்சியின் வலிகட்களவா விவ்விருபலனு நிலைக்குமாதலி னென்க.

ஞா-வி௲— இவ்விருபலனும் வேலைக்குக் கூலிபோலமையுமன்றோ, உயிர்களுக் கொழிவுதா னென்றோவெனின்?

து-விடை— அதையதை யனுபவிக்கு மவசரத்தில் அப்போதப் போது ஒழிவாக் காண்டலே யொழிவன்றி வேறொழி வின்றென வறிக.

ஞா-வி௵— இதனாற் பரத்திற்கு மவரவர்க்கேற்ற தவவுறுதிக் களவாப் பந்த பேதங்களையு முத்திபேதங்களையும் ஓயாது தரவேண்டுமாதலின் ஓய்வின்றாக வமையுமேயெனின்?

து-விடை— மெய்யே-ஆக்ஞா சக்கரத்துக் காளுகையன்றிச் சக்ரவர்த்தி யொழிவுக்கிடையூறின்றாதல் போலாமென்க.

ஞா-வி௵— மனதுக்கேனு மின்றேவெனின்?

து-விடை— காந்தசன்னிதியி லிரும்பு சேட்டிப்பதற்குச் செய்கையுஞ் செய்விக்கையு மற்றுநின்றகாந்தம்போலு நிற்றலிற் சலனமின்றென வறிக.

ஞா-வி௵— பஞ்சகிருத்தியத்திற்கும் அவரைக் கர்த்தா வென்பானேன்?

து-விடை— அவர்சன்னிதியி னடிப்பதைப்பற்றி யென்க.

ஞா-வி௵— சடரூபமாகிய அண்டநிரை பல்லாண்ட கோடிகளும், பற்பல பதவி பேதங்களு மிவற்றிலடைந்து தத்தந் தவத்தளவுக்கேற்றவாறு சுகபோகங்களை நுகர்தற்கே அங்காந்துழலுஞ் சித்துரூபமாகிய பற்பலபேதமாயுள்ள எழுவகைத்தோற்ற வுயிர்களும், படைக்கப் பட்டனவன்றோ இவற்றையும் பரத்தோடொக்க அநாதிநித்திய மென்பானேன்?

து-விடை— அதனாற்றோட மென்னை.

ஞா-வி௵— அவர் சன்னிதியி லிவை நடிப்பதெனக் கூறுதொழியவேண்டுங்; கூறில் அநாதி நித்திய மவற்றிற்கு வரக் குற்றமன்றோவெனின்?

து-விடை— அவரது படைப்பெனின் இவற்றிற்குத் தாரதம்மியபேதமும், தனுவாதிபோகசாதனபேதமும் அநாதியில் வருதற்கு ஏதென்னையென வரும்; வருவதைப்பற்றி, அவர் சன்னிதி நடிப்பெனிற் சுபாவமாகமுடியும்; முடியுமா யின்படைப்பாதியெனல் பயனின்றாம்; பயினின்றாயின் விதி நிடேதம் வேண்டற்பாலதன்றாம், அன்றாயின் உயர்வுதாழ்வா யிம்மையில் எவ்வுயிரு மிருப்பானேன்; இருத்தலிற்படைப்பெனின் அநாதியில் ஏனெனவரும்; அநாதியெனிற் சீவேஸ்வரர்கட்குச் சமத்துவம் வரும், சுபாவமெனிற் செனனமரண சுகதுக்கங்கட்கு விமோசன மின்றெனவரும், இவை சீவர்கள் முயற்சியாலெனின் இது எது முதற்கொண்டெனவரும், வருவதைப்பற்றி

மிருகங்களைப்போ லிருக்கின் அரசாக்கினையாற் றுன்ப நேரிடுவது இம்மையிற் சத்தியமாக்காண்டலின் மறுமையினும், அவ்வரசாக்கினையாற் றுன்பம் நேரிடுமாகலின் இப்பகுப்பெல்லாம் உன்னுதவர்க்கு அடிமை பூண்டு பயபத்தியிற் கட்டுண்டொழுகுவதே நமக்குக் கடமை யென வறிக.

ஞா-வி௫— இத்தாரதம்மிய பேதமாயமைத்த லவர்க்கு முறையோ வெனின்?

து-விடை— அவரதிட்டமென்க.

ஞா-வி௫—இட்டமாயி னுயிர்களுந் தமதிட்டப்பிரகார நடக்க வேண்டுமே யெனவரும், வரின் விதி நிடேதக்கிரமங்கள் யாதுக்கெனவரும், வருதலின் ஆண்டானடிமையெனக் கோடற்பாலதெங்ஙனமெனின்?

து-விடை— அவனிடுவதை யேற் றுண்பதைப்பற்றி யென்க.

ஞா-வி௫—சுகதுக்கந் தருவது அவரிட்டமாயின் விதிவிலக்கை யனுட்டித்தலால் நமக்குப் பயனென்னை?

து-விடை— நமது வினைப்படி நடப்பிப்பது அவரிட்டமாகலின் விதிவிலக்கை யனுட்டிப்பதே நமக்குக் கடமையாமென்க.

ஞா-வி௫— அனுதியில் வினைவருவானேன்?

து-விடை— அங்ஙன முன்னின் நாங்கெடுவமாதலின் ஆண்டானடிமைத்திறம் பூண்பதே நமது சுகப்பேறுக் குறுதியாமென்க.

ஞா-வி௫— அச்சுகப்பேறுவது யாது?

து-விடை— யாதனு வடிவமாகிநின்று பரமானந்தமயமாதல்.

ஞா-வி௫— அந்நிலை இந்நிலைக்க ணில்லாமையால் விடையானந்தம்போல மாறுதென்றற்கு என்னவுறுதியெனின்?

து-விடை— சுருதிப்பிரமாணமே யுறுதியாமென்க.

ஞா-வி௫— யுத்திக்குமாறுன சுருதியாகவேண்டுமே யெனின்?

து-விடை— பகவான் வாக்கியமன்றே அங்ஙனங் கூறக்கூடாதென்க.

ஞா-வி௫— "ஊகமுளதேற் சிறுவருரையுங்கொள்க ஒழிந்த தயனுரைத்திடினுந் திரணமொப்ப வேகவிடுவா" யெனச்சான்றோர் வசன மிருப்பானேன்?

து-விடை— கிஞ்சிக்ஞருக் குத்திக்கொவ்வாதாயினுஞ் சர்வக்ஞரது வாக்கியம் வேதமன்ருே, இஃதென்ன மடமையென்க.

ஞா-வினு— விதி நிஷேதம் சித்தார்த்த போதகமென மூன்ருக வேதம் விதித்த முறையெல்லாம் ஞாயமயமா யிருப்பானேன்?

து-விடை— அவர் சமஸ்த்தத்தையு முதலிற் படைப்பதற்கே தென்னேயென வருஞ் சங்கைக்கு ஞாயமுண்டோ, ஆதலில் யுத்திக் கொவ்வாத அவசரவாக்கியமு முண்டென வறிக.

ஞா-வினு— ஆனந்தவகை யிரண்டினுஞ் சுதந்தரமில்லாதது உயிர்களன்ருே இவ்விரண்டினுந் தாக்கற்றுச் சும்மாவிருக்கு நிலேயா தோ வெனின்?

து-விடை— அங்ஙனங்கேட்கிற் சங்கரரது ஆபாச சித்தாந்த நிலேக்கட் செலுத்தி யழிக்கும்; ஆதலின் விவர்த்த கேள்விகளே விட்டுப் பத்திபூண்டொழுகுவதே சகலமத சம்மதமென வறிக.

ஞா-வினு—இதனுற்சீவர்களும், அவர்கள் அவாவுவது பாசமும் அவற்றைத் தக்கவாறு அளிப்போன் பகவானுமெனத் திரிபதார்த்தம் உண்டெனவாயிற்று. ஆகவே, ஒவ்வொன்றும் பின்னமோ அபின்னமோவென்று ஐயமுறுவதே யெனின்?

து-விடை— பின்னமேயெனவறிக.

ஞா-வினு— அஷ்டமூர்த்தமாயிருப்பது பரமென்பானேன்?

து-விடை— இவ்வெட்டினது ஆனிவிருத்தி பரத்துக் கில்லாமையாற் பின்னமேயென வறிக.

ஞா-வினு— இதுநிற்க; இனி வாக்கியார்த்தங்காரணமாகப் பதி பசு பாசத்தை வைப்புறுத்துமா றெங்ஙனமெனின்?

து-விடை— முறையே கூறுதும்.

சாமானியசம்பாஷணே

முற்றிற்று.

---

## விசேஷண சம்பாஷணை.

ஞா-வின— தத்-என்பதை - ததிவாயெனக் கோடற்பால தெங்ஙனமெனின்?

து-விடை— மதிமுக மென்னு மிடத்து மதி யென்பதை மதி போலவெனக் கொண்டாற்போலு மென வறிக.

ஞா-வின— ததிவா-துவம்-என்றது தத்துவ மென்ற தென்னை யெனின்?

து-விடை— மதிபோல முகமென்றது மதிமுக மென்றாற்போலுமாமென்க.

ஞா-வின— இங்ஙனம் வருந்திப் பொருள் கோடற்பாலது யாதுக்கெனின்?

து-விடை— பரசீவர்க்கு ஐக்கிய நிவிர்த்திக்கென்க.

ஞா-வின— ஆயின் பரசீவபேத விலக்கணம் யாதெனின்?

து-விடை— இருவர்க்கும் உபாதியில் ஆகாயமு மணுவும் போலும், உணர்வில் சூரியனும், மின்மினியும் போலும், சேட்டையில் அரசனும் எறும்பும் போலுமாமென்க.

ஞா-வின— எங்ஙனமெனின்?

து-விடை— அண்டாண்ட கோடிக ளனைத்தும் பரனுக்கும், பிண்டவடிவமாத்திரஞ் சீவனுக்கும், உபாதிபேதமெனவும்; பரனுக்குச் சமஷ்டிகாரண சரீரமுஞ், சீவனுக்கு வியஷ்டிகாரிய சரீரமும், உடல் பேதமெனவும்; பரனுக் கங்கிங் கெனாதபடி யெங்கு நிறைந்திருத்தலின் எவற்றிற்கு மாதாரமும், பிண்ட வுடலுக் கேற்றவிடமாதலிற் சீவனுக் கேகதேசமும், இடபேதமெனவும்; இதனினுமில்லை மேலென்பது தோன்றப் பரமெனலும், இதனினு மில்லை கீழென்பது தோன்றச் சீவனெனலும், பெயர் பேதமெனவும்; சர்வக்ஞத்துவம், சர்வேந்திரியாமித்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வாத்மகத்துவம், சர்வ சக்தியத்துவ முதலியவை பரத்துக்கும், சர்வமெனற்குப்பதிலாக ஏகதேச மென்பதைக் கொடுத்து முன்சொன்ன குணங்களைக்கொள்ளல்; சீவனுக்கும் உணர்வு பேத மெனவும், சமஸ்தலோக வதிகாரத்துவம் பரத்துக்கும், ஏகதேச வதிகாரத்துவஞ் சீவனுக்கு மாதலிற் கர்த்தத்துவ பேத மெனவும்;

கொள்ளக் கிடந்தமையி னிவர் பேத நிவிர்த்திக் கென்று மிடமின் றென வறிக.

ஞா-வி௫—மெய்யே; சர்வக்ஞாதி குணங்க ளென்றீரே அவை களி னருத்தமென்ன?

து-விடை— சர்வாத்மாக்களின் உள்ளமறிவது சர்வக்ஞத்துவ மும், சமஸ்தத்திற்கு முள்ளீடாயிருப்பது சர்வேந்திரியாமித்துவ மும், இனிமேலென்ப தொன்றுமின்றி நிற்றலெனக்கொள்வது சர் வேஸ்வரத்துவமும், எவற்றுள்ளுஞ் சமத்துவமாயிருப்பது சர்வநிய ந்திரத்துவமும், சர்வாத்மாக்களாய்த் தான் விளங்குவது சர்வாத்மக த்துவமும், சமஸ்த வல்லபமுந் தன்னையன்றி நிற்பது சர்வசக்திய த்துவமும் எனக்கொள்க.

ஞா-வி௫— இனிப் பாசமாவ தென்னை?

து-விடை— பசுக்களைப் பந்தப்படுத்துவது பாசமென வறிக.

ஞா-வி௫—அஃதியாது?

து-விடை— சத்த பரிச ரூப ரச கந்த முதலியன.

ஞா-வி௫— உயிர்களுக்கு அவாவற்றவிடத்து அவ்வுயிர்களைப் பந்தப்படுத்துமோ?

து-விடை— பந்தப்படுத்தல் அதற் கியல்பே யென வறிக.

ஞா-வி௫— அஃதெங்ஙனமெனின்?

து-விடை— உயிர்களுக்கு உலகம் புலப்படாத சாக்ராவஸ்தை யும், அச்சாக்ராவஸ்தையில்லாத வுயிர்களுமில்லை, உண்டேலருமை. அவர்களும் பகிர்முக திருஷ்டிக் கிடங்கொடாத காரணம் பந்தத்தை விளைவித்து அழுத்துமென்றற்கன்றோ? ஆதலின், உலகிற்கியல்பே யென வறிக.

ஞா-வி௫— சத்தமுதலிய ஐந்துவிடயமுஞ் சுகசாதனக் கரு வியன்றிச் சுகவடிவன்றே உயிர்களைப் பந்தப்படுத்தற் கேதென்னை?

து-விடை— உயிர்களிங்ஙனங் கருதவறியாததாற் சுகவடிவாத் தோற்றிப் பந்தப்படுத்து மென்க.

ஞா-வி௫— இப்பாசங் கட்கு முடிவின்றோ?

து-விடை— ஆதியுண்டாயின் அந்தமுமுண்டாம் இல்லவே யில்லை யெனவறிக.

ஞா-வினா— இல்லையாயின் முத்தியடைந்தன ரென்பது வெறுஞ்சொல்லோ?

து-விடை— அடைதலும் விலகலு முயிர்களின் தர்மமேயல்லாமல் பந்தமுத்திக்கல்ல. ஆதலின் கால வரையறை இன்றெனவறிக.

ஞா-வினா— ஆயின் அடைதலும் விடுதலுமாகிய இவ்விரண்டு தர்மமும் ஒழிவுக் கிடமின்றென முன்னரே சொன்னீர். அடைதற்கும் விடுதற்கும் காலவரையறை யின்றோ வெனின்?

து-விடை— உயிர்களுக் குண்டானா லன்றோ அவற்றிற்குண்டென்பம் இல்லவே இல்லையென்க.

ஞா-வினா— கால வரையறை யின்றியது பசுபாச மெனவே, அப்பசுக்களுக்கு வேண்டியவற்றை யவரவர் வினைக் களவாகக்கொடுப்பித்துப் பொசிப்பித்துத் தொலைப்பிக்குங் கர்த்தாவுக்குங் கால வரையறை யின்றாயமையும். இதனாற் பதிபசுபாசங்கட்குச் சமத்துவம் வருமே, வருவதாற் பதிபோல நீயானா யெனக் கொண்டதோ வெனின்?

து-விடை— சுபாவத்துக்குச் சிரவணாதி முயற்சியேன், அங்ஙனமன்று; தற்போதங் கழன்ற விடத்தெனக் குறித்தற் கென்க.

ஞா-வினா—இங்கே தற்போதமாவதியாது?

து-விடை— தானலா தொன்றைத் தானெனக்கோடல்.

ஞா-வினா— இதுகழன்ற விடத்துத் தானெதுவாதலோவெனின்?

து-விடை— பரத்தினது அருள் வடிவாதலென வறிக.

ஞா-வினா— ஆனாற் பரத்தை யன்றி அருளில்லாமையாற் பரமே நீ நீயே பரமெனலாகாதோ?

து-விடை— அரசனது அருள்பெற்றோர் அரசனைப்போலாவரன்றி அரசனாகார், அதுபோலப் பரமாகார் என வறிக.

ஞா-வினா— எதைத் தானலா வுடம்பென்றது?

து-விடை— தூலவுடலெனில், தினப்பிரளயத்தே னுஞ், சலப்பிரளயத்தேனு மழியும். இதனால் முத்தியடைந்தனரெனப் பிரமாணம் யாதொன்றினு மில்லை. இருக்கின்றதெனிற் பொருளல்லவற்

றைப் பொருளெனக் கொள்ளு மனமாகிய சூட்சுமதேகம் இறக்க வில்லை, இறக்காததனுல் அது முத்தியன்று. மனநாசமே முத்தி யாமெனின் சர்வ சங்கார காலத்தில் மனமாகிய எல்லாச் சூட்சும தேகங்களு நாசமாகும், அப்போதாவது ஆத்மாக்கள் முத்தியடைந் தனரென்றற்கு யாதொரு பிரமாணமுமில்லை. இருக்கின்றதெனிற் பொருளல்லவற்றைப் பொருளெனக்கொள்ளு மனதினது மூடத் தன்மாகிய அஞ்ஞானத்துக் கழிவில்லாமையால் அது முத்தியன்று. ஆதலின், காரண தேகமாகிய அஞ்ஞானத்தையே இங்கே உடம் பென்றதெனவறிக.

ஞா-வினு— சமஷ்டி தூல சூக்கும காரணவுடல் ஈசனுக்கெனக் கொள்ளவேண்டியதின்றே?

து-விடை— எதினுலே யங்ஙனங் கொள்வது.

ஞா-வினு— வியஷ்டி சரீரத்திரயஞ் சொன்னதினுல் இங்ஙனங் கொள்ளற்பாலதன்றே?

து-விடை— கொள்ளற்பாலதே; பத்திநெறி வழிப்பூண்டொழு குவோர்க் கிவ்விசாரத்தாற் பயனின்றென வறிக.

ஞா-வினு— சீவேஸ்வரநிலை யின்னதெனத் தெரியாதெங்ஙனந் தொழுவது? உபாதித்திரயத்தையன்றி நம்மை நாங் காணும், பரத் தையு மிவ்வாறுதானே கருதிப் பூசிக்க வேண்டிவரும் இது மூடத் தனமன்றே?

து-விடை— அங்ஙனஞ்சொல்லிற் கெடுவை. பசிதாக மேலீட் டில் அன்னபான சோதனை செய்வ துண்டோ, காம மேலீட்டில் வர்ணுசிரமத்தடை கருதுவதுண்டோ, அதுபோல மறுவைக் கென் செய்வோ மென்னுந் திகி லுண்மையா யுதிக்கி லகம்பாவமனைத்தும் ஈஸ்வரார்ப்பணம் பண்ணுவதை விட்டு ஆராய்ச்சியிற் காலங்கழி க்கவருமோ, விதிமார்க்கத்திலேனும் பத்திமார்க்கத்திலேனு மடிமை பூண்டொழுகல் நமது கடமை யெனவறிக.

ஞா-வினு— ஆனுல் இம்மயக்க விமோசனகாலமின்றே?

து-விடை— ஈசுவரார்ப்பண மேலீட்டினெ வறிக.

ஞா-வினு— ஈஸ்வரார்ப்பணஞ் செய்தல் யாது கருதியெனின்?

து-விடை— சுதந்தர வீனத்துக்கென்க.

ஞா-வினு— தவக்கருத்தன்றே பின்னர் பலனு யமையு மெ னின்?

**து-விடை—** ஆமெனவறிக.

**ஞா-வின—** இம் மயக்கந் தீரச்செய்த தவமன்றே; எங்ஙனங் கெடுமெனின்?

**து-விடை—** அவ்வீஸ்வராற் பணமே இம்மயக்க விமோசனத்தையுந் தருமென வறிக.

**ஞா-வின—** ஆனால் ஞானகாண்ட மென வொன்று விதிப்பானேன்; சரியை கிரியை யோகஞான மெனக் கடையில் பூர்வபட்சத்துக் கிடமின்றெனக் குறிக்க ஞானத்தைக் கூறுவானேன்?

**து-விடை—** பதி-பசு-பாச வாராய்ச்சி செய்யு ஞானத்தினுலே தானே பதி பசு பாசமென்னுந் திரிபதார்த்தமும் அநாதி நித்திய மெனக்கொண்டாம். ஆதலின் ஞானமே முக்கிய மென்றது எமக்கு முடன்பாடெனவறிக.

**ஞா-வின—** ஆஸ்திகத் தலைவரி லொருவர் "இன்றெனக் கருளி யிருள் கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று, நின்ற நின் றன்மை நினைவற நினைந்தே னீயலாற் பிறிது மற்றில்லேன், சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றுந் திருப்பெருந்துறை யுறை சிவனே, ஒன்றுநீயல்லை யன்றியொன்றில்லை யாருன்னை யறியகிற்பாரே" என்றருளிய விக்கயில்-தொண்ணூற்ருறு தத்துவங்களிலொன்றும் நீயல்லை யெனின் உன்னைத்தவிர அவைகள் வேருக வேண்டுமே; யங்ஙனம் பார்க்கி லுன்னையன்றி யோரணுவு மில்லாததால் உன்னையன்றி யொன்று மில்லையெனப் பொருள் கோடலாயிற்று. இதனுல் அல்லை இல்லை என்னுஞ் சொல்லை யுன்னுமிடத்துக் கட படங்கள் மண்ணாலல்ல. மண்ணாலைத் தவிரக் கடபடங்களில்லை என்ற வுதாரணத்தால் காரண காரியங் கடந்ததாகக் காணுகின்றதே துவிதஞ்சாதிப்பதற் கேதென்னை?

**து-விடை—** ஒருவனுலாகிய கட படங்கள் அவனுகுமா அவனுகாது. ஆதலி னவனல்லன். அவனைத்தவிரக் கடபடங்களுண்டோ இல்லையெனக் கொள்ளில் காரணகாரியங் கடவாததால் துவித நாசத்துக் கிடமில்லை யென்க.

**ஞா-வின—** தேகமுதலிய சமஸ்த பிரபஞ்சங்களுஞ் சீவச்செயலன்றெனவும், கடபடபணியாதிய சமஸ்தமும் ஈஸ்வரச்செயலன்றெனவுங் கூறியது முழுது ஞாயமாதலால் எமக்கு முடன்பாடே; ஆயின் ஈஸ்வரச் செயலில் ஒன்ருகிய தேகமென்னும் பொருள்

சுயம்போ-விகாரபோ-சுயம்பெனின், ஆஸ்தி மாமிசாதிகளை யன்றி யிங்ஙன மொருபொருளா யிருக்கவேண்டும்; இல்லாமையால் விகாரமெனின், ஒருவனலன்றி அஸ்தி மாமிசாதிகள் தேகமாகத் தாமே விகாரமாகாமையால் கர்த்தாவேண்டும் எனப்பொருள்கோடலும் ஒன்று. இஃதன்றியு மின்னுமொன்று. அஃதாவது; இத்தேகமுண்மையாகத் தோற்றுவதும் இதனை யுண்மையென யாமறிவதும் என்னை?

து-விடை— தேகமென்ப தின்றி நானெனற்கும் போக நுகர்தற்குப்கூடாமையின், இது ஒரு பொருளாதல்பற்றித் தோற்றுவதற்கும் யாமறிவதற்கு மிடமாநின்றதென வறிக.

ஞா-வி— அவயவத்தை யன்றித் தேகமென்னுஞ் சத்தத்திற்குப்பொருள் தோற்றன்மாத்திரமன்றி வேறுண்டோ; வுண்டெனிற் சுட்டிக் காட்டுகவெனின்?

து-விடை— கண்முன் இருப்பதைச் சுட்டிக்காட்டுவதெற்றிற்கென்க.

ஞா-வி— யாதானு மோர்பொருள் விவகரிக்கப் படுங்கால் உண்மையாயும், அதினது உபாதானகாரணத்தை யுன்னுங்கால் இன்மையாயு மிருப்பதென்னை? அங்ஙனமாகாது இதனைக் கூறுவெனின்?

து-விடை—அங்ஙனமாவதாற் குற்றமென்னை, இதனல் நானெனப்படாமலும், பலகிருத்தியமுஞ் செய்யத்தகாமலும், போமோ? இது கேள்வியன்றென வுணர்க.

ஞா-வி— அஸ்தி மாமிசாதிகளையன்றித் தேக மொருபொருளல்லவே-பொருளாகப் பார்ப்பதினலன்றோ மனிதர்-மிருகம்-பக்ஷி நிலத்திலூர்வன-சலத்திலூர்வன-தாவரமெனவும், ஆண்பெண்ணலியெனவும், நா னீ யவனவ ளதுவெனவும், பெண்டுபிள்ளை பண்டபதார்த்தமெனவும், சுற்றத்தார் - அயலார் - நேயர் - பகைஞர் - விருந்தினர் - இழிந்தோர்-உயர்ந்தோர் எனவும், பிராந்திபேதந் தோன்றலாயிற்று. இப்பிராந்தியாலன்றோ ராகத்துவேஷாதி தீயகுணங்களுக்கிடமாய் இதனற் சுகதுக்கமும், செனனமரணப்ரவாகமும்; நேரிடலாயிற்று. பொருளைப் பொருளாகப்பார்க்குந் திறமை இம்மையிற் பிரத்தியக்ஷ இவ்வுலகானுபவத்திற் காணுத நீர் அப்பிரத்தியக்ஷமாயுள்ள பரசிவர்க ணிலை கணிப்பது பொருளாகுமா?

து-விடை— பாலைப் பாலென்றும், பசுவைப் பசுவென்றும், பொன்னைப் பொன்னென்றும், நூலை நூலென்றுமறியாமல் மண்ணை

நீரென்றும், காற்றை அக்கினியென்றும், வீட்டை வெளியென்றுமா அறிகின்றோம், அவ்வள வறிவீனர்களா எந்தமூடர்கள் வசனங் கற்றுக் கேட்கத் துணிந்தனை போது மடக்கு; பத்திபூண்டொழுகலின் கண் ணில்லென்க.

ஞா-வி௫— எத்தேகமுந் தோலால் மூடப்பட்டதன்றோ தோல் மேனாட்டத்தில் விருப்புந், தோலுண்ணாட்டத்தி லருவருப்பான துற்கந்த அஸ்தி மாமிச மல மூத்திரமாதலின் வெறுப்புந் தருதற்பால தன்றோ, இவ்விருநாட்டமும் நமது முயற்சியாதலின் ஒன்றிற்பழகி ஒன்றிற் பழகாததென்னை? ஒன்று பாசத்தழுத்துவதும், ஒன்று விடுவிப்பதுமாதலின், அந்தர்முக நாட்டம் பகிர்முக நாட்டமெனப் பெயர்பெற்றது. இதற்கு மேற்கொள் "அழிவிலாததற் பதந்தனை மைந்தனேயகமுகத் தவர்சேர்வர், வழிநடப்பவர் பராமுகமாயினால் மலர்ந்தகண் ணிருந்தாலுங், குழியில்வீழ்வர்கா ணிப்படிவெளிமுகங் கொண்டுகாமிக ளானோர், பழிதரும்பிற விக்கடல்மூழ்குவர் பரகதி யடையாரே." இங்ஙனமிருக்கப்; பரத்தின்மேற் பழியேற்றி இவ்விரு முயற்சியும் அவரதாகத் திரோபாவ மனுக்கிரகமெனப் பெயர் தந்து நொந்திரங்கித் துதிப்பானேன்? அவர்மேற் பழியென்னை?

து-விடை— "ஆக்குவாய்காப்பா யழிப்பாயருடருவாய்; போக்குவாயென்னைப் புகுவிப்பாய்நின்றொழும்பி" லெனப் பரத்தின்மேலேற்றிக் கூறினருஞ் சான்றோரன்றோ? அங்ஙனங் கூறுவதாற் குற்றமென்னை.

ஞா-வி௫— "இந்தச்சீவனால் வருமறு பகையெலா மிவன்செய்லல்லாமல், அந்தத்தேவனால் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்கள், இந்தச்சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல், அந்தத்தேவனா லன்றெனும் விவேகியே யமலவீடடைவாரே" இதுவுஞ் சான்றோர் வசன மன்றோ இவ்விரண்டினுள் சிறந்தது யாதெனின்?

து-விடை— பத்திக்கு அதுசிறந்தது. ஞானத்துக் கிது சிறந்ததென வுணர்க.

ஞா-வி௫— ஒருவன் துற்காரியங்களையே யிடைவிடாது செய்து யா னென்செய்வன் அவன் செய்விக்கிறான் என்மேற் பழியில்லையென்று மேலு மேலுந் துற்காரியங்களை யிடைவிடாது செய்தற்கிடந் தருமன்றோ வெனின்?

**து-விடை**— பயபத்தி யில்லாதவிடத்தென்க.

**ஞா-வி**— வினைவழியே வந்தணைவ சீவரையெனவும், தான் முன் முன் செய்த வினை தாமே யனுபவிப்ப ரெனவும், இன்னுஞ் சான்றோர் வசன மிருப்பதாற் றன்னைத்தா னறிந்து கொள்ள வேண்டும். அங்ஙனஞ் செய்ய முயலில் தீவினை சிறிதுஞ் செய்யான்; ஆதலி னிதுவே யாவர்க்குஞ் சம்மதிவசன மன்றோ வெனின்?

**து-விடை**— சம்மதி வசனமாயினும் பத்திவினைவுக் கேதென்னையெனின்.

**ஞா-வி**— ஒருவன் விதி மார்க்கத்தில் வழுவாது மனோவாக்குக்காயங்க ளொருங்குபட வொழுகுதல் பகவான் வியக்க வாயின் பலன்வேண்டியாகும். அப்பலன் பேரின்பஞ் சிற்றின்பங்களி லொன்றாக வேண்டும். இவ்விருபலனு மொன்றி லொன்றில்லாமையால் ஆத்மாக்களுக் கன்னியமாகும். அன்னியமாதலின் இவ்விருமையும் வேண்டாதார் அவருக்குப் பய பத்தி பூண்டொழுகுவதிற் பயனென்னை?

**து-விடை**— இவ்விருமையு மொன்றேனும் வேண்டாதார் இல்லையாதலின் விதியும் பத்தியு மறுக்கற் பாலதன்றென்க.

**ஞா-வி**— அதிவர்ணாசிரமிக்குப் பயபத்தி விதி நிடேத மெங்கே யெனின்?

**து-விடை**—யாவருந்தன்னை மறந்தவ ரன்றாதலின் இந்நான்கையுங் களைதற்பாலதன்றென்க.

**ஞா-வி**— தானலாதொன்றைத் தானெனக்கருது மளவு மன்றோ; இந்நான்கும் வேண்டற்பாலது அப்பால் யாதுக்கு. இவை மூழுதுஞ் சித்தாந்தமாமோ வெனின்?

**து-விடை**— மெய்யே-இந்நான்கு சாதனப்பேற்றா லன்றி நித்தியா நித்திய வஸ்து விவேக முதலிய நான்கும், இந்நான்காலன்றித் தன்னை விசாரிக்கும் விசாரமும், இவ்விசாரத்தா லன்றி ஞானமும், இந்த ஞானத்தாலன்றி நிரதிசயானந்தமாகிய முத்தியும் கிடைக்குமா? ஆதலின், பிரதம சித்தாந்தமாதலின் இந்நான்கும் விடற்பாலதன்றென்க.

**ஞா-வி**— கர்மம், பத்தி, ஞானமெனக் காண்ட மூன்று வகுத்தது, அந்தந்தப் பக்குவிக்காதலின் அததற்கதது சிறப்பா மெனக் கொள்ளாது துவிதத்தையே ஞானமெனக் கொள்ளலாமா வெனின்?

து-விடை— இந்தத் திரிபதார்த்தத்தையும் விசாரித்துத் தெளிந்த விடத்தில் மூன்றும் அநாதி நித்தியமெனவும்; சீவேஸ்வரருக்கு ஐக்கிய மின்றெனவுந் திடம்பெறச் செய்தது ஆதலின் ஞானமெனக் கோடற் கையமின்றென்க.

ஞா-விஞ— இம்மூன்றும் பந்ததிசையினு முத்தி திசையினு மறிவுக் கன்னியமன்றே; இவற்றை விசாரித்துத் தெளிவதில் என்ன பயனெனின்?

து-விடை— பரத்தினது அருள்பெற்றுச் சதா ஒருதன்மையதாக அப்பரத்தைப்போல் வாழ்வதெனவறிக.

ஞா-விஞ— பரத்தை யடையு முயிர்க்குப் பாச மியல்பாதலின் எங்ஙன மகலு மெனின்?

து-விடை— களிம்புபோ லியல்பாயினுஞ் செப்புக்கண்ணுடி துலக்கியக்கண் துலக்கமாகுற் போலாமென்க.

ஞா-விஞ— மீண்டுங் களிம்பு பற்று மாறுபோன்று பாசமீண்டும் பற்ருதோ?

து-விடை— பற்ருதெனவறிக.

ஞா-விஞ— திடமெங்ஙனமெனின்?

து-விடை— சுருதிப்பிரமாணமே திடமென்க.

ஞா-விஞ— பொருத்தமில்லாததைச் சொல்வதுஞ் சுருதிப்பிரமாணமோ?

து-விடை— ஈஸ்வரவாக்கியமாதலின் பிரமாணமா மென்க.

ஞா-விஞ— செம்புக்குக் களிம்பு வாஸ்தவமாதலின் துலக்கினு மீண்டுமுண்டாம். இதனை யுதாரணமாகச் சொல்லுவானேன். இது முத்தியாகுமா?

து-விடை— ஆத்மாக்களுக்குப் பந்தம் வேறென்னின் சம்பந்தப் படுவானேன் எனவரும், சம்பந்தப்படுதலும் விலகலு மியற்கையாமெனின், சற்கருமாதிகளும் சிரவண மனன நிதித்தியாசனாதிகளும் யாதுக்கெனவரும், இவ்வழக்கெல்லா நமக்கேன் பத்திபூண்டொழுகுவதே முக்கியமாமென்க.

ஞா-விஞ— எறும்பு - புழு - முதலிய அற்பசெந்தும் பயன்கருதாது அசையாது, இங்ஙனமிருக்கச்; சிவபூசைமுதலிய புண்ணியகருமமும் பயன்கருதாது இயற்றுவாரில்லை, அப்பயனே நிலையற்றதாயின்

முயற்சியும் பயனற்றதன்றோ, நீரிதனைப் போதிப்பதி லுமக்கு மெமக்கும் யாதுபயனோவெனின்?

து-விடை—பிரத்தியக்ஷமாக இவ்வுலகத்தில் தாரித்திரரையும் மேலாயசம்பத்தோரையுங் காண்கின்றோ மல்லவா, இவர் இத்தாரதம்மிய மாதற்குக் காரணம் பூர்வகன்ம மாதலால் அதுபற்றி யாம் போதிக்கின்றோ மெனவறிக.

ஞா-வி— மெய்யே, நீர்கூறிய மோக்ஷ சாம்பிராச்சிய வாழ்வு உமது வுதாரணத்தா லுமக்குந் தெரியாது. நிலையற்றதெனக் குறிப்பதைப்பற்றி வினவத் துணிந்தனமன்றி வேறின்று. ஆதலின் சங்கைக்குத்தக்க விடை தெரிவிக்கத் தகாத நீரா; துவிதஞ் சாதிக்கப் போந்தீர் போதும், விபரீத மணக்கும் வாய்பொத்துமெனின்?

து-விடை— இன்ன சத்தத்திற்குத் தாதென்ன? இலக்கணமென்ன? சத்தபேத அருத்தமென்ன? அவ்வருத்தங் கருத்துப் பொருளோ, காட்சிப்பொருளோ, சித்துப்பொருளோ, சடப்பொருளோ, இயற்கைப்பொருளோ, செயற்கைப்பொருளோ, விகாரப்பொருளோ, நிர்விகாரப்பொருளோ, காரியப்பொருளோ, காரணப்பொருளோ, பேதகாரண காரியப்பொருளோ, அபேதகாரண காரியப்பொருளோ, விபரீதப்பொருளோ, எதார்த்தப்பொருளோ, அநுமானப்பொருளோ, அருத்தாபத்திப் பொருளோ, வாக்கியார்த்தப் பொருளோ, லட்சியார்த்தப்பொருளோ, அசாஸ்திரப்பொருளோ, சாஸ்திரப்பொருளோ, இவற்று ளொன்று மறியாத நீயா, எம்மை மூடனாகச் சொல்லத்துணிந்தனை; உன்வா யழுகக்கடவதெனச் சபித்துப் பிணங்கினனென்க.

ஞா-வி— ஐயா! சரணஞ் சரணஞ் சிறியேன் செய்த பிழை பெரியோராவது பொறுப்பது கடனே. யானுய்யும் வகை யெங்ஙனம், சுருதியுத்திமாறுயின் அநுபவ மெங்ஙனம் வாய்க்கும். அதுபற்றிக் கேட்கப் புகுந்ததன்றி உமதளவு காணவன்று; ஆதலின் இனியொரு சந்தேகமுண்டு. அதுயாதெனின், என்னவஸ்து சிவனென்றும், ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படுவது. உபாதிகுணம் இருவர்க்குமாதலாலும், அவை அவரல்லாத தாகையாலும் இவைகள் சம்பந்தமின்றிச் சுயம்பாய்த் தெரிவிக்க வேண்டுமெனின்?

து-விடை— இங்குமங்கும் இச்சாஞானக் கிரியை நிகழ்தலின் அறிவன்றி யின்றென்க.

**ஞா-வி௵—** இவ்விருவரு மறிவாயின் ஐயந்திரிபகற்றி யுண்மை யை யுணர்த்தத் தருவ தெவ்வறிவெனின்?

**து-விடை—** சீவவறிவுக்குப் பரவறிவென வுணர்க.

**ஞா-வி௵—** பரவறிவுக் குணர்த்துவ தெவ்வறிவோவெனின்?

**து-விடை—** இங்ஙனஞ் சொல்லப் புகின் அளவு படாமையால் அனவஸ்தாதோஷமாம். இது குதர்க்கவாதிகளது சம்மதம் நீகேளா தொழிக வென்றுணர்க.

**ஞா-வி௵—** மெய்யே; அறிவுக்குமே லறிவு நீர் சொல்லாதிருக் கில் யாமு மேல் கேளாதிருப்ப மெனின்?

**து-விடை—** குருவன்றி விளங்கவேண்டும். அங்ஙனமில்லாமை யால் எங்ஙனங் கூறுதொழிவ தென்க.

**ஞா-வி௵—** அவ்வாறே முன்னும் பின்னுங் குருசீட பரம்பரை யிருக்கவேண்டுமெனத் தானேயமைதலின் அறிவுக்கறிவுவுணர்த்து மெனின், அவ்வறிவுக் கெவ்வறிவோ என விடாது கேட்க வருமன் றோ இதனைக் குதர்க்கமென்ற தென்னையெனின்?

**து-விடை—** அனவஸ்தா தோடம் வருதலி னென்க.

**ஞா-வி௵—** வராதிருக்கும் வகைக் கேதென்னை யெனின்?

**து-விடை—** நீகேளாதிருப்பதே இதற்கேதுவாமென்க.

**ஞா-வி௵—** நீர் தீர்ப்புச் சொல்லா திருப்பதே இதற்கேதுவா மெனக் கொள்ளற்பாலதன்றோ?

**து-விடை—** நீ இனி யாதுங் கேளா தொழியின் யானுந் தீர்ப்பு செய்யா தொழிவனென்க.

**ஞா-வி௵—** பிறரது ஐயந் தவிர்த்தற்கன்றோ குருபீடம் பூண் பது, அதுபற்றி யாங் கேட்கப் புகுந்தனமெனின்?

**து-விடை—** நீயெமது பரம்பரை மாணக்கனன்றுதலின்கேளா தொழிகவென்க.

**ஞா-வி௵—** விஞவுக்கு உத்தரந்தோன்றுதவிடத்து எவருங் கூறுவது இங்ஙனமாதலால் உமது மொழியு மிதுபோலாமெனின்?

**து-விடை—** துவிதசித்தாந்தத்தில் எனக்கு நிகரார் கேட்க வேண்டுவது இப்போது கேளென்க.

ஞா-வி— முன்னையது நிற்க; இப்போது கேட்கப் புகுவது மிகவுஞ்சிறியது. அதாவது; உலகமென்பதில் ஒருமெய் இதுவெனக்காட்டுகவெனின்?

து-விடை— காணப்படுவன வனைத்து மென்க.

ஞா-வி— காரணகாரிய மென்னுந் தர்மமேற்பது கற்பிதப் பொருளாதலின் அங்ஙனமேலாதது மெய்ப்பொரு ளன்றே, அதனைக் காட்டு கெனின்?

து-விடை— மணற்சோற்றிற் கல்லாயப் புகுந்தாற் போலு மாயிற்றே இதுதானு சிறியகேள்வி யென்றது போதும் நிறுத்தென்க.

ஞா-வி— கற்பிதத்தை மெய்யென்று பிரத்தியட்சத்திற் கண்ட நீரா அப்பிரத்தியக்ஷமான சீவேஸ்வராதுண்மை நிலைகண்டு தெளிந்து உபதேச குருவானீர். மோசமோசம், "தன்னறிவு சாட்சி யல்லாற் சாயுச்சியப்பயனைச், சொன்ன பிழைகெட்டேன் றொலைப்ப ரோ" என்னுங் கவியின் அர்த்தத்துக்குச் சாட்சி நீரன்றோ வெனின்?

து-விடை— உனக்குப்பக்குவமும் அனுபவமும் வந்தால்தான் தெரியும் இல்லாவிட்டால் தெரியாது விவர்த்த கேள்விகளை விட்டுப் போவென்க.

ஞா-வி— ஞாயத்துக்கு விரோதமானதாயின் விவர்த்த கேள்வியெனச் சொன்னதை யேற்போமெனின்?

து-விடை— உன்னை யொருபொருட்டாய் இனிப்பேசுவமோ நடவென்க.

ஞா-வி— இப்படியே யெம்மதத்தருஞ் சொல்லில் உண்மை யெனல் எம்மதமாமெனின்?

து-விடை— அந்தந்தமதம் அவரவர்க்கு உண்மையாமென்க.

ஞா-வி— வழக்கிடற் கேதென்னை?

து-விடை— வஸ்துநிச்சய பேதத்தாலென வறிக.

ஞா-வி— பரவஸ்து உண்டெனக் கோடலில் எவர்க்குஞ் சம்மத வசனமாயிருக்க நிச்சயபேதம் வருதற் கேதென்னை?

து-விடை— இலட்சணபேதத்தாலென வறிக.

ஞா-வி— அதற்குரிய லட்சணமன்றோ ஒவ்வொருவருஞ் சொல்வதெனின்?

து-விடை— ஆம்.

ஞா-வினா— பேதம்வருவானேன்?

து-விடை— பிரத்தியட்சமில்லாததா லென்க.

ஞா-வினா— யானைகண்ட குருடர்போ லாமன்றோ அந்நிச்சய மெனின்?

து-விடை— கல்வி ஞானத்திலும், விசார ஞானத்திலுஞ் சிறந்தவரன்றோ; அந்தந்த மதஸ்தாபிதரும். இங்ஙன மிருக்க; அவரைக் குருட ரென்னலாமா, இது மடமை யென்க.

ஞா-வினா— ஒவ்வொருவர் தீர்ப்பு ஒவ்வொருவர்க் கொவ்வாத தென்னை?

து-விடை— அவரவ ரிஷ்டமென வறிக.

ஞா-வினா— அவரவ ரிஷ்டப்பிரகாரமோ நிற்பது வஸ்து நிலை யெனின்?

து-விடை— அவரவர் இஷ்டப்படி இலக்கணங்கொண்டு பாவித்து வந்திருப்பதால் அந்தந்தக்கோலமாக அன்பருக் கெழுந்தருளி வந்து அனுக்கிரகித்தாரென்று அவ்வரவர் வேத மிருத்தலின் அவரவர் இஷ்ட விலக்கணமே வஸ்து நிலையாமென்க.

ஞா-வினா— ஒருவனை மாமன்-மச்சினன் - அண்ணன் - தம்பி-மகன்-தந்தை-பாட்டன்-பேரன் - உறவினன்-அன்னியன்-நண்பன் - பகைஞன்-விருந்தினன்-மூடன்-கல்விவான்-துஷ்டன் - யோக்கியன் - எனக்கோடற்கு அவன் பாத்திரனாயினும் இத்தனை ரூபமல்லன் அவனுக்கு இவையனைத்துங் கற்பிதமன்றோ, அதுபோல அவரவ ரிஷ்டவிலக்கண மனைத்தும் பரவஸ்துவுக்குக் கற்பிதமா மேயெனின்?

து-விடை— அவரவரிஷ்ட விலக்கணம் அவரவர்க்குப் பலன் தருதலால் எங்ஙனங் கற்பிதமாமென வறிக.

ஞா-வினா—இவனும் அந்தந்தக் கொள்கைக்குத் தக்கவாறிருந்து அவரவர்க்கு அனுபவந்தரினும் இவன் தன்னை மறந்தனனோ, ஆதலின் இவை அவனுக்குக் கற்பித மென்றற்குத் தோடமென்னை இன்றாற் போலப், பரவஸ்துவுக்கு அவ்விஷ்டவிலக்கணமனைத்துங் கற்பித மென்றாற் றோடமென்னை?

து-விடை— எங்ஙனஞ் சொல்லினும் விடேனென்றாய் தோட மின்றென வறிக.

**ஞா-வி௵—** மதத்தர் நிச்சயமனைத்தும் பரவஸ்துவி னுண்மை நிலையன்றாதலின் மூடமென லாகாதோ வெனின்?

**து-விடை—** மூடமென்னிற் பத்திக் கிடமின்றாம். தெளிவென்னில், ஐயந்திரிபகற்றற் கிடமின்றாம், இங்ஙன மிருப்பதை நீயே யறிதி.

**ஞா-வி௵—** பரவஸ்து இல்லையென்று லன்றோ பத்திக்கிடமின்றாம். அங்ஙன மெமது கருத்தன்றே பரத்துக்கு மதத்தரிடுங் குறிகள் மூடமெனக் கூறினதே யன்றி வேறல்லவெனின்?

**து-விடை—**தன்வயத்தனாதல் - தூயவுடம்பினனாதல்-இயற்கையுணர்வினனாதல்-முற்றுமுணர்தல் - இயல்பாகவே பாசங்களி னீங்குதல் - பேரருளுடைமை - முடிவிலாற்றலுடைமை - வரம்பிலின்பமுடைமையென்னும் எண்குணங்களேனும் அவருக்குப் பொருந்தமின்றோ; இது சைவாகமத் துணிபாதலின், மறுக்கற்பாலதன்றென்க.

**ஞா-வி௵—** சீவர்களுக்குள்ள குணங்களுக்கு வெதிருத்தமாகச் சொல்லவந்த குணங்க ளன்றிச் சுயம்பாகுமா?

**து-விடை—** சுயம்பென்றாற் றோடமென்னை.

**ஞா-வி௵—** சிருட்டிக்குமுன் இக்குணங்கள் வருதற்கிடமின்றாதலின் கற்பித மாமே யெனின்?

**து-விடை—** நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரமம், நிதானம், சத்தியம், கேவலமுதலிய விதுபோன்ற குணங்கள் எண்ணிறந்தனவே இவையுங் கற்பிதமென்பையோ,

**ஞா-வி௵—** காரணக்குறியாதலின் சுயம்பெனலாமேவெனின்?

**து-விடை—** காரணக்குறி யல்லாத விடுகுறிப்பெய ரொன்றுமில்லாமற் போகின்றதே யெங்ஙனந் துதிப்பது, இதுபற்றியாவது தள்ளற்பாலதன்றென்க.

**ஞா-வி௵—** இதற்குந் தக்கவிடை யறியீர் இதுநிற்க. கற்பிதமாதலாற் குணங்களைத் தொடாது பரவஸ்துவைச் சொல்லெனின்?

**து-விடை—**அட்டமூர்த்தமெனின், ஆராய்ச்சியில் அல்ல அல்லவெனப் போதலானும், அட்டமூர்த்த மன்றெனின் உண்டெனற்குப் பொருளில்லாமற் போதலானு மெங்ஙனஞ் சொல்வதென வறிக.

ஞா-வி௵— இங்ஙனமாயின் உமக்கே வஸ்து நிச்சயஞ் சந்தேகமா யிருக்கப் பிறர் சந்தேகத்தை யெங்ஙன மகற்றக் குருவானீரெனின்?

து-விடை— இங்ஙனமாய நிலையெல்லா மாயா விகாரமாதலினிதுபற்றிச் சான்றோரும் "மாயாவிகார மதுபானம் போன்றமயக்கு ஓயாத துன்ற லொழியுமோ-நீயதுவாய்ப், போகாமலாடும் பவுரியவன் பொய்க்காட்சி, யாகாது போலே யறி." என்றார். நீ யருள்வடிவாதற் கேற்றதைச் செய்யென்க.

ஞா-வி௵— அட்டமூர்த்தமாயு மன்றாயுமிருப்பது மாயா விகாரமென்றீர். எதனை மாயை யென்றதோ வெனின்?

து-விடை— பராசத்தியை யென வறிக.

ஞா-வி௵— பரத்தை விடாது அபேதமா நிற்றலன்றோ, பராசத்தியென்பது. நன்றே, பரத்தைச் சத்தியென்றுஞ் சத்தியைப்பரமென்றுங் கூறலாமா; கூறலாமெனின், சத்தன் சத்தியென்றறிவுடையோர் வசன மிராதிருக்கவேண்டும். இருத்தலின் ஒன்றெனப்படாது, இரண்டெனிற் சத்தனையன்றிச் சத்தி யிருக்கவேண்டும். இல்லை யெனில், ஒருவனது சக்தியை அவனென்னலாமா; கூடாதெனிற், சக்தி வேறன்றோ? இங்ஙன முடிதலின், மாயையென்பதின் எதார்த்தவடிவம் யாது?

து-விடை— சக்தி யென்றது வல்லபம், அந்த வல்லபஞ் சத்தனுக்குக் குணமாதலால் அதனை யென்னவென்று சொல்லுதும், ஓர் முதலன்றாதலின் தனக்கென வோர் வடிவமுண்டா, இல்லையென வறிக.

ஞா-வி௵— வடிவிலா மாயையா லென்றும்; இல்லை யெனு மாயையி லிட்டனை யென்றும்; மாயை யென்பது பொய்யெனிலென்றும்; சத்துக்கள் கூறியதும் இல்லாமைபற்றி யாதலின் அதனை யுண்டெனக் கொள்வானேன்?

து-விடை—அண்டாண்ட பேதங்களுஞ், சராசர பேதங்களும் மாயையினது காரியமன்றோ, இவைகளிருப்பதால் இவற்றிற்குக் காரணமாகிய மாயையு மிருக்கவேண்டும். இல்லை யென்பது கூடாதென வறிக.

ஞா-வி௵— நீரே முன்னர் மாயை யில்லை யென்றும், பின்னருண்டென்றுஞ் சொன்னால் உண்டு இல்லை யென்னு மிவ்விரண்டி

லேயு மாயாகாரிய மனைத்து மேற்கவேண்டுமே, செகத்தும் மாயா காரிய மன்றோ, இதனிடத்திற் காட்டுகவெனின்?

**து-விடை—** சிருட்டிக்கு முன்னுஞ் சர்வசங்காரத்திற்குப் பின்னுமெங்கே இதனுல் இல்லையென்றும்; இப்போதிருத்தல்பற்றி உண்டென்றும் பிரத்தியட்சமா யிருப்பதைக் காண்க.

**ஞா-வினு—** செகத்தென்பது; காலம்-தேசம்-வஸ்து-எனத் திரி பதார்த்த மயமன்றோ; இம்மூன்றனுள் ஒன்றேனுமாயையைக்கடந்ததன்று. உண்டில்லை யென்னுந் தர்மத்தை இப்போதுமேற்றிருக்க வேண்டுமே யெனின்?

**து-விடை—** இப்போதெல்லாஞ் சத்தியமென வறிக.

**ஞா-வினு—** இப்போதும் நூலையன்றிப் படமும்-மண்ணையன்றிக்கடமுமெங்கே; இதுபோலப் பூதமெனவும் பௌதிகமெனவும் இரண்டுண்டே இவற்றுட் பூதத்தையன்றிப் பௌதிகமெங்கே காரணத்தை உன்னுமிடத்து இல்லையெனவும், தமது பயனுகிய கர்த்தத்துவ போக்தத்துவ சாதனக் கருவியாய்நிற்றலை உன்னுமிடத்து உண்டெனவும் பொருள்படச்சொல்ல வறியாத வுனக்காசிரியரெனப்பட்டந்தந்தவனுர். உன்னிலும் விவேகியாயிருக்கவேண்டும். போதும் இது நிற்க; சிற்றறிவு சீவனென்றும், பேரறிவு பரமென்றும், முன்னே சொல்லிவிட்டிருக்கிறேம். சிற்றுயிருடலளவோ வுணர்வளவோ? உடலளவெனின், அவஸ்தாத்திரியங்கண்டு மறைவதெங்கே. உணர்வளவெனின் உடலளவு நானெனற்கேதென்னை. இந்தச்சிறிய சந்தேகத்தையாவது நிவர்த்திக்க வேண்டுமே யெனின்?

து-விடை— ஒன்றுந்தோன்றுதிருக்கச்செய்தனை சந்தேகந்தெளிந்துகொள்பவன்போற் காட்டிக்கொல்லவந்த எமனுனை இல்லாத கேள்வியெல்லாங் கேட்க வல்லவனுனை போதும் இனியாவது போவெனக்கூற.

ஞா-வினு— யான்கேட்டதெல்லாம் ஞாயவிரோதமல்லவே, உம்மைத்தகப்பன் போலுங் கருதிய பாத்தியத்தால் வெறுத்துக்கொண்டேனே யன்றி வேறல்ல; சரணஞ்சரணம்-என்று வணங்கி இரந்து கேட்டனன். அதாவது; எவ்வுயிரு மெவ்வகைப் பிறப்புமல்லவே யாதென லட்சியம் வைக்க நமது விபரீத ஞானம்போமெனின்?

**து-விடை—** அறிவென லட்சியம் வைக்கப் போமெனவறிக.

**ஞா-வினு—** சின்னம் அவிச்சின்னத்தையன்றி லட்சியார்த்தம் வேறுகண்டிலனே யெனில்?

து-விடை— இரண்டினுந் தாக்கற்றுச் சும்மா விருவெனக்கூற.

ஞா-விஞ— மூடமௌனமாகக் காணுகின்றதே யெனின்?

து-விடை— அதையுங் கடந்து பாரென்ன.

ஞா-விஞ— ஒன்றுந்தோன்ற வில்லை யெனின்?

து-விடை— ஒருசோதி தோற்றும்பாரெனச் சொல்ல.

ஞா-விஞ— அதுயாது எனக்கு ஒளிருகின்றது அதன் பெய ரென்ன?

து-விடை— அருளென்முன்.

ஞா-விஞ— அப்புறம் யாதெனக்கேட்க?

து-விடை— பரைதெரிசனங் காணென்ன.

ஞா-விஞ— அப்புறமொரு பெரியசுகந் தோற்றுதேயெனின்?

து-விடை— அதுதான் பேரின்ப மென்றறிக.

ஞா-விஞ— அப்பாலதுவு நழுவுகின்றதேயெனின்?

து-விடை— அதுதான் ஆனந்தாதீதமெனவறிக.

ஞா-விஞ— இதெல்லா மென்ஞலறிவதாயிருக்க நானென்பதெ ங்கேயெனின்?

து-விடை— அதுதான் தற்போத விழப்பெனவறிக.

ஞா-விஞ-ஆனந்தாதீதமென்து அங்ஙனமாயிருந்து அறிந்தவனும் நான்முனே-தற்போத வொழிவு என்றது சொல்மாத்திரமாகக்காணு கின்றதே யெனின்?

து-விடை— முத்தி முடிவிலும் நானெனலும் அதையுணர்த் தும் பரமும், நழுவிற்பந்தப்படுத்துமென்னும் பயமிருத்தலிற் பாச மும் மூன்றும் அஞதி யென்றற்கு நின்றதெனவறிக.

ஞா-விஞ— நானெனற்குப் பொருள் அறிவென்றுகூறி முடிவி லும் வெறுஞ்சொல்லாக வழவழென்று விடுவதுதானே மேலான அனுபவமெனப் பெரிய பெயரிட்டுப் பகட்டநின்றீர். பரவறிவையும்- சீவவறிவையு மளந்தனுபவிக்கத் தெரியீர்போதும். எதைப்பாசமெ ன்பது-இதையாவது தெரிவிக்கவேண்டு மெனின்?

து-விடை— முன்னே காரண காரிய சம்பந்த மருத சத்தமுத லிய ஐந்துவிடயமென்றனமே-அதுவேயெனவறிக.

ஞா-விஞ— இவை பஞ்சபூதத்தையன்றி யில்லாமையால், பஞ் சபூதம் விடயமாகவேண்டுமே-பஞ்சபூதமும் அபஞ்சீகிருத பூதத் தையன்றி யில்லை, இப்படியே செல்லுமாஞல் பாசமென்பதற்குப்

பொருளின்னதெனக் கணிக்கப்படாமையால் அதுவுந் தோற்றன்மாத் திரமாக முடியுமே யெனின்?

**து-விடை—** முடியினுங் கர்த்தத்துவ போக்தத்துவ சாதனக் கருவியா நிற்கு மனுபவத்துக்கு நாசமுண்டோ இல்லை யெனவறிக.

**ஞா-வினு—** முதற்காரணமன்றி யோரணுவும் எங்குமில்லை. இங்ஙனமில்லாதனவனைத்துங் காரியப் பொருளன்றோ; இந்தக்காரிய வஸ்த்துக்கள் தத்தமக்குரிய குணங்களையு முதற்காரணத்தையும் குறிக்கின் குணியென்பதற்கும்,காரியமென்பதற்கும்,பொருள் உபாதி வடிவாமுடியும். அவ்வுபாதி வடிவம் தனக்கெனச் சொரூபமொன்றி ன்றி முதற்காரண மயமா நின்று விவகார சாதனக்கருவியாய் மெய் போலத் தோற்றும். இத்தோற்றத்தையாமெய்யென்பது, கடபடங் கள் மண்ணூலைத்தவிர வுண்டா உபாதி பேதத்தால் வேறுபோலத் தோற்றலை மெய்யென்னலாமா?

**து-விடை—** அனுபவத்துக்கு மெய்யா நிற்றலின் எமக்கு இது வே போதுமெனவறிக.

**ஞா-வினு—**பாமரரிலுஞ் சிறந்தவர் பண்டிதரென்பதற்கு அடை யாளமென்னை?

**து-விடை—** இல்லறந் துறவறங்கட்கு வழுவாமை யெனவறிக.

**ஞா-வினு—** இதெல்லா மொழுக்கத்திற் சேர்ந்தது. காமவெகு ளிக்கு மயக்கங் காரணமாதலின், மயக்கம் பொருளல்லவற்றைப் பெருளென வுணர்தல். இம்முயற்சியன்றோ; பந்தம். அதினதின் காரணங்களை அததிலொடுக்கிப்போய்க் காரணகாரிய மற்றநிலையைக் காண்டல் முத்தி. இஃதியற்றத் தெரியாதவர் சொல்லாலன்றித்தம் மை யொடுக்கிப் பார்க்குஞ் சிந்தனைசிறிது மில்லாதவர். இவரையா பண்டிதரென்பதெனின்?

**து-விடை—** இம்முயற்சி மாறுதுடைமை சிறந்த ஞானியர்பா லன்றி யேனையோரிடத்து இல்லாதேனுஞ் சரியை கிரியை யோகங் களில் ஒன்றேனு முரியரன்றோ, இவரைப் பாமரருக் கொப்பென்ன லாமா, கூடாதென வறிக.

**ஞா-வினு—** பொரு ளல்லவற்றைப் பொருளென வறிதல் பற் றிச் சமத்துவங் கூறவந்ததே யன்றி வேறல்ல. இதுநிற்க; துவித ஞானியரையும் ஞானியரென்னலாமா? என்னலாமெனின், சமஷ்டி வியஷ்டி காரணகாரிய வுபாதித்திரிய மனைத்தும் பாசமன்றோ, இப்

பாசங்கள் உபாதான வுபாதேயத்தையும், விகார தர்ம்மத்தையும் ஏலாத தொன்றுண்டோ, உள்ளதாகக் காண்டல் நமது புத்தி விகற்ப மன்றி வேறில்லையே, பழுதையைப் பாம்பென்று மயங்கினதும், அல்லவென்று தெளிந்ததுந் தனையன்றி யில்லாமையால் ஆன்மாவுக்குப் பாசம் வேறென்றும், அது தொன்றுதொட்டு வருதலால் அனுதி நித்திய மென்றுஞ் சொல்வது இது மூடமன்றோ இவரையும் ஞானியரென்னலாமா?

**து-விடை**— அந்நிலையாவது நமதிடத்திற் சிறிது மில்லாமையால் அவர் ஞானியரே யெனவறிக.

**ஞா-வினு**— நம்மினுஞ் சிறந்ததுபற்றி அவரை ஞானியரெனின், அறிவுக் கன்னியத்தை அளந்தனரன்றி அறிவை அளந்தனரன்றுதலின் உண்மை ஞானியரென்னலாமா?

**து-விடை**— எங்ஙனஞ் சொல்வதெனவறிக.

**ஞ-வினு**— "மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந், தம்மையறியும்மறிவ தேயறிவுதானே" யெனவும்; "பெறுமவற்றுள் யாமறிவ தில்லையறிவறிந்த, மக்கட்பே றல்ல பிற" வெனவும், அனுபவவசன மிருப்பதாலதனையறிந்துஞ் சோதனைசெய்யும்வகை அற்றவராக வேண்டும். அல்லவெனில் உபாதிநாட்டத்தால் அறிவுக்குப் பேதங்கற்பிக்க வந்ததேயன்றி அறிவுநாட்டத்தால் எங்ஙனம் பேதஞ் சாதிக்கப்படும். எங்ஙனமெனில், கரையென்னு முபாதியாலன்றிச் சிறிது பெரிதெனல் சலத்தாலன்றே. அறிவை அறிந்தவராயின் துவிதபேத மெங்ஙனஞ் சாதிப்பர். இவரை ஞானியரல்லரெனச் சொல்ல நடுங்குவ தென்னே?

**து-விடை**— சான்றோராதலி னெனவறிக.

**ஞா-வினு**— "கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ" அதுபோலப் போலி ஞானியரை எதார்த்த ஞானிய ரென்னலாமோவெனின்?

**து-விடை**— அந்தப்பேத மெமக்குத் தெரியாதாயினும் அவர் நடக்கையாலும் பலகாலுஞ் சலனமின்றிச் செய்யு நிட்டையாலும் பேதங் கணிப்பதற் கிடமின்றெனவறிக.

**ஞா-வினு**— யோகியரும் ஞானியர்போல் அனுத்துவமும் பேதந் தட்டாம லிருப்பதனல் ஞானிய ரென்னலாமா?

**து-விடை**— கூடாதாயினும் எமக்கு முறையன்றெனவறிக.

ஞா-வி௫— அதுநிற்க; உயர்திணையிலும் அஃறிணையிலு முடல் தோறு நானெனப்படும் உயிரெல்லாம் எப்பிறவியைச் சுதந்தரமாக வுடையதோவெனின்?

து-விடை— நிலையில்லை யெனவறிக.

ஞா-வி௫— எப்பிறவியுஞ் சுதந்தர மில்லா திருக்க அந்தந்தச் சென்மமாக வெண்ணி உயிரைச் சராசரமெனவும், எழுவகைத்தோற்றத்துள் இன்னதெனவும், ஆண் பெண் அலியென்பவற்றுள் இன்னதெனவும், சொல்லலாமா? கூடாதெனில், உயிரெல்லாம் எப்போதும் நானெனற்குத் தேகம் யாதெனின்?

து-விடை— அறிவன்றி யில்லை யெனவறிக.

ஞா-வி௫— அறிவைப் படித்துக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலில்லாதாயின் ஞானதனுவாதற் கேதெங்ஙனமெனின்?

து-விடை— அவரருளாலெனவறிக.

ஞா-வி௫— தன்னைத்தானெனப்பார்த்தல்; அன்னியராலாயின் இதுவு மன்னியராலாமென்பம். அங்ஙனமில்லையெனின், இந்தப் பிதற்றல் ஏனெனின்?

து-விடை— இந்த வழக்கெல்லா மெம்மால் முடியாது சரணஞ் சரணம் போவென்று இரந்துகேட்டனனென வறிக.

ஞா-வி௫— இங்ஙனஞ் சொல்வதுதானோ துவித சாம்பிரதாய முறையெனின்?

து-விடை— துவிதவாத குருக்களுக்கெல்லாஞ் சிறந்தவரொருவரிருக்கிறார் அவரை யழைக்கிறேனென்று சொல்லி யுடனே வரவழைத்துக்கேட்கவேண்டியவற்றை இவரைக் கேளென்று நீங்கினன். அப்பால் அந்தச்சிரேஷ்ட குரு உனது சங்கை யாதெனக்கேட்க.

ஞா-வி௫—ஐயா! சரணஞ்சரணம்-மூன்றவஸ்தையாகவும், அந்தந்த அவஸ்தாக்காட்சிகளாவுந்தோன்றி மாறுவது யாதெனின்?

து-விடை— இவ்வாறனகேள்வியையுங் கேட்பவரையுங் கண்டிலன் இதென்ன கேள்வியென்று அவமதித்தனன்.

ஞா-வி௫— அவஸ்தாத்திரய வயப்படாத வுயிரில்லாதிருந்தால் யாங் கேட்கப்புகுவோமா, அங்ஙன மில்லாமையால் அதனை உணராது அவமதிப்பானேன்?

து-விடை— உயிர்களுக்குச் சுபாவமாயிருத்தலை விசாரிப்பதா லென்ன பயனென வறிக.

ஞா-வின— எங்கெங்கெந்தவுயி ரெங்கெங்கெந்ததேகமெடுத்ததோ அந்த ந்த பாவமாவானேன், அது நானெனத் திடங்கொண்டு கர்த்தத்துவ ங்கொள்வது சீவமுயற்சியன்றோ, சுபாவமென்னலாமா? மடமை. எங்ஙன மென்னில்; பிறவியாகவந்த தேகமும் அது வுதித்த இடமும் அவ்விடத்தைச் சார்ந்த மனிதர் முதலியனவும் சொப்பனத்தில் நா னெனவும், எனதெனவும், அன்னிய மெனவும், எவ்வுயிர்க்குந் தோ ற்றுவதுங் காண்பதுவு மன்றித் தான்போய்க் கண்ட இடமும் பொ ருள்களுங் காலமுந்தோற்றுகின்றனவே; சாக்கிரத்தில் அந்தந்த ஆ காரமாகாதவைகள் தோற்றுகின்றனவா, இல்லையே. உயிர்களந்தந்த வாகாரமாவது சுபாவமென்பீரானல் ஆகார பதார்த்தங்கள் இடைவி டாதுதோற்றிச் சுகதுக்கந்தந்து ஆகாரமாகாத பதார்த்தங்கள் தோற் ருமல் சுகதுக்கந் தாரா ததற் கேதென்னை?

து-விடை— உயிர்களின் மடமை சுபாவமே யன்றி யீசனதுசே ட்டை யன்றென வுணர்க.

ஞா-வின— மடமையென்பானேன்?

து-விடை— ஈஸ்வர கற்பிதத்தை நானெனவும், எனதெனவும், அன்னியமெனவும், பார்ப்பதினு லென வறிக.

ஞா-வின— இது எவர் குற்றம்?

து-விடை— சீவரது குற்றமே யென வறிக.

ஞா-வின—ஆனல், சாக்கிரத்தில் உயிர்கள் அந்தந்த ஆகாரமாகா திருந்தால் அவஸ்தாத்திரியமும், அவ்வவற்றிற்குரிய காட்சிகளும், உண்டாமா, உயிர்கள்மூன்றிலு நின்று அறிவதால் உயிர்களின் தர்ம்ம மன்று. அவ்வுயிருக்குத் தோற்றும் அவஸ்தாத்திரிய நிலை யெதன து தர்மமோ இப்போதாவது சொல்லெனின்?

து-விடை— அந்தந்த அவஸ்தையின் தர்மமெனின்; மாறுவா னேன் எனவரும். வருதலி னிது தீராவழக்கா முடியுமென வறிக.

ஞா-வின— ஆனல் தெளிவ தென்றோ?

து-விடை— தெளிவதால் இதிலென்ன பயனெனவறிக.

ஞா-வின—உயிரும், அவஸ்தைகளுங், காட்சிகளும், ஒன்றோ, வேறோ என்னும் ஐயந் தவிர்தற் கேதென்னை?

து-விடை— இதனானும் பயனென்னை யெனவறிக.

ஞா-வி௦— பயனின்றேல் அவஸ்தாத்திரியச்சுழலில் துரும்பு போலுயிர்களிடைவிடாது மொத்துண்ணற்கும், அதனால் வருந் துன்பத்திற்கும், விமோசன மின்றாய்முடியும். இதை யோசியாது பயனென்னையெனக்கூறலாமா? நீர்தானா துவிதாசிரியர்கட்கெல்லாந்தலைமை யென்றது. போதும் இதுவுமக்குத்தெரியாது. இனியொன்று சிறிதாகக் கேட்குதும், அதையாவது சொல்வீரா வெனின்?

து-விடை— அதென்ன வெனக் கேட்க.

ஞா-வி௦— பொற்பணி யென்பதிற் சத்தாவது; பொன்னோ, பணியோ? பணியெனிற் பொன்னையன்றி நான்குகாலத்திலு மிருக்க வேண்டும். இல்லாததாற் பொன்னெனிற், பிரிதிவின் விகாரமென்றிருக்கவேண்டும். பிரிதிவோ அணுக்குழு சையோகமன்றியும், அவ்வணுவோ பரமாணுக்குழு சையோக மன்றியும், அப்பரமாணுவோ அகம் புறத்தில் இரண்டாம் வஸ்துவாகிற வெளியன்றியும், அவ்வெளியோ சூனிய மன்றியும், சூனியமோ சங்கற்பமன்றியு மிருக்கவேண்டும். இல்லாததாலெங்ஙனஞ் செகத்து உண்மையென்றும், அநாதி நித்தியமென்றுஞ் சாதிக்கவல்லீர். பௌதிகம், பூதத்தையன்றி இல்லாததாற் பூதமைந்தில் ஒருபூதத்தையாவது காரணகாரியதர்மம் பெறுதிருக்கச் சொல்லவேண்டுமெனின்?

து-விடை— அங்ஙனங் கூறப்படாதாயினுஞ் செகத்தின்றே, இல்லாமலா பசி தாகங் காமந் தணித்துக் கொள்ளுதற்கிடமாயிருக்கின்றதென வறிக.

ஞா-வி௦— பகிர்முகதிருஷ்டியன்றி அந்தர்முக திருஷ்டிபடித்துமறியீர்; கேட்டுமறியீர். இத்திறமுடைய நீரா-ஐபந்திரிபகற்றிடக் குருவாதற் கிசைந்தீர். உமது நிச்சயமெல்லாம் யானைகண்ட குருடர் தீர்ப்பென்னலாகாதா எனின்?

து-விடை—குருபீடசிரேட்ட ரெல்லா மவ்வளவு மூடரா இங்ஙனஞ்சொல்லாதொழிக வெனப் பயமுறுத்தினன்.

ஞா-வி௦— "உபாதான நாட்ட மொருகணமு மில்லார், உபாதேய நாட்டத் துறுதி யொழியார்-அபாயமதைக், காட்டினுந் தாடிப்பர் கண்டீரிவர்குருவா, வாட்ட மெங்ஙன் தீர்ப்பரிவர் வந்து" என்ற கவிக்கென்ன சமாதானம் சொல்லுமெனின்?

து-விடை—ஆனால் நீரென்ன மதவாதியோ, சொன்னால் விடை தருவனெனக் கூற.

ஞா-வினா— எம்மதத்திற்கும் பொதுவாயிருக்கிற ஞாயவாத மதம், இதனைத் தடுப்பாரு முண்டோ?

து-விடை— அப்படி யென்று லென்ன பொருள்.

ஞா-வினா— மூர்க்கம்-நம்பிக்கை-மூடம்-இவைபற்றிய மார்க்கங் களை யகற்றல்.

து-விடை— அம்மூன்றினுஞ் சார்ந்ததோ எமது மதம். அது நிற்க; நீ வழிபடுந் தெய்வத்தையாவது கூறென்றனன்.

ஞா-வினா— நான் குருவான லல்லவோ போதிப்பன். முழுதும் ஞாய முன்னிட்டன்றி எம்மதத்தர் தீர்ப்பையு மேலாததெது வோ, அதுவே யெமது கருத்துக் கியைந்த தெய்வம். இதனால் உமக் கென்ன லாபம். வஸ்து சோதனையில் நீரெதில் வல்லீர், அதை யாவது தெரிவிக்க வேண்டுமெனின்?

து-விடை— வஸ்து சோதனைக்கும் பத்திக்குஞ் சம்பந்தமென் னவுண்டு, சோதனை, வேண்டாமென வறிக.

ஞா-வினா— ஞாயமுஞ் சோதனையும் வேண்டாமென்னின், எம் மதத்தருக்கு மிது வுடன்பாடாம். யாவர் மதத்தை யானேற்றற்பால தெனின்?

து-விடை— உன்னிட்டமென்றனன்.

ஞா-வினா— அதுபற்றித்தான் யான் சீடனாதற்கு உம்மிடத்தில் வினாவப்புகுந்தன னென்னில்?

து-விடை— யான் சொல்வதை நம்பென்றான்.

ஞா-வினா— எம்மதத்தரு மிவ்வாறே சொன்னால் எவர் சொல் லைக் கேட்பதெனின்?

து-விடை— சோதனைதான் யாதோவெனக்கேட்க.

ஞா-வினா— மூன்றவஸ்தையினு நானென்றிருப்பதெது, என்ன பொருள்? வட்டம்-இருகோணம்-முக்கோணம்- சதுரம்-நுண்மை- ப்ருமன்-இவை முதலிய பலவகைப்பட்ட வடிவங்களில் எத்தகைய து? வெண்மை - செம்மை - கருமை – பொன்மை - பசுமை-என்னு நிறங்களில் எந்நிறத்தது? வெம்மை-தண்மை-மென்மை-வன்மை- முதலியவற்றில் எத்தகையது? இதனையாவது விளங்கக் கூறுமெ னின்?

து-விடை— சித்துப்பொருள் - அதிசூக்குமப்பொருள் - கருத்துப்பொருள் - அருவப்பொருள் - உண்மைப்பொருள் - மென்மைப்பொருள் என்னு நிலையதெனவறிக.

ஞா-வி஦— இந்நிலையதென எங்ஙன முணர்ந்தீர் அதனைச்சொல்லுமெனின்?

து-விடை— சுருதிப் பிரமாணத்தானும், அனுமானத்தானும் உணர்ந்தனனெனவறிக.

ஞா-வி஦— உம்மைப்போல ஆஸ்திகத்திற் பற்பல சமயத்தரும் வெவ்வேறு நிலையினதாகக் கூறினரே, இவற்றுள் எவர்கொள்கை யேற்கப்பால தெனின்?

து-விடை— அவரவர்கொள்கையவரவர்க்குச்சம்மதமெனவறிக;

ஞா-வி஦— இது கேள்விக்குத் தக்க வுத்தரவன்று. இதுநிற்க. செகசீவ பரவஸ்து நிச்சயந் தெரியாது, தத்துவமசியென்னும் வாக்கியத்திற்குத் துவிதஞ்சாதிக்கப்பாஷியஞ்செய்தது என்ன அதிசயம், என்ன அதிசயம். இதனை வியக்க வல்லவர் நும்போன்றவரே வேறல்லர். இரண்டுபட்ட வூரிற் குரங்குங் குடியிராதென்னும் வசனமுங் கேட்டறியீரோ, சிற்றறிவு பேரறிவென்ற இரண்டுமொருங்குபடாதவிடத்துயிர்களுக் கென்ன நிலையெனின்?

து-விடை— அருளெனவறிக.

ஞா-வி஦— உயிர்களுக்கிப்போது இல்லாததாலும், அன்னியமாதலாலும், எங்ஙனம் நிலையாமெனின்?

து-விடை— அதையன்றி வேறு தீர்ப்பில்லையெனவறிக.

ஞா-வி஦— விகாரமென வுன்னாது எப்பொருளையு முண்மையெனக் கோடலிற்சிறந்த நீர், எதார்த்தமெனக்கணித்த திரிபதார்த்தத்துள் பதியைச் சிலர் மண்ணெனவும், சிலர் நீரெனவும், சிலர் அக்கினியெனவும்; சிலர் காற்றெனவும், சிலர் ஆகாயமெனவும், சிலர் சூரியனெனவும், சிலர் சந்திரனெனவும், சிலர் ஆத்மாவெனவுங்கொண்டு; பூமிதேவி-கங்காபவானி-அக்கினிதேவன்-வாய்வுபகவான் - ஆகாயவாணி - சூரியபகவான் - சந்திரபகவான்-ஆன்ம தேவதை யெனப்பெயர் தந்து ஆராதித்து வருகிறார்கள். இதன்றியும்; பிரிதிவு காஞ்சிபுரம், அப்பு திருவானைக்காவல், தேயு திருவண்ணாமலை, வாய்வு காளாஸ்திரி, ஆகாயம் சிதம்பரம், என்று யாவருங் காணப் பிரத்தியட்சமாகப் பூசித்துவருகிறார்கள். இது யாராலே யெனின்?

து-விடை— அங்ஙன மங்ஙனம் பரவஸ்து சகளீ கரித்தபடியி னாலேபூசிக்கிறார்கள். அதினாற்றோடமென்னை; நல்லது, ஆன்மாவை யும் பூசிப்பவ ருண்டாவெனக் கேட்க.

ஞா-வி— ஆன்மதிருத்தியே தேவதாதிருத்தி யெனத் தெளி வுகொண்டு ஆன்மாவுக்குக் கணநேரமும் விரதம்-தவம் இவற்றாற் பசி தாக காமத் தடைவராமல், அன்னபான போக நித்திரை செய்தும், வியாதிக்குத் தக்க அவுடதங் கொண்டும், நித்தியபூசைதனக்குத் தானே செய்துவருங் கருத்தைக் காட்டாமற் பரவஸ்துவைப் பூசிக்கிற தாகக் காட்டி அபிநயித்துப் புகழ்பெறுபவரும், கண்டதே காட்சி கொண்டதே கோலமெனச் சுகித்துத் திரிபவரும், எனக் கொள்க. இதெல்லாம் வருதற்கேது உம்மாலன்றோ வெனின்?

து-விடை— வஸ்து நிச்சய மங்ஙன மன்றே பிழை யாமென அறிக.

ஞா-வி— சரியை-கிரியை-யோக-ஞானமென்னு நான்கனுட் கடையினின்ற ஞானநிலையைச் சரியைகிரியையாகக்கொண்டு சாயு ச்சியஞ்சொல்லப் புகுந்தமையிற் பிழை உமதேயெனக் கூறலாகாதா வெனின்?

து-விடை— எங்ஙனமெனக் கேட்க.

ஞா-வி— ஆண்டானடிமை கோடற்குச் சரியை கிரியையும், மனமொருங்கு படற்கு யோகத்தையும், ஏகத்துவமாதற்கு ஞானத் தையும் கூறினதன்றோவெனின்?

து-விடை— மெய்யே; அதனாற் குற்றமென்னை யெனக் கேட்க.

ஞா-வி— சரியைகிரியைகளில் ஞானபாகந் தெரியாதுஞான த்தை யாளலாமா? ஆளவந்தது நீங்களானபடியால் உங்களாலேயே ஞான நிலைக்கும், ஆண்டா னடிமை நிலைக்குந், தோடமிசிரிம்பிக்க லாயிற்று. ஆண்டா னடிமையில் ஞானநிலை சொல்லலாமாவெனின்?

து-விடை— இது நான் நாளை யோசித்துச் சொல்லுகிறேனெ ன்று விடைபெற்றுப் போயினனெனவறிக.

ஞா-வி—மூன்றுநாள் தரித்தும் அவரைக் காணுமல் அவரிருக் குமிடந்தேடிப் போய்க்கண்டு ஐயா! சரணஞ்சரணம். அதற்கென்ன வுத்தரஞ் சொல்லுகிறீர் சொல்லுமையா வென்றுகேட்க?

து-விடை— நானே பிரமமெனத் திரிவாரைப்பற்றிச் சொன்னதெனவறிக.

ஞா-வி-இரண்டாமகாவாக்கிய மன்றோ; அதன்அர்த்தத்தைச்சொல்வதினுற் பிழையென்னை?

து-விடை— சத்தமும் சத்தார்த்தமும், வாச்சியமும் வாச்சியார்த்தமும், லட்சியமும் லட்சியார்த்தமும், அணுவேனுந் தெரியாதவரா? அங்ஙனஞ் சொல்லி விதிநிடேதமுதலிய கட்டுக்கடங்காமல் மதுமாமிச சையோகத்துக்கே வேதாந்தப் பாட்டுகளைச் சொல்லித் திருத்தியடைந்து நானே பிரமமெனக் கூறத் தக்கவர் கூடாதென்க.

ஞா-வி— பத்திகாண்டிகளை வேதாந்திகள் பழிப்பது யாதுக்காகத் தெரியுமாவெனின்?

து-விடை— தெரியவில்லையென்ன.

ஞா-வி— பிறர் வியக்கவும், தேகபோகம் விர்த்தியாகவும், வந்திப்பதன்றி யீஸ்வரார்ப்பணமாக வல்ல, ஆதலின் குற்ற முண்டோ வெனின்?

து-விடை— இது சரியே; நீ ஞாயவாதி என்பது தகும். பல்லாண்டு பல்லாண்டு வாழக்கடவை யென்று வாழ்த்தி அனுப்பினன்.

ரு-வது துவிதவாதம்

முற்றிற்று.

---





திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

கூ - வது

# விசிட்டாத்துவிதம்.

## சாமானிய சம்பாஷணை.

ஞா-வி௵— விசிட்டாத்துவித பதத்துக்கு அருத்தமென்னை?

வி-விடை— விசிட்டம் - கூடியிருக்கிற, துவிதம் - எனப்படும்.

ஞா-வி௵— எந்த வேதவாக்கியங்காரணமாக விசிட்டாத்துவிதம், நிலைநிறுத்தப்பட்டது?

வி-விடை— தத்வமசி வாக்கியங் காரணமாக வென வறிக.

ஞா-வி௵— இவ்வாக்கியம் அவர்கள் கருத்துக்கிணங்க இடங் கொடுத்தது எங்ஙனமெனின்?

வி-விடை— தத்துவமென்பது; தஸ்யபாவா, தத்துவம்; எனப் பிரிக்கப்பட்டுத், தஸ்யா-பரத்தின், பாவா-தர்ம்மமாக அசி-ஆனாய், எனப் பொருள் தரக்கிடந்தது. கருத்து; பரவஸ்துவின் தர்ம்மமாக-ஆனாய். உதாரணம் ப்ராமணத்வம்-சூத்ரத்வம்-சன்யாசத்வம் என்பவற்றில்-த்வமென்பது, தர்மத்தை விளக்கி நின்றாற் போலும்.

ஞா-வி௵— இங்கே தர்மமென்றது யாதெனின்?

வி-விடை— அவரது எண்ணிறந்த கல்யாண குணங்களை.

ஞா-வி௵— கல்யாண குணங்கள் ஆனாயென்பதின் அர்த்தமென்ன?

வி-விடை— எத்தவம் புரியினும் அப்பரவஸ்து வாகாய்; அப்பரவஸ்துவின் கல்யாணகுணங்களில் ஒன்றானாய் என்பது தோன்றக் கூறினதெனவறிக.

ஞா-வி௵— எங்ஙனந் தெரிந்துகூற வந்ததெனின்?

வி-விடை— அவன் சமஷ்டி, இவன் வியஷ்டி, என்னு முபாதி பேதத்தினாலும்; அவன்-சர்வக்ஞன், இவன் கிஞ்சிக்ஞன், என்னுங் குணபேதத்தினாலும்; அவன் சர்வகிருத்தியத்திற்குங் கர்த்தா, இவன் அகர்த்தா, என்னும் பிரபுத்வபேதத்தினாலும்; அவன் ஈவோன், இவன் இரப்போன்என்னும் ஆண்டான் அடிமைபேதத்தினாலும்; சீவனைப்பர

மெனவும், பரத்தைச் சீவனெனவும், வழங்காமையாகிய பெயர்பே தத்தினுலும்; அவனையன்றி ஆன்மாவும், அவனது உபாதித் திரியத்தை யன்றி இவனது உபாதித்திரியமும் இல்லாத அபேத காரணகாரிய பேதத்தினுலும்; அவனுக்கிடம் எங்கும், இவனுக்கிட மேகதேசம் என்னும் இடபேதத்தினுலும், சீவேஸ்வரருக்கு எங்ஙன மைக்கியம் வாய்க்குங் கூடாமையால் இந்நிலைமைகளைத்தெரிந்து கூறவந்ததெனவுணர்க.

ஞா-வின— இஃது உன் சுயயுத்தியோ, மேற்கோள் உளதோ வெனில்?

வி-விடை— மேற்கோளும் உண்டென வறிக.

ஞா-வின— அஃதியாது?

வி-விடை—"விண்ணுருவ மீசனென்பார் வேற்றுருவஞ் சீவனென்பார், கண்ணுமிரவியும்போற் காணென்பார் - திண்ணமதாய், அத்துவிதமாகாது" என்பதினுலும்; "பேதமானதுவுங்கேளாய் பெயரானு மிடங்களானும், ஓதருமுபாதியானு முடலானு முணர்வினுனும், பாதலம் விசும்புபோலப் பலதூர மகன்று நிற்பார், ஆகலாலிவர்க் கெந்நாளு மைக்கிய மென்பது கூடாதே" என்பதினுனும் உணர்க.

ஞா-வின— இதேபிரகாரமாகச் சைவசித்தாந்திமுதலிய பேதவாதிகள் பிரதிவாதிக்க; அதனைத் துவிதமெனவும், இதனைவிசிட்டாத் துவித மெனவுங், கூறவந்தது எற்றுக்கெனின்?

வி-விடை— அது செகசீவ பரமாகிய திரிபதார்த்தமும் தனித்தனிவெவ்வே றெனவும், இது பரமாத்ம வியாபகத்தில் மற்றிரண்டும் வியாப்பியமாகக் கடலில் அலையாதிகள்போற் கூடியிருப்பதால் விசிட்டாத் துவிதமெனவுவ், கூறவந்ததெனவறிக.

ஞா-வின—விசிட்டாத்துவிதத்திற்கு இங்ஙன மேற்கோ ளுளதோ வெனின்?

வி-விடை— உண்டு.

ஞா-வின— யாதெனின்?

வி-விடை—"தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண்டடங்கடல், தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல், நின்னுளே பிறந்திறந்து நிற்பவுஞ் சரிப்பவும், நின்னுளே யடங்குகின்ற நீர்மை நின்கணின்றதே" என்பதினுலுணர்க.

ஞா-வினு— கடல் நீரும் அலையாதிகளும் அபேதமாயிருக்க, இதனைத்திருட்டாந்தமாகக் கூறவந்தது சகசீவர்கள் பரமாத்மாவுக்கு அபேதமா யிருப்பதுபற்றியன்றோ வெனின்?

வி-விடை— ஆம்; உண்மையே, உபமான மெல்லாம் ஏகதேச மேயன்றி வேறல்ல. வியாபக வியாப்பிய விலக்கணந் தோன்ற இங்கே இவ்வுபமானங் கூறினதென்றறிக.

ஞா-வினு— "மண்ணின்விகாரமனிதாதிதோற்றமன்றோ, மண்ணுருவாப் பார்க்க வலியில்வீர்-மண்ணுருவ, பாவமு மென்னென்ன பாவமாப்போகுமோ, ஆவதறியீர்க்கிதெனவாம்" எ-து. மனிதர்-மிருகம் - பட்சி - நிலத்திலூர்வன - சலத்தி லூர்வன-தாவரம்-அண்டாண்ட கோடிகளாகத்தோற்றப்பட்ட வடிவங்களனைத்தும், மண்ணினது விகாரரூபமன்றோ, இங்ஙனமிருக்க; இவையனைத்தையு மண்வடிவாய்ப் பார்க்கின், திணை-பாலிட சங்கற்ப விகற்பங்களும், யானெனதென்னு மகம்பாவங்களும், பந்தஆனிவிர்த்திகளும், சுகதுக்கங்களும், எங்ஙனமுண்டாம். ஆதலின், மண்ணுருவாப் பார்க்கத்தக்க திடஞ்ஞான வலியில்லாதவர்களே! நீங்களா, பகவத் நிலையை அளக்கவல்லீர். போதும்-சமஸ்தநாமரூபங்களையு முன்னே மண்ணுருவாப் பாவியுங்கள்; முதிர்ச்சியில், அந்தமண்ணுருவபாவமும் அப்பாலுக்கப் பாலென்னென்ன பாவமா முடியுமோ, அங்ஙனமாவது அனுபவித்தறியாத வுமக்கு நீரிங்கே நாட்டப் புகுந்தவிசிட்டாத்துவித வாதமாகிய இது என்ன பயனுளதாம். எ-று. எனவே; பரமாத்மசோதனையின்றி அமையாதென்பது பெற்றும். ஆதலின், வஸ்துசோதனையின்றிச் சகசீவபரநிலையின் உண்மை யெங்ஙனம் விளங்கு மெனின்?

வி-விடை— சோதனையாதுக்கு; இருக்கிற சகத்தைக்கொண்டு கண்ணுக்குப்புலப்படற்கு எட்டற் கெளிதிலில்லாத பரம்பொருளைச் சிந்தித்து வந்திருப்பதற்கு யாது சந்தேக முளது. விபரீதமெல்லாம் பேசுகின்றீரென வறிக.

ஞா-வினு—"அசத்தைச்சத்தென்பீ ரசத்தென்பீர்சத்தை, அசத்தறியீர் சத்துக்கயலா-நிசத்தையெங்ஙன், மாறன் போற்காணவலீர் மாசற்றான் றீர்வெமக்காம், ஏறுமோ நுஞ்சொலெமக்கு" எ-து. அசத்தெனப்படுமவற்றை யெல்லாஞ் சத்தே யென்றும், சத்தென்பது யாதோ் அதனை யசத்தே யென்றுங், கூச்சமின்றிக் கூறுவீர். அன்றியும்; சத்தென்பதற்கு அன்னியமாகவும், அசத்தோர் முதலாகவும்,

வேறு பிரித்தறிதற்கு வகையறியீர். எம்பெருமானாகிய சடகோபரை ப்போல் நிசவடிவமாகிய சத்தை யெங்ஙனங் காணவல்லீர், அந்த மாசற்ற சடகோபரது தீர்ப்பே யெமக்குத் தீர்ப்பாகும். அந்நிலை அணுவுங் கேட்டறியாத வுமது தீர்ப்புமொழி யெமக்கெங்ஙனஞ் செவியிலேறப்பெறும். எ-று. எனவே; சுருதியுத்தி யனுபவத்துக் கொவ்வா மொழியென்பதாயிற்று. இங்ஙனமிருக்க; உமது வசனம் ஏற்கப்பாலதோ வெனின்?

வி-விடை— அநாதியாத் தொன்றுதொட்டு வந்த பாகவதாள் யாவரும் இங்ஙனம் விசாரித்தன்றோ, பரமவைகுந்தத்தில் நித்தியசூரியானது. இதென்ன புதுமை; சிலரே யன்றிப் பலருமன்றே, இவ்விரு திறத்தருந் திருத்தொண்டு மேலீட்டாலும், பத்தி மேலீட்டாலும், ஈஸ்வரார்ப்பண மேலீட்டாலும், நம்பிக்கை மேலீட்டாலும், மேற்கதியடைந்தனரென வேதாகம கீதைகளும், புராண இதிகாசங்களும், அறுபத்துநாலுகலைகளு முறையிடுவதினால் முக்கியமாய் வேண்டுவதின்றெண வறிக. பேசின் முடிவின்றி விரியும்.

ஞா-வி—இது நிற்க; முன்னர்பரமாத்மவியாபகத்திற், சிற்சடபேதங்க ளனைத்துஞ் சேடமின்றி யடங்கி யபேதமாய்க் கூடிநிற்பது விசிட்டாத்துவிதமென்றீர்; இது வேதசம்மதமா, புருஷ சம்மதமா? வேதசம்மத மெனின், ஞாயமிருக்கவேண்டும். புருஷ சம்மத மெனின், அநுபவமிருக்கவேண்டும். இதில்நின்கருத்துயாதெனின்?

வி-விடை— ஞாயங் காரணமாகவாதலின் வேதசம்மதமேயென்றனன்.

ஞா-வி— எங்ஙனமெனின்?

வி-விடை— பேதமெனிற் பரிபூரணதோடமும், அபேதமெனில் நிர்விகாரதோடமும், பேதாபேதமெனில் விவர்த்ததோடமும் வருமென்பீர்; இங்ஙனமெல்லாம் பாராதுகேட்கில் சொல்லுவன். அதாவது; வேதம் ஈசுரவாக்கியமாதலின் அவர் ஞாயமின்றிச் சொல்லுவாரா? யுத்தி யாதுக்குச், சுருதியே எமக்குப் போதுமானபிரமாணமென்றனன்.

ஞா-வி—இப்படியே மற்றத் துவிதி-அத்துவிதிகளும் சொன்னால், மூவருக்கும் வாக்கியமொன்றல்லவோ, இவ்வொருவாக்கியம் இம்மூன்றவசரநிலை யுடைத்தெனக் கருதி யன்றோ மூன்று பாஷியக்காரரும் மூன்றுவிதமாகப் பாஷியஞ்செய்தார்கள். வாக்கியயோசனையின்றிச் செய்வார்களா? செய்வார்களெனின், மூடராகவேண்டும்.

அவர்கள்கூறிய பாஷியங்களை யேற்பவரும் மூடராகவேண்டும்; அங்ஙனங்கூறலாமா, கூடாதே இதுபற்றி யாது கூறுதியெனின்?

வி-விடை— இம்மூவரும் பண்டிதத்திறத்திலேற்றக் குறைவினரன்றே; இவர்கள்மேற் பழிகூறுவது கூடாது. அவர்களது யுத்தியும் ஞாயமு மெமக்குத் தோன்றவில்லை யென்றனன்.

ஞா-வினா— ஆராய்ந்து தெளிவதற்கு முன் போதிக்கப்புகுவானேன்?

வி-விடை— பகவத்தியானஞ் சிறிதும் எண்ண மில்லாதார்க்கேயன்றி யேனையோர்க்கன்றென்றனன்.

ஞா-வினா— அவராரெனின்?

வி-விடை— முற்றுந்தெளிந்த குருபீடத்தலைவரென்றனன்.

ஞா-வினா— அவரைக்காட்ட வேண்டுமெனின்?

வி-விடை— அங்ஙனங்காட்டிச் செய்தியெல்லாந் தெரிவித்து உறவாக்கித் தனதிடத்திற் சென்றனன்.

ஞா-வினா— அப்பால் நடந்ததென்னை?

வி-விடை— ஞாயவாதியானவர்; குருபீடத் தலைவரை நோக்கி, ஐயா! மூன்றவஸ்தையினையும், மூன்றவஸ்தாக்காட்சிகளையும், மாறுநிலையதெனவும், அந்தந்தாவஸ்தாவளவு தோற்றத்ததெனவும், யாவரு மனுதினமுங் காணுந் திரிசியானுபவமாதலால் இவை இரண்டுந் தாமல்ல, இவற்றைத் தம்மாலறியப்பட்டனவெனத்தள்ளி இவற்றோடு சலட்சணமாகவும், விலட்சணமாகவும், நின்றறியுந் தம்மைத் தனியே ஐயந்திரிபறக் காட்டவல்லா ரன்றோ தலைவனையுங் காட்ட வல்லராவார்; இதனைமறந்து மதத்தர் நாட்டு நிலையுள்ஒன்றுதானோ வுமது நிலையுங் கூறுகவென்றனர். அதற்கு விசிட்டாத்துவிதியும் அல்லவென்றனர்.

ஞா-வினா— ஆனால், தலைவனையறிந்து பூசிப்பது அறிவாதலினவ்வறிவே தானென்பதற்குப் பொருளோ, வேறோ, வெனின்?

வி-விடை— அறிவே யென்றனன்.

ஞா-வினா— அவ்வறிவு வுருவமோ, அருவமோ, ரூபாரூபமோ? உருவமெனின், நனவில் சடமாகிய தூலவடிவம். அருவமெனின், கேவலத்திற் சடமாகிய சூனியவடிவம். ரூபாரூபமெனிற் கனவிற் சடமாகிய சாயாவடிவம். இம்மூவடிவமுந் தன்னாலறிதற் பாலவாதலின் தானல்ல; ஆனால் தானாவதுதான் யாதோவெனின்?

வி-விடை— அறிதற்பாலது யாதோ வதுவென்றனன்.

ஞா-வி௲— அது தர்மம்; அதின் எதார்த்த இலக்கணம் யாதெனின்?

வி-விடை— சத்துஞ் சித்து மென்றனன்.

ஞா-வி௲— இதின் அர்த்தமென்ன?

வி-விடை— திரிகாலத்துமுள்ளது சத்து, அறிவது சித்து என்றனன்.

ஞா-வி௲— ஓர் முதலுக்கு இலக்கணமாதலின், அந்தமுதல் இன்னதெனத் தெரிவிக்கவேண்டுமெனின்?

வி-விடை—உபாதித்திரியவளவினதெனின், அவை தன்னாலறியப்பட்டதாதலானும், அவைமாறியக்கண்ணும் தானிருந்தறிதலினானும், அவைதானல்லவென்பீர். சாத்துவித-ராசத-தாமதமெனின், அது தன்பால் வந்து அகலத்தக்க குணத்திரயமாதலின், அதுவுந்தானல்லவென்பீர். அபிமானித்திரியமெனின், தன்னாலபிமானிக்கத்தக்கதாதலி னதுவுந்தானல்லவென்பீர். சீவாத்மா-அந்தராத்மா-பரமாத்மா வென்பவற்றுள் சீவாத்மாவெனின், உபாதித்திரயந்தானல்லா விடத்துத்தானாகுமா வென்பீர். அந்தராத்மா வெனின், உபாதித்திரயந் தானல்லவெனக்கண்டு கழன்ற அவசர நிலையாதலின், அதுவுந் தானல்லவென்பீர். பரமாத்மா வெனின், உபாதித்திரய முண்டானாலன்றோ, அவைதானல்ல அவற்றிற்கு விலட்சண சலட்சணமாயிருக்கு நிலைதானென்னலாம், அதுவுந் தன்னால் விளைந்த ஞானவத்தியாசமன்றோ; அதுவுந் தானல்லவென்பீர். இதற்கென்ன செய்வேனென்றனன்.

ஞா-வி௲— ஆனால்; தானென்பது இருந்துதானே இத்தனை பகுப்புந் தெரிவிக்கின்றது உனக்கு எட்டாததினாற் சதசத்தென்னலாமா?

வி-விடை— கூடாது.

ஞா-வி௲— ஆனால் யாதுதானோ?

வி-விடை—ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் அவ்விலக்கணங்களைத் தன்னி லொத்துப்பார்க்கும் அனுபவஞ் சற்றுமில்லேன் எங்ஙனஞ்சொல்வேனென்றனன்.

ஞா-வி௲—“தானல்லவற்றையெலாந் தானென்றறியவலீர், தானிருக்கு முண்மைநிலை தாமறியீர்-கோனிருக்கும், உண்மைநிலை கூறவலீர் ஓஒஒ மாச்சிறந்தீர், நுண்மைபுணர் வெங்கே நுவல்.” எ-து.

தானல்லாத வுருவ மருவம் ரூபாரூபமாயுள்ள தத்துவங்களில் ஒவ்வொன்றையுந் தானென்று அறியத்தக்க வலிமிக்கீர், ஆனல் தான் என்றும் ஒருபடித்தாயிருக்கும் உண்மைநிலே இஃதென்றறியீர், நீரா; எவ்வெவற்றிற்குந் தலைமையா நின்றுள்ள பகவத்நிலையின் உண்மையைக் கூறவல்லரானீர். ஆச்சரியம் ஆச்சரியம். இவ்விலக்கணவழியில் மிகவுஞ் சிறப்புற்றீர், உமக்கு நுட்பவறி வெங்ஙனே காண்கிலம், உளதேற் சொல்லுதி யெனக்கேட்க?

வி-விடை— எங்ஙனஞ் சொல்வ னென்றனன்.

ஞா-விஞ—சகசீவ பரநிலை இன்னதெனக் கணிக்கறியாத நீர், எங்ஙனம் போதக குருவாகச் சம்மதித்தீர், இதுநிற்க; இன்ஞென்று விசாரிக்கப் புகுதுமென வினவ?

வி-விடை— அங்ஙன மாகுக வென்றனன்.

ஞா-விஞ—"உலகெனி லொன்றையதற்குள்ள பெயர் வேறென், சொலற்கிலையேற் ருேற்றமோ சொல்லோ-பலவுந்தான், இப்படியே யாகுமெனி லென்னகு நும்வாதம், உப்பில் கறிபோ லுணர்." எ-து. உலகென்பது சொல்லோபொருளோ;பொருளெனில்,யாதென் வரும்-இஃதென ஒன்றைச் சுட்டில்-அதற்குரிய பெயர்வேறிருப்பானேன் வேறிருப்பதால் அப்பொருள் உலகெனப்படுமோ? சொல்லப்படாதெனில் தோற்றன் மாத்திரப் பொருளோ, சொன்மாத்திரப்பொருளோ? ஏனெனில்; இப்படியே சகல பொருள்களுந் தத்தமக்குரிய சிறப்புப்பெயர்களை யேற்றிருக்குமாயின், உலகெனற்குப் பொருளின்றி முடியும். முடியுமாயின் உமதுவாதம் யாதுக்கு? உப்பின்றிய கறிபோ லாமே யெனின்?

வி-விடை—தோற்றன்மாத்திரமுஞ் சொன்மாத்திரமுமாயின், பசி - தாகந் - காமம் - தவிப்பு முதலியவற்றை உலகந் தணிக்குமா; தணிப்பதால் மித்தை யென்னலாமா, கூடாதெனவறிக.

ஞா-விஞ—"முதற்கருவி தள்ளிமுதலெது வென்ருயில், எதுவுமலவென்றேயேகும் - எதன்முடிவும், எட்டீராடியெங்ங னெட்டுவீர் தன்னையன்றிக், கட்டமெனிலேன்வாதங்காண்."எ-து. முதற்கருவியாகிய மண்ணுலையன்றிக் கடபடம் ஓர் முதலாகுமா; அதுபோல, எவ்வகைப்பட்ட பொருள்கட்குமுள்ள முதற்கருவியைத்தள்ளி முதலெது முதலெதுவென்ருராயுமிடத்து எதுவுமுதலல்ல முதலல்ல வென்றேபோகும். இங்ஙனம் போவதால் எதன்முடியும் எட்ட வகை

யறியீர். அவ்வவற்றிற்கு ஆதியையுந் தன்னையன்றி யெட்டவகை எங்ஙனம் அறிவீர். அவ்வவற்றின் முதற்கருவியைத்தள்ளி முதலைக்கண்டு பிடித்தலேகூடாது. அங்ஙனங்கூடாதமுதலுக்கு ஆதியும் அந்த முங்கணிக்கப்புகுவது மிகவுங் கட்டமெனில், விசிட்டாத்துவிதத்தை ஸ்தாபிக்கப் புகுந்த வாதமும் உமக்கேன், அதனால் என்ன பயனுளதாமெனின்?

வி-விடை— பகவத் சன்னிதியில் நாங்கள் நித்திய சூரியர்போலிருப்பதாகப் பாவித்திருக்குந்திடமே பயனெனவறிக.

ஞா-வி௵— அந்தந்த மதஸ்தரும் இவ்வாறே தத்த நூல்களிற் சொல்லியவாறு பாவித்திருப்பதே முத்திப்பயனாகவேண்டும், அங்ஙனங் கொள்ளின் ஒருவர் பயனை ஒருவர் ஏலாததற்கு ஏதென்னையெனின்?

வி-விடை—ஒருவர்நிச்சயம் ஒருவர்க்கு ஏலாததுபற்றியென்க.

ஞா-வி௵— யாதினாலெனில்?

வி-விடை— பரிட்சையில்லாததினா லென்க.

ஞா-வி௵— அதுநிற்க; பதியைப் பற்றிப் பேசுமிடத்திற் பேசுதும். இங்கே பதியைப் பாவிப்பதும் பற்றன்றோவென்பதைப்பற்றி, "எப்பற்றுந் தங்கற் கிடந்தா னுளமன்றோ, எப்பற்று மல்லவே யெவ்வுளமும்-ஒப்பில், பரமுமயலதனாற் பற்றே சுயம்பு, தெரிய வுரை யாதோ தெளிந்து" எ-து. முன்னர் புறப்பற்றாயுள்ள சகத்தடிப்பின் உண்மைவடிவு ஈதென விசாரித்துத் தெளிந்தாயில்லை, இப்போது அகத்தடிப்பாகிய அகப்பற்றைப்பற்றிக் கொஞ்சம் விசாரிக்குதும். யாதெனில்; எந்தவிதப்பாசமாயுள்ள பற்றுக்களுந் தங்கற் கிடமுள்ளமல்லவா? உள்ளமாயினும், எந்தெந்தபற்றும் அந்தந்த வுள்ளத்தை விட்டு நீங்கலால் எந்தவுள்ளமும் எந்தப்பற்றுமல்லவே? விடயப்பற்று அன்னியமாதலின் நீங்கும். பரவஸ்துவைப்பற்றும் பற்றோ வெனில் அதுவும் அன்னியமாதலால் விடயம்போல் ஓர் பற்றாகும். ஒப்பற்றதேயெனின், பொன் விலங்கு போலாம். ஆதலின் சுயம்பான பற்று யாதோ விதனைத் தெளிந்து விளங்கச் சொல்லுதி. எ-று. எனவே; எவ்வுளத்திற்கும் விடயமும் பரமும் அன்னியமாதலால் சுயம் பல்லவென்றவாறாயிற்று. இதற்குயாதுவிடை கூறுதி யெனின்?

வி-விடை— என்ன சொல்லினும் பரத்தையன்றிச் சுயம்பில்லையெனவறிக.

ஞா-வி—இப்போது நமதுள்ள மெல்லாம் பரவடிவமாக வில்லையே, இதுவே அன்னியமா மென்பதற் குதாரணமா மெனின்?

வி-விடை— எந்த அகப் பற்றிற்கும் நித்தியத்துவ மில்லாமையால் இதுபோல்வதன்றென வறிக.

ஞா-வி— நித்தியத்துவமானல் இப்போது இருக்காதா வெனின்?

வி-விடை— இருப்பது தெரிய வில்லை யெனவறிக.

ஞா-வி— யாதினலெனின்?

வி-விடை— அஞ்ஞானத்தினலே.

ஞா-வி—அஞ்ஞானத்தினலே பரமும், ஞானத்தினலே விடயமுந், தெரியாது அன்னியோன்னியா பாவமானதால் எப்பற்றுஞ் சுயம்பல்லவே யெனின்?

வி-விடை— ஞாயமே; இதற்கென்செய்வே னென்றுகூறிச், செகத்து உண்மையல்லாதாயின்-சத்துபோற் றோற்றுமா வென்றனன்.

ஞா-வி— மெய்யே, உனது சிந்தை வேருயின் பொறிகளிருந்தும் விடய மறியலாமே; சிந்தை ஒன்றுபட்டவிடத்தன்றோ; அந்தந்த விடயம் அந்தந்த பொறிகட்கு விளங்கும். ஆதலின் ஆன்மா தன்சத்தைக் கொடுத்தவிடத் தன்றோ அதுசத்தாக விளங்குவதும், அதனைச்சத்தாகக்காண்கின்றதும், வேறுண்டோ வெனின்?

வி-விடை—மெய்யே,அனந்தவிதபேதமாயுள்ள அந்தரங்களுக்கு அசைவாகிய சத்தைக் கொடுத்தமாத்திரத்தில் ஒவ்வொன்றுந் தத்தமக்கியைந்த வண்ணம் புடை பெயர்ந்து அனந்தவித பயனைத்தரும் இதில், அந்தரங்க ளில்லாவிடத்து எதற்குத் தன் சத்தைக் கொடுப்பது. அதுபோல; முன்னமே பிரிதிவு முதலிய தத்துவங்கள் உண்டாயிருந்தால்தானே, அறிவு தன் சத்தைக்கொடுத்து அவற்றைச்சத்தாக்கி அவற்றாலாய பயனை யனுபவிக்கின்றது, என்னு மிடத்தில் சகத்து அனதி நித்தியமென்பதுதானே; விளங்குகின்றது. ஆதலால் மித்தையெனல் கூடாதெனவறிக.

ஞா-வி—யாதேனும் விகார மென்னுதிருக்கச் சுயம்பு ஒன்று உணர்த்தில் ஏற்குது மெனின்?

வி-விடை— அங்ஙனம் பார்க்கில் எதுவு மில்லையென்றனன்.

ஞா-வி— இதுகாறுந்திரிசிய முண்மையாகத் தோற்றலைப்பற்றிக்கூறினும். இனிக் காண்டலைப்பற்றிக்கூறுகின்ரும்; அதாவது;

கண்ணுக்குங் கருத்திற்கும் லட்சியார்த்தமாக வுலகினைச் சத்தியமெனக் கொள்ளலாமா வெனின்?

வி-விடை—தோற்றுவதனைக் கொள்ளவேண்டிற்றேயென்றனன்.

ஞா-வினா— தோற்ற முண்மையல்லவென் றிதுகாறுஞ்சொல்லினம். அதனை இருந்தவண்ணங் காண்கின்றது மூடமன்றோவெனின்?

வி-விடை— சகமிருப்பதுபற்றியன்றோ, சகலவிதபேத விஷையங்களுள் ஒவ்வொன்றிற்கும் அனந்த சாஸ்திரங்கள் உண்டாயிருக்கின்றன. இங்ஙனமிருக்கச்; சகத்தை இருந்த வண்ணம் அறிகின்றது மூடமன்றெனவறிக.

ஞா-வினா— மூட மன்றெனிற் சகத்து விருப்பு வெறுப்பென்பதில் ஒன்றின்பாலதாகாது இரண்டின்பாலதாவானேன்?

வி-விடை— சுபாவ மென்றனன்.

ஞா-வினா— தோன்றுமை யாலோ வெனின்?

வி-விடை— அல்லவென்றனன்.

ஞா-வினா— எங்ஙன மெனின்?

வி-விடை—சீதளம், உட்டணம், தண்ணீருக்கும் அக்கினிக்கும் சுபாவமெனின், எங்ஙனமெனக் கேட்கலாமா, சுபாவத்துக்கு விதியுண்டோ வென்றனன்.

ஞா-வினா— சகத்து விருப்புவடிவெனின், பின்னர் வெறுப்பு வடிவு ஆவானேன், வெறுப்புமயமாயது மீண்டும் விருப்புமயம்ஆவானேன், இது அதனது சுபாவமன்று; அறிவினது விகற்பசிந்தையேயன்றி வேறன்று. எங்ஙனமெனின், அறிவானது; ஒரு பொருளின் முதற்கருவி ஆகாரமாகாவிடத்துப் பிரியப்பொருளாயின் பிரியத்தையும், அப்பிரியப் பொருளாயின் அப்பிரியத்தையும், இவ்விரண்டுதன்மையும்அல்லாத புல் முதலியனவாயின் பொதுமையினையும், தரும். முதற்கருவி ஆகாரமான விடத்துப் பிரியம்-அப்பிரியமாயும், அப்பிரியம் அதுவுமின்மையாயும், பிரியாப்பிரியம்-உபயசூன்யமாயுமிருக்கும்; இதெல்லாம் அறிவின் விருத்தி பேதமேயென்று அனுபவம்அனைவர்க்கும் இருத்தலாலும், "தானுண்டாயிற் சகலமுமிருக்கு"மெனச்சான்றோர் வசனமிருத்தலாலும், இதற்குத்தரம் யாது கூறுதியெனின்?

வி-விடை— சொல்லற்கிடமின்றேனும், எல்லாமுண்டாயிருக்க அனுபவமிருத்தலால் எங்ஙனஞ் சம்மதிப்பேன் என்றனன்.

ஞா-வின— "ஆய்தலுக்குமுன்பி னனைத்துமா யன்றாகிப், போ ய்வுறாவ தெத்தருமம் போவதெங்ஙன்-ஆய்தற், கிசைந்தவறிவுலகே லேன்மாறவில்லை, மயக்கறுக்காய்க் கேனிந்த வாய்." எ-து. எல்லா முண்டாயிருக்கும் அனுபவ மெய்யாயின், ஒன்றுகேள், இச்சகம்-பே தம் அபேதமென்னும் இரண்டுவாதத்தானும் ஆராயப்புகுதற்கு முன் னர் சகல நாமரூப வடிவங்களாயும், பின்னர் இவையனைத்து மல்லாதா யும் போவது அறிவினது தர்மமா, செகத்தினது தர்மமாவென வரும் இங்ஙனம் ஆராய்தலினால் என்னபயனென்னையாயின், இங்ஙன முண்டாய ஐயமகலுமாறு தானென்ஙனேவெனவரும், ஆராய்தற் கியைந்த அறிவினது தர்மமென்னையாயின், சகலகேவலமாய்நின்று அவற்றை அந்தந்த வவசரத்தில் அவற்றிற்குச் சாட்சியாய் நின்று ணர்வது இரண்டிடத்து மாதலால் இங்ஙனமாறுகை அறிவினதன்று. செகத்தினதென்னையாயின், முன்னும் பின்னு மிருந்த வண்ணம் இருத்தலால் இங்ஙனமாறுகை சகத்தினது தர்மமன்று. யோசியாது இவ்விரண்டினதென்னையாயின், ஏன் மாறவில்லை யெனவரும். இது தொலையா மயக்க வழக்கென்னையாயின், இவ்வாறுள்ள மயக்கமனை த்தும் அறுத்துத்தெளியாத வுனக்கு விசிட்டாத்துவிதத்தை ஸ்தா பிக்கப்புகுந்த இந்த வாயேன் இதனால் பய னென்னை யெனின்?

வி-விடை— முன்னோர்கள் தெரியாமலா நிலைநிறுத்தினார்கள், இது மூடமன்றென வறிக.

ஞா-வின— முன்னோர்கள் காரியகாரணமற்றது பரமாத்மா வென்பதற்கு நீ சம்மதியாத தென்னை?

வி-விடை—அதற்கு அருத்தம் வேறிருப்பதுபற்றி யென வறிக.

ஞா-வின— அஃதியாதெனின்?

வி-விடை— அதி ரகசியமென வறிக.

ஞா-வின— அறியத்தக்கார் யாரெனின்?

வி-விடை— அடிமை புகுந்தா ரென்றனன்.

ஞா-வின— இப்படியே சகல மதஸ்தருந் தமக்குத்தோன்றுத விடத்தே சொல்லுகின்றார்களே; அதிலே இது சிறந்ததென்னை யெனின்?

வி-விடை— அததற்கு அதது சிறந்த தென்றனன்.

ஞா-வி௵— சகசிருஷ்டியைப் பற்றிப் பலசமயத்தரும் தத்தமக்குத் தோன்றியவாறு ஒருவர்க்கொருவர் முரணுக வெழுதி வைப்பார்களா’ யாதுஞ் சிறந்ததன்றே யெனின்?

வி-விடை— பயபத்திக்கு இணங்கினுர்க்குச் சிறந்ததாகவும், இணங்காதார்க்கு அன்றுகவும், இருப்பது மெய்யே யென்றனன்.

ஞா-வி௵— பத்திமார்க்கத்துக்கு இயைந்தவர்க்கு வஸ்துபரிசோதனையும், பாவா பாவாதீத மாதலும், முதலிய நிலையேற்ற பரிபாகங்கள்யாதுக்கு? இங்ஙனமிருக்க; யோக, ஞானங்களைப்பற்றி யுத்தி அனுபவமின்றித் தெளிந்த ஏட்டுஞான மென்னபயன் தருமென்றதை யெடுத்தாள் வதோ வெனின்?

வி-விடை— கருடன்முதலிய பறவைகள் எவ்வளவுதூரத்து உயர்ந்து பறக்கினு மமைதலுக்கிடந் தரையாதல்போல், யோகஞானங்களிற் சிறந்த ததாகார நிலைக்குமெல்ல மெல்ல தத்துவங்களை யெல்லாந் தாண்டி இனி மேலென்பதில்லாமற் பற்றிநிற்பினும், பிராரத்த முடிவில் ஞானதனுவைத் தருகவெனப் பகவத்யானஞ் செய்வது அவசியமான வேண்டுகை யாதலால், முடிவிலும் ஆண்டா னடிமை விடற்பால தெங்கே யென்றனன்.

ஞா-வி௵— இரண்டற்றது ஞான மாதலால், நீர் சொல்லியது ஞான நிலையன்று. அதுநிற்க; சீவநிலை இன்னதென இதுகாறும் ஐயந் திரிபறத் தெளிவிக்கத் திறமில்லீர்; இனியாவது, சீவ நிலையைப் பற்றி விசாரிப்பமா வெனின்?

வி-விடை— அங்ஙன மாகுக வென்றனன்.

ஞா-வி௵— “நானென்ப தெத்திணைபா னண்ணுவதான் மாற லெவன், நானென்னு வில்லையுயிர் நாடுங்கால்-நானென்னல், ஆமே லணுமகத்திங் கல்லவுபாதியதால், ஆமாறு தானென்னறை” எ-து. ஆன்மா இன்னதெனப் பின்னர் கணிக்குதும். நானென்பது திணைபாலிடத்தினுள்;எந்தத்திணைபாலிடத்தது; அன்றெனின்,திணைபாலிடமாகவிருக்குமா? இருப்பதால் எத்தகையது. அந்தந்தப்பிறவி இயல்பினதெனின், எந்தநானுக்கு எந்தபிறவிசுதந்திரம். சுதந்திரமாயின், மாறுமா? மாறுவதால்சுதந்தரமல்ல; சுதந்தரமல்லாததால் நானென்னுத வுயிர்களுண்டா? இல்லை. ஆனல் நானெனலைப்பற்றி ஆராயுமிடத்து எவ்வளவு பிரமாண முடையது; அணுமகத்தெனில், அது

உபாதியாதலால், நானென்பதுமல்ல, அதினளவுமல்ல, என்றால் நிரு பிக்கலாகாதெனின், ஆகிறவிதந்தான் எப்படி சொல்லுதி யெனின்?

வி-விடை— இல்லாத கேள்வியெல்லாங் கேட்கின்றனை, நீ வாயாடி யென்றனன்.

ஞா-வி— ஆனால் இன்னொன்று கேட்கின்றனன் அதுஞாயமோ, அல்லவோ வெனின்?

வி-விடை— யாதென்றனன்.

ஞா-வி— "அல்லவெனு தோர்பொறியி னந்தரங்க மாமுடிபை, வல்லவர்களேற்க வகுத்துரைக்கில் - சொல்லவலாய், ஆன்மாவை லட்சணத்தோ டானபரிட்சையுடன், தான்குருவென்றெண்ணி லென்ன தான்." எ-து. ஞானேந்திரியமைந்தனுள், ஒன்றை யெடுத்துச் சோதிக்குமிடத்து, அல்ல அல்லவெனப் போகாது அதன் அந்தரங்கமானமுடிபை அவ்வனுபூதியில் வல்லவர்களேற்க வகுத்துரைப்பையாயின், ஆன்மாவென்பது இன்னதென அதனது இலக்கணத்தோடு ஒத்த பரிட்சையினால் அதனை விளங்கச்சொல்ல வல்லனுவை. இங்ஙனமாய திறமை தன்பால் இல்லாவிடத்துத் தன்னைத் தான் குருவென்று எண்ணிக்கொள்வதாலாய பயன்யாது. இதற்கு யாது கூறுதியெனின்?

வி-விடை— இதெல்லா மெமக்கு வேண்டுவ தின்று, ஆண்டானடிமைத்திறங்கூறப் போதக குருவானே மென்றனன்.

ஞா-வி— இன்னொன்று சிறிய வினு கேட்குது மெனின்?

வி-விடை— யாதென்றனன்.

ஞா-வி— திரிபுடி யென்பது யாது?

வி-விடை— ஞாதுரு-ஞானம்-ஞேயமென்றனன்.

ஞா-வி— ஞேயமென்பது அறிபடுபொருள்; அது உலகம். அது இன்ன நிலையதென்றும்; ஞானம்-அறிவது யாதோ அஃதின்ன நிலையதென்றும்; ஞாதுரு அறிவான், அவன் இன்ன நிலையினனென்றும்; கூறத்தெரியாது நின்றனை. இது நிற்க; திரிபுடித்தோற்றமு மறைவு மெங்கேயெனின்?

வி-விடை— பகவானிடத்தென்றனன்.

ஞா-வி— எங்ஙனந்தெரியுமெனின்?

வி-விடை— சுருதி சம்மதமென்றனன்.

ஞா-வி-- என்ன ஞாயத்தாலெனின்?

வி-விடை--ஈஸ்வரவாக்கியத்திற்கு ஞாயம் யாதுக்கென்றனன்.

ஞா-வி-- புலமைத்திற மிக்கார் வாக்கியமல்ல இது என்பதற்கு அடையாள மென்னையெனின்?

வி-விடை-- நெறிபிறழார் வாக்கிய மிங்ஙன மிருக்கினும் அஃது ஆகாதென்றனன்.

ஞா-வி-- எங்ஙன மெனின்?

வி-விடை-- அது கேளாதே யென்றனன்.

ஞா-வி-- ஞாயமின்றோ வெனின்?

வி-விடை-- சபிப்பனென்றனன்.

ஞா-வி-- மூர்க்க ரன்றோ வெனின்?

வி-விடை-- சாபானுக்கிரகமுள்ள சான்றோரெல்லா மூர்க்கரோவென்றனன்.

ஞா-வி-- தக்ககாரணங் கண்டா லன்றிச் சபியாரென வறிக அதுநிற்க; அகம்புறத்திற் காணப் படுபவைகள் அனைத்துந் திரிசியமன்றோ, அவைகள் தத்தமக்குரிய காரணங்களில் ஒடுக்கிக்கொண்டு போகப் போக அந்தந்த ஆகார மாகியும், நிலையாததால் மனதுக்கு எந்த வாகாரஞ் சுதந்தரமோ கண்டுசொல்லுதி யெனின்?

வி-விடை-- ஆராய்தலில்லாததால் எதுவுஞ் சுதந்தர மல்லவென்றனன்.

ஞா-வி-- ஆராய்ந்த விடத்தாவது சுதந்தர வாகாரம் யாதெனின்?

வி-விடை-- பகவத்தாகாரமே வேறின் றென்றனன்.

ஞா-வி-- விடயம்போல் அதுவு மன்னியமெனின்?

வி-விடை-- உயிர்க் குயிரான துணையாதலின் வேறன்றெனவுணர்க.

ஞா-வி-- இப்போ தல்லாததால் அப்போ தெனின், அன்னியோன்னியா பாவம்வரும். எப்போதுந் தன்னைவிட்டு நீங்காததால் வராதெனின், இப்போது வந்ததற்கு ஏதென்னையெனவரும். இங்ஙனமுடிவு பெறுமையால் எதுவுமனதுக்குச் சுயாகாரமன்று. இதைக் கணிக்க வகையின்றிய நீரா ஆன்மநிலையைக்கணிக்கப்புகுந்தீர். போதுமடக்கும், பரத்தின் நிலையு மிவ்வாறுகாமற் கூறெனின்?

வி-விடை— அகண்ட பரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாச சொரூபமெனின், தோடமென்னை யென்றனன்.

ஞா-வினா— கண்டத்தைப்பற்றி அகண்டமெனவும், ஏகதேசத்தைப்பற்றிப் பரிபூரணமெனவும், அநிர்த சடதுக்கத்தைப்பற்றிச் சச்சிதானந்தமெனவும், கற்பிதத்தைப் பற்றிச் சுயம்பிரகாசமெனவுங், கூறவந்ததே யன்றி இது பரவஸ்துவுக்குரிய எதார்த்த லட்சண மன்று. மற்றலட்சணங்களும் இதுபோல்வனவாம். யாதினுந்தாக்கற்றதெனின், எல்லாமா யென்றுரைப்பானேன்? சிருட்டிக்கு முன் தன்னைத்தவிரத்திரணமுமில்லாததாலெனின், அல்லவுமா யென்றுரைப்பானேன்? சமஸ்தமும் நசிக்கினுந் தானசியாததாலெனின், சமஸ்தமுந் தன்னைப்போல் அநாதி நித்திய மென் றுரைப்பானேன் சித்து சடமென்பவற்றுள்;சித்தாகிய சராசரங்கள் உடல்களெடுத்தெடுத்துக் கணக்கின்றி யழியினும் தாம் அழியாததாலும், சடரூபமாகிய பிரிதிவாதிபூதபௌதிகங்கள் தத்தமக்குரிய மூலகாரணங்களினின்று விகாரித்தழிந்து, மீண்டுமீண்டு இங்ஙனங்கணக்கின்றி இந்நிலையதாயினும் அவ்வவற்றிற்குரிய மூலாதாரம் அழியாததாலும், அநாதிநித்திய மெனப்பட்டதெனின், இவையெல்லாம் பரமாத்மா வியாபகத்தி லென்பானேன். அதையன்றி ஆதாரமில்லையெனின், அதையன்றிச் சித்து சடபேதங்கள் வருவானேன். அதற்குச் சுபாவமெனின், அதையன்றிச் சித்து சடபேதங்களுக்கு முதற்கருவியில்லையே வேறென்பானேன். மீண்டும் முதற்கருவியாக வேண்டுமே; ஆகாததாலெனின், உபாதித்திரியமன்றோ; சித்து-இதற்கு முதற்கருவி காணாதுரைப்பானேன். அதுதோன்ற வில்லையெனின், வியாபகத்தி லென்பானேன். சுருதி சம்மதமெனின், யுத்திக்கு மாறுவானேன். சுருதி யீஸ்வரவாக்கியமன்றோ? யுத்தியாதுக்கெனின், இங்ஙனமே - துவிதியும்-அத்துவிதியுங் கூறின், இம்மூவருக்குந் தத்வமசிவாக்கிய மொன்றா யிருக்கக் கட்சி மூன்றுவானேன். இதற்கு யாது கூறுதி யெனின்?

வி-விடை— பசுவும்-பாசமும் பதிக்கு வேறெனின், பதியைப் பரிபூரணனென்னல் கூடாது. கூடுமெனின், துவிததோடமும்; சித்து சடமொன்றெனின், கண்-உலகமாகவும்-உலகங் கண்ணாகவு மாகவேண்டும், ஆகாததால் அத்துவித தோடமும் வருவதால், அவற்றை மறுத்து விசிட்டாத்துவிதத்தைத் தாபித்ததெனின்.

ஞா-வி௵— யாதுகாரணங்கொண்டு என வராதோ? வருமெனில், அது யுத்தியன்றோ, யுத்தியாதுக்கெனல் மடமையன்றோ? யுத்தி பூர்வமாகவன்றி ஓர் வாக்கியத்திற்கு மூன்றுகட்சி ஏற்படுமா. ஏற்பட்டதால், அவாந்தரவாதிகள் போலாகாது இதற்கு விடையாது கூறுதி யெனின்?

வி-விடை— எது எப்படியோ அது அப்படியாகுகவென்றனன்.

ஞா-வி௵— மனம் துவித பாவங்கழன்று, ஏகபாவ மாதற்குத் தக்கநெறி விசிட்டாத்துவிதமென விளங்கற்குச் சுகதபேத மென்றது அறியாததென்னை யெனக் கூறவுந் தெரியாதா; யாதுக்காகச் சீயர் என்றபட்டம் பெற்றதோ வெனின்?

வி-விடை— தானே விளங்கச் சொல்வானே னென்றனன்.

ஞா-வி௵— உயிர் பரமெனு மிரண்டும், அறிவன்றி யில்லை யெனலை யேற்றாற்போல இதனையு மேற்கவேண்டும். அதாவது; பூதவிண் - ஞானவிண்ணென விரண்டு. சித்துசடத் தன்மையால் இரண்டாயினும் பொருளால் ஒன்றோ, பலவோ?

வி-விடை— ஒன்றெனின் எல்லையிலதாகவேண்டும். இன்றெனின்,விகற்பத்திற்கும் நிர்விகற்பத்திற்கும் இடமொன்றாகவேண்டும்; முரணுமெனின், இரண்டென்னல் வேண்டும்; இரண்டெனின், எல்லைவரை அறுத்துக் காட்டவேண்டுமெனவரும். கூடாததாற் சிறிதாகக் கேளென்றனன்.

ஞா-வி௵—அங்ஙனமேகேட்குதும். உலகத்தைக்காண்பது கண்ணன்றோ, காணுதலாகிய புடைபெயர்ச்சிக்கு வினைமுதல் இஃதெனப்பண்புந், தொழிலும், பயனும், ஒழித்துச் சொல்லாலன்றி அதனது நிலையினை அனுபவத்துக்கியைய வுணர்த்தின், சகத்தினை நீயறிந்து, அதனாற் சீவான்மா, பரமான்மா, உண்டெனக்கூறத்தகும் ஏற்கவுந்தகும். இன்றேல் எவ்வாறு வைணவமதம் மெய்ம்மையென வேற்கப்படும்.

வி-விடை குறியாவுணர்க வென்றனன்.

ஞா-வி௵—உபயவாதிகள் நிலையினையதென விசாரித்துத்தெளியாவிடத்து எங்ஙனந் தீர்ப்புக் கொடுக்கப்படும், கூடாததால் குறியனைத்தும்; பொருளல்லது பொருளாகமுடியுமெனற்கு ஐயமென்னை?

வி-விடை— அஃதெங்ஙன மென்றனன்.

ஞா-வி௵— பொருளல்லது பொருளாகக்காண்டலாவது; உபா தேயம்-ஆரோபம்-விகாரம்-என்னும் இவ்விலக்கணமயமா நிற்றலே; உபாதானம்-அதிஷ்டானம்-நிர்விகாரமென்னும் இவ்விலக்கணமயமா நிற்றலெனக் காண்டல். இங்ஙனமாய விபரீதத்தை அறியாது எங்ஙனஞ் சயம்பெனக்கோடல். இங்ஙனமாய மதிகொண்டு உபதேசித்தல் பிறர் கெடற்கு நெறியன்றோ வெனின்?

வி-விடை— சகல மதத்தரும் இங்ஙன நின்றன்றோ போதிக்கின்றனர்; என்மேல் யாது பிழை யென்றனன்.

ஞா-வி௵— மதத்தரைப்போல நீருங் குருடரெனற்கு ஏலாததென்னை?

வி-விடை— விஷ்ட்ணுவைப்போல் அவர்கள் கூறுங் கடவுள் பரத்துவ மாகுமா, ஆகாததால் எங்ஙன மேற்கப் படுமென்க.

ஞா-வி௵— கடவுளுக்கு அவரவரிட்டபெயர்போல, நீங்களும் ஓர் பெயரிட்டீர்கள் இதனுற் சிறப்பென்ன? சொல்வழக்கேயன்றி அர்த்தத்தில் வழக்கென்ன, உண்டேற் கூறுதி?

வி-விடை— கஜேந்திரயானை, ஆதிமூலமே! யெனப்பொதுப் படக்கூப்பிட்டதற்கு வந்து காத்தவர் விஷ்ட்ணுவையன்றி வேறல்லர் ஆதலின், இவரே பரத்துவமானவ ரென்க.

ஞா-வி௵— எம்மதத்தருங் கூறுங்கடவுள் பேதஞ் சகளமாகிய வேடத்தைப்போல்வது; நீர் சொல்வதும் என்ருல் தோடமென்னை?

வி-விடை— வேடமன்று வேடதாரியென்றனன்.

ஞா-வி௵— யாதினுற்கோடலெனின்?

வி-விடை— சக்கரமுதலிய ஆய்தங்களாலென்றனன்.

ஞா-வி௵— இவையும், இவற்றையேந்திய அவயவியும், உருவமாதலினுனும், அருவத்தையன்றி உருவமும் பிரதிபலித்தற்கு இடமின்மையினுனும், அருவமும்-அநிர்தசடதுக்கத்திற்கு இயைந்ததாதலானும், ரூபாரூபமு மிங்ஙனமாதற்கு உடன்படுதலானும் ஏற்கப்படாது. நின்கருத்திருந்த வாறென்னை யெனின்?

வி-விடை— எவரும் இங்ஙன மறுக்காததால் எங்ஙன நின்மொழி யேற்கப்படு மென்றனன்.

ஞா-வி௲— ஞாயஞ் - சோதனை - பொருத்தங்கட்கு முரணென்னை, உண்டேல் தள்ளுதும் இதற்கு யாது கூறுதி யெனின்?

**வி-விடை**— வாயாடி யென்றனன்.

ஞா-வி௲— அர்த்தத்திற்கு நட்டமென்னை?

**வி-விடை**— தோன்றாமற் செய்தலே நட்டமென்றனன்.

ஞா-வி௲— கல்விஞானம் இதற்குடன்படுமா?

**வி-விடை**— உடன் படாதேனும் எமக்குடன் பாடாகாதா என்றனன்.

ஞா-வி௲— இவ்வாறே யெந்தெந்த மதத்தருங்கூறி நடப்பராயின், மனங்கொண்டவாறு நடப்பதிலும் வேறோ? இது சாமிக்கு வழிபாடென ஓர் பெயர் வைத்துக்கொண்டு தங்கள் இஷ்டப்படி நடத்துவதாகக் காணப்படுகின்றதே, இதுதானு மனஞ்சென்ற நெறி நடவாமல் இருப்பது; கூறுதி யெனின்?

**வி-விடை**— சற்கருமங் காரணமாக ஆதலின் பழுதின்றே, இஃது அதுபோல்வதன்று.

ஞா-வி௲— திருவிழா முதலியவை விநோதகாட்சிக்கும், ஏகாதசி முதலியவை நல்லுணவுக்கும் ஆதலின் இதுதானு பத்தி வளர்தற்கு இயைந்த மார்க்கம்?

**வி-விடை**— வேதசம்மத மாதலின் இது முரணன்று.

ஞா-வி௲— வேதமாதாவின் கருத்து இதுவாயின், சகலமு மறப்பதே நன்றெனக் கூறுவ தென்னை?

**வி-விடை**— மெய்யே, அவரவர் பருவத்துக்கியைந்தவாறு கூறியதால் இரண்டுஞ் சம்மத வசனமென்றனன்.

ஞா-வி௲—இவ்விரண்டில் யாது பிறவி தவிர்த்தற்கு இயைந்ததோ அதனையன்றோ செய்யவேண்டும்?

**வி-விடை**— அனைத்தும் ஒருங்கு மறப்பதே பிறவி தவிர்த்தற்பாலதாயினும், அப்பருவம் வருகாறும் இதனைச்செய்தல் நன்றன்றோ வென்றனன்.

ஞா-வி௲— நன்றே; துக்க நிவிர்த்தியுந், தடையற்றவின்பமும், விழையாவுயிர் எங்கணுமில்லை. இதுதாற்பாலதோ?

**வி-விடை**— அன்று; இதுகாரணமாகத்தானே அம்முயற்சியுஞ் சிறிது சிறிது பயிலவரும், பயிலாவிடில் எங்ஙனம் வரும்.

ஞா-வினு— பயினுதற்கேற்ற முயற்சி கல்லாக்கால் வராது ஆதலின் இதனைச்செய்க?

வி-விடை— யாதென்றனன்.

ஞா-வினு— பேத மபேதமெனக் கூறும் வாதமிரண்டினுள் அபேதவாதமன்றோ, அதனை விசாரித்துத் தெளிதி. இன்றேல் யாது வாசித்து மென்னை?

வி-விடை— இவை புலப்படுமாறு; ஓர்பொருளில் தெரிவி இன்றேல் அறிவதெங்ஙன மென்றனன்.

ஞா-வினு— ஒருவன் தன்தந்தைக்குக் குமாரனும், தன்மகனுக்குத் தந்தையாயும் இருக்குமாறுபோன்று, காரணகாரியத்தைத் தன்பால் ஏலாத பொருளிடங் காலங்கள் ஒன்றுளதோ?

வி-விடை— ஒன்றும் இன்றென்றனன்.

ஞா-வினு— ஒன்றுஞ் சுயம்பன்றாயிருக்கக், காட்சிப்பொருள் கருத்துப்பொருளை நீ கோடற்கு ஏதென்னை?

வி-விடை— இதுகாறும் விவர்த்தமாயினன். ஆண்டவனே! இம்மொழி புகன்றவுடன் என்மனதினது பலசென்ம வெப்பமனைத்துந் தண்ணெனக் குளிர்ந்ததே, இதற்குக் கைம்மாறு யாதொன்றும் அறிகிலனென ஆனந்தக்கண்ணீர்பெருகிப் புலம்பிக் களிப்பால் வியந்து இதுகாறும் இல்லாதது - இம்மொழியால் விளைந்ததன்றோ, இஃதென்னபுதுமை. இதினாலன்றோ "சான்றோரினத்திரு" வென்றனர் சத்துக்கள். இதறியாது யான் தடுத்ததனைத்தும் பொறுத்தியென்று பலகாற் புகன்று வணங்கினன். அதற்கு ஆசான், நானெனல் எந்தவறிவோ அதனை நன்குற விளக்கி நினது அனுபவத்தைச் சொல்லென, ஒன்றும்வழுவாது உரைத்துத் தாகாரமாயினனென்க.

கூ - வது, விசிட்டாத்துவிதம்

முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

எ - வது,

# போலிவேதாந்திவாதம்.

ஞா-வினா— வேதாந்தம் என்பது யாது?

போ-விடை— வேதத்தின் அந்தமெனா.

ஞா-வினா— வேதமென்னலாகாதா?

போ-விடை— தொடர்மொழி ஓர் மொழியாமா - ஆமெனின், சந்திவரப்பெறுமா-வருதலின், அதுவழு.

ஞா-வினா— இவ்விருபதமும் பிரதிவாதிப்பது இரண்டாக வேண்டும். இரண்டெனின், அவை யாவை?

போ-விடை— அறிவு அறியாமை எனவும், சகசீவபரமெனவும் இரண்டாம். இவற்றுள்; அறிவு அறியாமையன்றிச் சகசீவபரம் இன்மையின், அறிவறியாமையை உணர்த்துவது அந்தமெனவும்; அவற்றின் உபாதேயமாகிய சகசீவபரங்களை உணர்த்துவது வேதம் எனவுங்கொள்க.

ஞா-வினா— நிலைமொழி வருமொழிக்கு முரணாகக் கூறுவது முறையோ?

போ-விடை— அத்தியாரோபம், முரண் அபவாதம்? முறை எனப் பொருள்படக்கூறினை. ஒக்கும்; அத்தியாரோபந் தெரியாமல் அபவாதம் எங்ஙனம் உணர்த்தப்படும். ஆதலின், முன்னர் அதிஷ்டானத்தையும் - பின்னர் ஆரோபத்தையும் உணர்த்திற்று. ஆயினும்; யாமனைவரும் அதோமுகத்தராய் மாறிச் சனனமரணச்சுழலில் அகப்பட்டுத்தேகமே ஆன்மா, போகமே முத்தியென்று நெறி தெரியாது விபரீதத்தைச் சத்தியம் என்ற பிராந்தியை முன்னர் அகற்றுவான் வேண்டி; யாம்பேத புத்தியாற் சத்தியம் எனக்கொண்ட சகசீவபரத்தை விளக்கிப் பின்னர் அதிஷ்டானத்தை விளக்க முன்னர் வேதத்தையும், பின்னர் அந்தத்தையுங் கூறவந்தது ஆதலின் முறையேயென்க.

ஞா-வினா— மூடத்தால் யாஞ் சத்தென்ற திரிபதார்த்தங்களைச் சத்தென வேதமுஞ் சம்மதித்துக் கன்மம் பத்தி கூறுவ தென்னை- இன்னும் யாங்கெடுவான் வேண்டியன்றோ?

போ-விடை— நோய்கொண்ட பிள்ளைக்கு மருந்தை மறைத்து இனிய பண்டங்காட்டி அழைத்தல்போலும்.

ஞா-வி௲— இதுநிற்க; நீர் வேதாந்தி ஆதலின் வேதாந்தமாவ தென்னை?

போ-விடை— ஞானமே சத்தியம் எனவும்; ஏனையவை மித்தை எனவும் பிரிதிவாதிப்ப தென்க.

ஞா-வி௲—திரிபதார்த்தத்துள்; செகமித்தை யாமாறு எங்ஙனம் உணர்த்தவேண்டுமெனின்?

போ-விடை— கானல் நீர் முதலியவைபோலும் என்க.

ஞா-வி௲— தாஷ்டாந்தம் எங்ஙன மியையு மெனின்?

போ-விடை— சுழுத்தியி லெங்கே என்றனன்.

ஞா-வி௲—சத்தாவத்தைகளில் அஃதொன்று. ஏனைய அவத்தைகளிற் சாக்ராவத்தைதோறும் என்றுஞ் சத்தாகக் காண்பது என்னையோ? அவ்வவத்தையில் அன்றோ ப்ரவிர்த்தியாற் பந்தமும், நிவிர்த்தியால் முத்தியும் எய்தக்கிடப்பது. இங்ஙனமிருக்க; இங்கே சுழுத்தி அவத்தை எடுத்தாள்வது தோன்றாமையாலோ? குருபரம்பரையின் மூடத்தாலோ? சொல்லத்தெரியாமையாலோ வெனின்?

போ-விடை— இங்ஙனம் எல்லாம் விஞவல் எமது மரபுளடுப்ப தன்று-சொல்வதைக்கேட்பது யோக்கியதை யென்றனன்.

ஞா-வி௲— ஐயமறத் துய்வது எங்ஙனமோவெனின்?

போ-விடை— படித்துக்கொண்டே வர நீங்குமென்றனன்.

ஞா-வி௲— இங்ஙனம் படித்துணர்ந்த நீர் தெளிந்த தென்னை சொல்லுமெனின்?

போ-விடை— எமது மொழியை மறுப்பையாயின், வெளியில் தள்ளுதும். மரியாதையில்லாமல் பேசலாமாவென்று உரத்திப் பேசிக்கோபித்தனன்.

ஞா-வி௲—ஐயக் திரிபகற்றுவார் நின்போல்பவர் அன்றி ஏனைய ரென் சிறந்தும் யாதுபயன். மறுத்துக்கேட்பதடாது. ஆயினும்; பிரபலசுருதியில் வல்லார் பெரும்பாலும் எங்கணுமுளர். அவர்கள் அனைவரும் நின்போலவே கூறுநிற்பர். நனவிற் சுழுத்தியென்று ஓர் அரிய நிலை உண்மைபற்றி; ஞாயஞ் சோதனை பொருத்தமென்னுமுகத்தால்

அதனையறிந்து அமைதிபெறற்குச் சத்துக்கள் நிருபித்தனர். இங்ஙனம் இருக்க; வறிதிலென்னைப்புறக்கணிக்கில் யானுய்வ தெங்ஙனமெனின்?

போ-விடை— சகலாவத்தைதோறும் உண்மையாயும், கேவலாவத்தைதோறும் இன்மையாயும் இருப்பதால் எங்ஙனம் உலகைச் சத்தென்றேனும், அசத்தென்றேனுங் கூறற்குறுதி. இன்றாதலின், ஒருவாறு கூறினுமென்க.

ஞா-வி— உலகை மித்தையெனவுஞ், சத்தெனவும் அவத்தை காரணமாகவாயின்; பந்தமுறலும், அதனால் மிக்க அல்லலுற்றெய்த்தலும், விருத்தியால் விருப்புறுதலும், ஆனியாற் சோகமுறுதலும் ஆர்பாலது. இவற்றை நிவர்த்திக்கவன்றோ; வேதம், மித்தையெனக்கூறவந்தது. இதனை யறியாது வேறு கூறுவதென்னை?

போ-விடை— பந்தமுதலியவற்றையும், அவற்றாலெய்துந் துக்கமுதலிய அல்லல்களையும், மாறாப் பிராந்திகளையும் அகற்றுவான் வந்தது மெய்யே; சகலந்தோறுஞ் சகமானது உண்மையென்றும்; கேவலந்தோறு மித்தையென்றும் இயல்பாக வழங்கி வருதலால் எங்ஙனமறுப்பதென்றனென்க.

ஞா-வி— தோற்றமு மறைப்பு மியல்பேனும், அது தோற்றும்போது நாம் பந்தமெய்தாவாறு எங்ஙனம் என்றற்கு விடை கண்டிலம். கூறுவதையே கூறலில் யாது பயன்?

போ-விடை— சகமாயிருப்பதை யெங்ஙன மித்தையாக்குவதென்றனன்.

ஞா-வி— வேதமுஞ், சான்றோரும் மித்தையென்றது குற்றமோ; குற்றமெனின், அதுதோற்றுவதற்கும், நமக்கது காரணமாகப்பாசம் பெருகற்குங் காலவரையறை யின்றே; நாம் அல்லலற்றிருப்பதற்கு நெறியாதோ; இன்றெனின், வருணாச்சிரமத்தையும், விதி விலக்கையுந் தழுவி நடப்பதில் யாதுபயன்?

போ-விடை— மேலாய பயன்றருமெனலை நம்பியென்க.

ஞா-வி— ஞானகாண்டங் கூறுவது நம்பிக்கை யன்றோ; நம்பிக்கை யெனின், ஏனையகாண்டங்களுக்கு இஃதென் சிறப்பு. நீயும், உனது ஆசிரிய மரபும் நன்குவிசாரித்துத் தெளியாத குறைவை வேதத்தின்மேல் ஏற்றற்கோ; வேதாந்திக ளென்றும், யாம் சங்கராசாரிய பீடமென்றும், ஐயந்திரிபகன்றோமென்றும் பிரளி செய்வதற்கு

இயைய அபிநயித்திருப்பது. நன்கு நன்கு. இதிலும் நாவிதன் தொழில்செய்வது நன்றன்றோ. இனியாவது உமது விசாரணைக்குறைவை நினைத்துத் தக்கோர்பாற்சென்று அடிமைபூண்டு தெளிதலில்யா திழிபு. இழிபெனின், கும்பிடுக்குவீங்கிய கள்ளக்குருக்களாகும். பிறவிக்குப் பயந்தவர்களாயின் இது செய்வீர்களா?

போ-விடை—எமதிடத்து அச்சமின்றிக் கண்டபடி வைதற்கோ, நீ இங்கு வந்தது நடவென்றனன்.

ஞா-வி—சரணஞ் சரணம். எனது கருத்தறியாது கோபித்தல் சான்றோர்க்கு அடாதே; நீயெந்தசெனனத்தானு மல்லையே; இந்தச் செனனத்தை நாமென்றும், நாமுயர்ந்தபொருளென்றும், நாம் சாமி யென்றும் உன்னைத்தானே கொள்ளலாமா; கொள்ளவில்லையெனில், நன்கு கூறியதற்கு இவ்வளவு கோபம் வரலாமா? மூட பரம்பரையில் வந்த சிரோன்மணிக் குருவாதலின் உனக்கு இவ்வளவு கோபந் தோன்றிற்று. இனியாவது உலகை மித்தையெனற்கு யாதுகூறிதி யெனின்?

போ-விடை— அழிந்துபோவதால் மித்தை யென்றனன்.

ஞா-வி— பின்னர் மித்தையாகும் போதாகட்டும்; இப்போது நமக்குச் சத்துருவா நின்று காம வெகுளி மயக்கங்களைத் தருகின்றதே, இந்தப்போராட்டத்திற்கு யாது கூறுதி யெனின்?

போ-விடை— அதனைப் பாராதிருப்பதே தந்திரங்களில் எல்லாம் மேலாய தந்திர மென்றனன்.

ஞா-வி— தனதுடல் தோன்றும்போது உலகந் தோன்றுதிருக்குமா; உடலுக்கும் உலகத்துக்கும் உள்ள சம்பந்தம், உபாதானம் உபாதேயமன்றோ; இங்ஙனமாவது விசாரித்துத் தோராததென்னே; உனதுசாம்பிரதாய மூடவிளக்கப் போதகமோ தக்க விடை கண்டு கூறுதியெனின்?

போ-விடை— எங்ஙனமித்தையாக்கினும் முறையன்றென்றனை. விழியாதிருப்பதே தக்கவுபாய மென்றனன்.

ஞா-வி— விழியா திருக்கினும் உலக மிருக்கின்ற தென்னும் நினைவுதானில்லாமற் போகுமோ. போகுமெனின், யோகாப்பியாசத்தில் ஒன்றும் எனப்படும் அன்றோ; அன்றெனின், மூடசுழுத்தியால் அன்றோ; அன்றெனின், மூர்ச்சை மரணங்களில் ஒன்றால் அன்றோ; இதுதக்க உபாயமாமா வெனின்?

போ-விடை— யாதுகூறினும் தடுப்பதால் மிக்ககோபம் விளைவிக்கின்றனை. மிகப்பேசக் கற்றுக் கொண்டனை அனுபவிகளை; இங்ஙனங் கேட்டல் அடாதென்றனன்.

ஞா-வி்ஞ—சுருதிகாரணமாகவேனும், யுத்தி காரணமாகவேனும், ஞாயஞ் சோதனை பொருத்தம் என்னும் இம்மூன்றுமுகத்தால் தக்க சமாதானங்கூறத் தெரியாத நீயா அநுபவத்துக்கு இயையக் கூறப்புகுவை. அநுபவமுகத்தாலேனும் உலகை மித்தையாக்குக வெனின்?

போ-விடை— மனம் இறந்த இடத்து எங்ஙனங் கூறுவது; நீ அநுபவியாயின் இங்ஙனங்கேட்பையா; மனம் இறவாத அநுபூதியும் உளதோ; இன்றெனின், அநுபூதி கூறெனக்கேட்டன் முறையோ; இவை எல்லாம் மூடவசன மென்றனன்.

ஞா-வி்ஞ— அநுபூதி நிலைகள் அனைத்தையும் எடுத்து விளக்கிய சான்றோரனைவரு மூடராகவேண்டும். என்ன விரைவில் மூடன் எனக் கூறக் கற்றனை. "தானறியுந் தத்துவங்க ளெல்லாந் தனக்கனியம்" என்னுங் கவியும், "எல்லாரு நானு.விருந்துரைப்பாராகில்" என்னுங் கவியும், "எங்கேநான் போற்றுவது மென்னையே" என்னுங் கவியும், "என்னையேயல்லாமல் யான்பெற்ற தேதுமிலை" என்னுங் கவியும், இன்னும் இவைபோன்ற எண்ணிறந்த கவிகளும், வாக்கியங்களும், வசனங்களும், இருப்பனவன்றோ, இவை எல்லாம், அநுபூதிமேலீட்டிற் சுரந்தன வன்றோ? இங்ஙனம் இருக்க; அநுபூதி நிலைகளை எடுத்துச் சொல்லுதல் எங்ஙனம் என்னலாமா; யாது கூறுதி யெனின்?

போ-விடை— அவ் வநுபூதி நிலைகளையே எடுத்து வழங்குதல் எமது மரபன்றி வேறல்ல; அவ்வநுபூதி நிலைகளில் இருக்க யாம் நூதனமாகக் கூறுவ தெற்றிற்குப் பயன்படாவாதலின் யாங் கூறற்பாற்றன் றென்றனன்.

ஞா-வி்ஞ—முன்னுள்ள சான்றோர்களும் நும்போலிராது யாது பயன்பற்றிக்கூறியதோ? தம்து பண்டிதத் திறமை காட்டற்கன்றே. நீங்கள் இங்ஙனங்கூறுவது; அநுபூதி நிலையல்லாததை அநுபூதி நிலை எனக் கூறுவதாகக் காட்டுகின்றதே யாது கூறுதியெனின்?

போ-விடை— இங்ஙனமாக வெல்லாம் எமது மரபினுள் கேட்கற்பாற்றன்று, நீ எவற்றினும் பேச்சு கற்றவனாய் இருக்கின்றனை; போதும்நட வென்றனன்.

ஞா-வினா— ஐயா! எவ்விதத்தினுந் திறமையற்ற மூடசாம்பிர தாயத்தைப் பற்றிக் கேட்டும் படித்து மிருக்கின்றனன். அதற்குப் பிரத்தியட்சமாக உம்மைக்கண்டனன் என்று யானினைக்கவா நீர் இங்ஙனம் எல்லாம் பேசுவது? இனி இங்ஙனம் ஆகாமல் விடை தரலாகாதா வெனின்?

போ-விடை— ஒருவரிடத்துஞ் சொல்லாதிருக்கின் யான் தெரி விக்கின்றேனென்றனன்.

ஞா-வினா—அடியற்ற பனைபோல் விழுந்து அஞ்சலி குஞ்சியனாய் பயபத்தியோடு நடுங்கிக்கேட்க, உனது அகத்தில் விடாது ஒளிருஞ் சோதியே நமதுவடிவாம் என்று உபதேசிக்க; அதைக்கேட்டு, இந்த ஒளிக்கு உலகம் அயலா, தானா? அயலெனின், அவ்வொளியின் எல்லை யாது; இன்றெனின், அயலெனல் ஓர்முதலெனற்கும் இடமின்மைய தெனற்கும் யாது முரணு மெய்தாது நிற்கக் கூறுதியெனின்?

போ-விடை— இங்ஙனம் எல்லாம் வினவாது நீயே காணென் றனன்.

ஞா-வினா— ஒளியிற் சகமும், சகத்தில் ஒளியுங் காணுதலென் கொண்டோ; இவ்வையந் தவிர்க்கக் கூறுகவெனின்?

போ-விடை—அங்ஙனமாதல் இயல்பாய் இருக்க, நீ சத்தாகவே இருந்திடுக வென்றனன்.

ஞா-வினா— பகலும் இரவும் போலும், நன்கு தீங்குபோலும், முரணுகத் துவிதமாகின்றதே, இந்தத் துவிதம் போக்கற்கு வலியின் றிய நீர்; "ஒன்றே யொழிய விரண்டாவதில்லை" என்னுஞ் சான் றோர் வாக்கியத்திற்கு, என்ன அனுபவங் கூறநின்றீர். இவற்றை எல்லாம் விசாரித்துத் தெளிந்த தில்லை யானால், எங்ஙனந் துக்கா பாவ முதலிய நான்குமேலாய அநுபவம் வாய்க்கும், இதனை நன்கு உணர்ந்து கூறுதியெனின்?

போ-விடை—அந்நிலையில் விடாதிருக்க இவை எல்லாந் தானே வாய்க்கு மென்றனன்.

ஞா-வினா—இவை எல்லாம் வாய்க்காத நீரா; குருத்துவத்துக்கு இடமானீர். உமது அநுபூதி நிலைத்திறமை தெரிந்தனன். சகமாதிய திரிபதார்த்தங்களையும் மித்தையாக்குந் திறமை எங்ஙனம் வரும். சுவாநுபூதி முதலே கோணலாயிருக்கச் சுருதியுத்திமுழுதுங் கோண

லாதலைக் கேட்பானேன், இந்தத்திறமைக்குத்தானு சுவாநுபவம் வர வேண்டும் மென்றீர். இதுவேதாந்த மல்லவே யாதுகூறுதியெனின்?

போ-விடை— நீ என்னை மூடனுக்கற்கோ இங்கேவந்தனை. எவரும் என்னை மதிக்காத விதஞ்செய்தனையே, இனியாவது விடை பெற்றுக் கொள்ளென்றனன்.

ஞா-வினு— மெய்யாகத் துக்காபாவம் வேண்டி வேதாந்தம் விசாரிக்க வில்லை, விசாரித்தால் துவிதநாச மின்மையைத் தெரிவித்தும், விசனமுற்று விரையாதமெதன்னை; உம்மைப்போலக் குருத்வம் வேண்டினன் அல்லன். தெளிவுறுதலே யெனக்குத்திருத்தியாதலால், இதுகாறும் உன்பால் வருந்தி வினுவுகின்றனன்; நின்கருத் திருந்தவாறு என்னைகொலோ கூறுதியெனின்?

போ-விடை— நீர் உண்மையுள்ளவராகக் காணப்படுகின்றது. நமஸ்காரம் நமஸ்காரம், ஏகமாக்குநெறியாதோ அதனைத் திருவுளம் பற்றவேண்டு மென்றிரந்தனன்.

ஞா-வினு—பிரக்ஞையையன்றி யாதும் இல்லை ஆதலின், அதின் உண்மை நிலையை விளக்கி இப்போது யாது கூறுகின்றனை யெனவினவ?

போ-விடை—விளங்கிய வக்கணத்தில் தானே பரவசனுய் நின்று அடியற்ற பனைபோல் பலகால் திருவடிக்கண் விழுந்து விழுந்து, இருவிழியிலும் ஆனந்தபாஷ்பம் பெருக, அழுது வலம்புரி இடம்புரியாக வந்து சந்நிதிக்கண் அஞ்சலிகுஞ்சியதா நின்று, ஒன்றே; அனைத்தும் எனவும், அன்றெனவும், அதுவெனவும், இதுவெனவும், நீயெனவும், நானெனவும், சடமெனவும், சித்தெனவும்,ஆரோபமெனவும், அதிஷ்டானமெனவும், விகாரமெனவும், நிருவிகாரமெனவும், உபாதானமெனவும், சமஷ்டி வியஷ்டி உபாதிகுணந் தொழிலெனவுஞ், சராசரமெனவும், ஆண்பெண் எனவும், சத்துரு மித்துருவெனவும், காலதேச வஸ்துக்களில் ஒவ்வொன்றும் பல பேதமாகக் காண்டல் எனவும், கண்டேன் கண்டேன் என்று, பலகால் வியந்துகூறி ஆனந்த நிர்த்தனஞ் செய்து, முடிவில் நிர்விகற்ப சமாதி எய்தித் தானேதானுய மோனநிலை பெற்றன னென்க.

எ - வது போலிவேதாந்திவாதம்.

முற்றிற்று.

---



௨

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

அ - வது,

# காலவாதிமதம்.

ஞா-வின—காலவாதியைநோக்கித் தீர்ந்த உமது சித்தாந்த வாதம் யாதோ அதனை யான் பெற்றுய்யுமாறு அடியேனுக்கு அநுக்கிரகிக்கவேண்டும் என்று இரந்து வினவ?

கா-விடை—அங்ஙன மாகுகவென் றியைந்தனன்.

ஞா-வின—யாமுய்தற்கு யாதுநிலை கூறுதியென?

கா-விடை—காலமே பரமெனத் துணிந்தனன் நீயும் அதனைக் கொள்ளுதியெனக் கூற.

ஞா-வின—பரமாயின் சச்சிதானந்த இலக்கணம் இல்லாதது என்னை? இருக்கின்றது எனின், சத்து இனையதெனக் காட்டுகவென?

கா-விடை—என்றும் இருத்தலால் காலத்தைச் சத்தெனற்குத் தடையென்னை.

ஞா-வின—ஆயின் சித்திலக்கணம் யாதோவென?

கா-விடை—சத்தெனற்கு இயைந்து நிற்றலே சித்திலக்கணமென்க?

ஞா-வின—ஆனந்த விலக்கணம் யாதோ வென?

கா-விடை—எவ்வுயிர்க்குந் தக்க சுகந் தந்துநிற்றலின் ஆனந்தமாகுமெனக்கூற.

ஞா-வின—அறிதல் தர்மங் காலத்துக்குச் சற்று மின்மையின், சச்சிதானந்த விலக்கணம் எங்ஙனமேற்கும்?

கா-விடை—நன்றே; காலமெனல்; என்றும் உண்டோ, இன்றோ? உண்டெனின், ஏற்றுக் கோடற்குத் தடையென்னை.

ஞா-வின—தான்சத்தென உணர்தல் தன்பால் இல்லாமையின் சித்து வேறாகலாமா, வேறாயின் சத்துஞ் சித்தும் ஒவ்வாததால், இஃதெங்ஙனம் ஆனந்தமாம், உத்திக்கு மாறுதற்கு யாதுகூறுதி யெனவினவ?

**கா-விடை—** இங்ஙனங் கேட்டார் ஒருவருங்கண்டிலமே, இஃதென்ன வினவென்றனன்.

**ஞா-வின—**யுக்திக்கு மாறென்று தெரியாது கூறிக் குருத்தனஞ் செய்யும் நின்போலிகட்கு உணர்வுறுத்தும் வினவாதலின் யாது கூறுதியென?

**கா-விடை—** இங்ஙனம் பொருந்தக் கூறக் கற்றிலம். கல்லாததால், காலம் இல்லாமற் போயிற்றே; என்றும் இருப்பதால், சத்தெனற்கு, ஐயமென்ன வென்றனன்.

**ஞா-வின—** காலஞ்சத்தும், அறிவுசித்தும், ஆதற் கியைதலின், இரண்டு பதார்த்தமாகின்றதே, காலத்தைச் சச்சிதானந்தமென்னலாமா, எனவினவ?

**கா-விடை—**இதற்கு விடைகூற அறிகிலனே. எங்கு கற்றனே, சமயவாதிகள் தத்தங்கொள்கைக்கு இயைந்த பரத்தைச் சச்சிதானந்தம் என்றாற்போல யானுங் கூறப்புகுந்தனன் அன்றி வேறல்லன். எங்கேனும் இங்ஙனங் கூறக்கேட்டிருப்பேனாயின், காலத்தைப் பரம் எனப் பிரதிவாதிப்பனல்லன். ஆயினும், பிரமாமுதலிய மும்மூர்த்திகளுங் குணப்பிரிதிபலனன் அன்றோ; பிரிதிபலித்தல் இறந்த காலம் அன்றோ; அந்த இறந்தகாலங் காலத்துக்கு அப்பாற்பட்டது எனப்படுமோ; ஏனைய உயிருங், அண்டாண்ட நிரைகோடிகளுங் காலத்திற் கட்டுப்பட்டன எனக் கூறவேண்டுமோ, இதுபற்றிச் சத்தெனப்படு மென்றனன்.

**ஞா-வின—**காலத்தைச் சச்சிதானந்தமென்று ஒருமைப் படக் கூறுதியாயின், யான் தடுப்பேனல்லன், எங்கெங்கே ஸ்மரணையுண்டோ அங்கங்கே காலமுதலியவைகளுண்டாயும், இன்றேல் இன்றாயும், எவ்வெவர்பாலும் அனுபவம் இருத்தலின், சத்தெனற்கு எங்ஙன மியையுமெனின்?

**கா-விடை—** ஸ்மரணை உள்ளபோதும் இல்லாதபோதுங் காலம் ஒருதன்மைத்தாயிருத்தலின், சத்தெனற்கு ஐயமென்னை.

**ஞா-வின—** உனது ஸ்மரணையைத் தள்ளி; இப்போதேனுங் காலத்தைக்காட்டில், சத்தென்று ஏற்பதற்கு இடையூறின்று, நின் கருத்து யாது கூறுதியென?

**கா-விடை—**விடைகூறற்கு இடமின்றிக் கற்றனே, இது நிற்க; ஸ்மரணை கொண்டு, எனது கொள்கையைத்தவிர்த்தனை, நன்றே. நினது

கொள்கையாகிய ஸ்மரணையெனலும்; சச்சிதானந்த மாகவேண்டுமே, இதனை யாமேற்குமாறு சம்மதிவசனங் கூறவேண்டு மென்றனன்.

ஞா-வினா— ஸ்மரணையல்லாத சராசர உயிர்களுந் திரிமூர்த்திகளும், உளவேல்; ஸ்மரணை சச்சிதானந்தம் என்னப்படாது; சமஸ்தமும் ஸ்மரணையன்றி இல்லாமையால் சச்சிதானந்தம் என்னப்படும். இதற்குத் தடையுளதேல் கூறுகவெனின்?

கா-விடை—ஐயா! தனித்தனி சொல்லி, ஏகமாகும் விதத்தைத் தெரிவிக்கவேண்டு மென்றனன்.

ஞா-வினா— சமஸ்தத்துக்கு மேல்கீழ் ஒப்பின்றி உபாதானமா நிற்றலின் சத்தெனவும்; அங்ஙனஞ் சத்தா நின்றதானே உணருந் தன்மையது ஆதலின் சித்தெனவும்; தானே பிரியவடிவாதலின் ஆனந்தமெனவுங் கோடற்கு இடையூறென்னை?

கா-விடை— எவ்வுயிர்களும், ஸ்மரணையென்றும், அந்த ஸ்மரணையே சத்தென்றுங் கூறின், எவ்வுயிர்களும் பிறந்திறக்கலாமா; பிறந்திறத்தலின், யாவர்தான் சத்தென்றேற்பர்.

ஞா-வினா— அவஸ்தைகள் மாறினும், ஸ்மரணை இருந்தவண்ணம் இருக்குமாறுபோன்று, பிறவிகள் மாறினும், ஸ்மரணை மாறாததால் சத்தெனற்கு ஐயமென்னை?

கா-விடை—காலமெனல் அறிபடுபொருளன்றோ; காலத்துக்கு அறிவு முதற்கருவியன்றே? அறிதற்கருவியாதலால் துணைக்கருவி எனப்படும். இங்ஙனமிருக்க; காலத்துக்கு அறிவை முதற்கருவியாக்கல் வழு.

ஞா-வினா— ஆயின், காலத்துக்கு முதற்கருவி யாதோ?

கா-விடை— முற்றும் உணரக்கூடாமையேனும், காரிய வகையால் ஷெக்கன்-மினிட்-மணி-நாள் - வாரம் - மாதம் - வருஷம் - யுகம்-சதுர்யுகம் - மகாயுகம் - முதலியவாக மேல்மேலாகச் செல்பவையும், காரணவகையால் யுகம்-மகாயுகம்- சதுர்யுகம் - இங்ஙனமாகப் பரமாணுவுக்குக் கீழ்கீழாகச் செல்பவையும் விகாரமன்றோ; இங்ஙனமாய விகாரத்தையன்றிக் காலமெனல் இன்றாமையின், அறிவு முதற்கருவியெனல் கூடாதென்க.

ஞா-வினா— விகாரரூபமாய காலத்தைச் சுயம்பெனக்கொண்டு; "வைகலும்வைகல் வரக்கண்டு மஃதுணரார்" என்னுங் கவிப்படிப் பார்க்கில் இன்புறுவதுபோற் கெடுவது முறையோ?

**கா-விடை—** சுயம்புதேடு நாட்டத்துறின் விவகரிக்கக்கூடாமை யால்; அது பொருந்தாதென்க.

**ஞா-வி—** ஆயின், விவகார சத்தெனப்படுமேயன்றி எதார்த்த சத்தெனப்படாதே, சத்து பேதந்தெரியாது கூறுவது முறையோ வென?

**கா-விடை—** சத்து பேதமாவது யாதென்றனன்.

**ஞா-வி—** பிராதிபாலிகசத்து-விவகாரிகசத்து-பாரமார்த்திக சத்து-எனச் சத்து மூன்றும். பிராதிபாலிகமாவது; பிரிதிபலிக்குந் தன்மை. விவகாரிகமாவது, விவகரிக்குந்தன்மை. பாரமார்த்திகமா வது, எதார்த்தத்தின்தன்மை: இவற்றையறிந்து கூறுதியென?

**கா-விடை—**இங்ஙனநோக்கில் யாதும்? எதார்த்தசத்தாகாதே, இது தக்க வினவன்றெனக்கூறினன்.

**ஞா-வி—** ஆயின், விகாரத்தைச் சுயம்பெனக்கூறுவதாவிஞ? ஒன்றன்கூட்டம், பலவினீட்டம், திரிபிணக்கம் என்பவற்றை விகார மெனக் கேட்டறியாய் போலும். இவற்றுள்; காலமெனல் ஒன் றன்றே, இதனை உணர்ந்து காலத்தை எதார்த்த சத்தாக்கத் தக்க நெறியாதெனின்?

**கா-விடை—** எவ்விதத்தும் எதார்த்தம் எனக்கொள்ளாது முரா ணகத்தக்க நெறி கண்டு கூறினே. காலமெனல்; இவ்விலக்கணத்தால் இல்லாமற் போயிற்றே, இஃதேதற்றற்பால தன்றென்க.

**ஞா-வி—** விசாரியாமுன்னர் காலமுளதாயும், பின்னரிலதா யும் நின்றது யாது? காலமெனின், இன்மையா நின்றவிடத்தெங்கே, எத்திசையாக வேகியது, அதனைக்கண்டு சொல்லுதியென?

**கா-விடை—** இருக்கின்றதெனின், காரண காரிய மற்றதாக இருக்கவேண்டுமென்பை. இன்றெனின், எங்கே யேகியதென்பை. இந்த வொழியா வழக்கிற்கு யாது கூறுவனென்றனன்.

**ஞா-வி—** மித்தையெனற் குடன்பாடாயின், ஞாயங்கூறுக. இன்றேல், ஒத்துக்கொள்ளுக வெனின்?

**ஞா-வி—**எமதுகொள்கையைப் பூர்வபட்சப்படுத்தக் கூறியது உண்மை நிலேயே, ஏனையவற்றையும் இங்ஙனமாக்கத்தகும். யான் உலக சிந்தனையின்றி நிற்றற்கும்; நிற்கினுந் தடையின்றித் தோற்று திருத்தற்கும் இயைந்த நெறி யாதென்றனன்.

ஞா-வி— இத்தப் பிறவி நீயன்றுதலானும், உனது சம்மதி இன்றிப் பிராரத்துவ முடிவில் பலாத்காரமாக நீங்கலானும், மற்ற தற்கு யாது தடையென வினவ?

கா-விடை— பிரத்தியட்சமாய் இருப்பதை எங்ஙன மறப்பது. மறப்பினுந் தோற்றுவது எங்ஙனந் தடைபடும். தடை படாததால் யானிற்குமாறுதா னெங்ஙனமென்றனன்.

ஞா-வி— விசார முகத்தால் இன்மையாக முடித்ததை நீ மறக்கின் தோற்றும். இதனைக்கண்டு கூறுதியென?

கா-விடை— மறவாதிருக்கினுந் தோற்றுகின்றதே என்செய் வேனென்றனன்

ஞா-வி— நீ மறவாதிருந்தால் உலகம் உனக்குக் காணப்படுவ தற்கு நெறி எங்கணும் இல்லையே, நீ பிறழ்ந்து கூறுகின்றாயென வினவ?

கா-விடை— ஐயா! உற்றுக்காண்புழி சமஸ்தமும் நினைவாய் இருக்கின்றதே-இதென்ன ஆச்சரியமென்று பணிந்துநின்று, இந் நிலையைத் தெரியக்கூறவேண்டு மென்றனன்.

ஞா-வி— யாவும் நினைவெனக்கண்டனை. மெய்யே; எதை நினைவென்றனை கண்டு கூறுதியென வினவ?

கா-விடை— அவன் நெடுநேரஞ்சலியாது நின்று, கண்டுகண்டு, பரமாணுவினும் மிக நுட்பமாய தெரிவெனத் தெளிந்து பணிந்து கூறினன்.

ஞா-வி— அன்னபிரமாணமாக நின்றுணர்வது எவ்வண்ணத் ததோ கண்டு கூறுதியென?

கா-விடை— அதனைச் சோதிக்க நெடுநேர நிற்புழி, என்றுங் கண்டறியா அற்புதநிலைகாணப் பேரின்ப மீக்குற்றுத் துக்க நிவிர்த்தி உடையவனாய்ப் பலவாறாகத் துதித்து வணங்கிச் சொரூபமௌனி யாயினனென்க.

அ - வது. காலவாதிமதம்

முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

க - வது,

இனி

# சூனியவாதிமதம்.



ஞா-வி௵— சூனியவாதியை நோக்கிப் பிறப்பதும்-இறப்பதும் இப்பிறப்பில்; ஏற்றுக் கொள்வதற்குத் தடையாதுளது, யாவருஞ் சாட்சி யாதலால், இங்ஙனம் வருவானேன்?

சூ-விடை— பிறந்ததேது-இறந்ததேது-பிறந்ததுபோலும் இறந்ததுபோலுந் தோற்றன் மாத்திரமன்றி வேறில்லை. எங்ஙனம் எனின்; பஞ்சபூதாம்ச சையோகத்தையன்றித் தேகமெனலைக் காட்டில் ஏற்பம். இன்மையால், இம்மொழியை ஏற்பது எங்ஙன மென்றனன்.

ஞா-வி௵— ஆயின்; உன் தாய்தந்தைக்கு இந்நிலையதான ஞானம் பிறந்திருக்குமாயின், நீ புத்திரனைப் பிறத்தற்கு வழியேது? பிறந்தபின் தேகத்தை நான் எனலும், அதனைப்பாதுகாத்தலும், அதற்குப் போகந் தேடலும், பசிகாம நோய்கட்கும், வறுமை சிறுமைகட்கும், துன்புறலும், செல்வம் வாய்த்தற்கு இன்புறலும், இறப்பிற்கு நடுங்குறலுமாகிய இவ்வனர்த்தங்கள் உன்னை விடாது இருக்க நீ இங்ஙனம் வாய்மொழியாற் பேசுவது நன்றாய் இருக்கின்றது. இங்ஙனமாய புடைபெயர்ச்சிகள் அனைத்தும், நீயாகிற அறிவுக்கு வந்து இருக்கப் பிறப்பிறப்பு இல்லையென்பானேன்?

சூ-விடை— எனக்கு அவ்வநுபூதி வாய்க்காத தடையொன்றே அன்றிச் சமஸ்தமும் என்றுஞ் சூனியம் என்றற்கு ஞாயஞ்சோதனை பொருத்த முகத்தால் யாது முரண். இன்றாதலால், சூனியமே பிரமமென்றனன்.

ஞா-வி௵—பஞ்சபூதத்தை அன்றிப் பௌதிகஞ் சூனியமெனல் மெய்யே; பூதஞ் சூனியமோ? அன்றே, இதற்கு யாது கூறுதி யெனின்?

சூ-விடை— நீயேலாதேனுஞ் சகலபண்டிதரும் முடிவிற் சூனியம் என்று ஏற்றற்கு இயைந்த ஆகாயமானது, ஏனைய நான்கு பூதங்

கட்குஞ் சலட்சண விலட்சணமாய், இயையப் பெறுவானேன் பெறு வதால் சமஸ்தமுஞ் சூனியமே யென்றனன்.

ஞா-வின— இவ்வேதுக்களாற் பிரமமெனற்கு வடிவஞ் சூனிய மென்றனை, இந்தச் சூனியந் தனக்குத் தானோ மற்றொன்றிற்கோ காணப்படுவது?

சூ-விடை— தனக்குத் தானெனின், சடமென்பை. அன்னியத் துக்கு எனின், யாதுக்கென்பை. அறிவுக்கெனின், அதுயாது பொரு ளென்பை. இனையதெனின், குணங்குறியென்பை. அவற்றிற்குமுத லெனின், என்ன நிலையினதென்பை. அவாச்சியப் பொருள் எனின், யாதருத்த மென்பை. சூனியமெனின், அதனைத் தடுப்பையோ. கூடாததால், சூனியமே பிரமமென்றனன்.

ஞா-வின— அறிபடு பொருளையும்-அறிவையுஞ் சூனியமாக்கி யது, யாது. வேறு பொருளின்றெனின், ஆராய்ச்சி செய்து தீர்ப்புத் தந்தது யாது, இருப்பதாகக் காண்கின்றது. அஃது எட்டவில்லை யெனின், அங்ஙனங் கூறுவது நீயோ வேறோ? நானெனின், உன்னை நீ இல்லை என்னலாமா. கூடாதெனின், நானெனல் சூனியமாகுமா? ஆகாதெனின், நான் எனலே பிரமமென்றாற்றோட மென்னை?

சூ-விடை— நானே பிரமம் எனக்கூறிக் கெட்டனன் எனக் கூறும் உலகவாக்கியத்திற்குப் பிரத்தியட்சமாக உன்னைக் கண்ட னன். நன்றுநன்று இதனை உலகத்தார் கேட்கில், கொன்று எறிவர்; பேசாமற் போவென்றனன்.

ஞா-வின— நீரும் விசாரணை இல்லாமல், தலைவெட்டுபவர் போலும் நானென்னும் அவசர பேதங்கள் எத்தனையுள, அவற்றை விசாரித்துத்தெளிந்தீரா? தெளியாமற் போவென்னலாமா?

சூ-விடை— நானெனற்கு அவசரநிலைகள் அனந்தம் உண்டு என்றீரே, அவற்றிற்சிலவற்றை-எடுத்துக் கூறுகவென்றனன்.

ஞா-வின— "புத்தோக முத்தோகம் பூரணானந்தோகஞ், சத் தோகஞ் சித்தோகஞ் சாக்தோகஞ்-சுத்தோகம், ஆரணங்கட்டேடரிய வற்புதோகஞ்சகல, காரணமாஞ் சைதன்யோகம்" என்பதனாலும்; தேகோகமுதல் சிவோக மீறாக் கிடந்தவைகளுள், அனந்த அக பேதங்களிருப்பதனாலும்; யாதுகண்டிகழ்கின்றனை, கூறுதியென?

**சூ-விடை—** சூனியம் எனலைத் தோன்றாது இருக்குமாறு மறக்க வைத்தனையே, உனதுவல்லபமே வல்லபம். எந்தநான்-இவ் அவசர நிலைகளால் அனந்த நானாக நின்றதோ, அஃதினையதெனக் கூறவேண்டுமென்றனன்.

**ஞா-வி—** எந்த அவசரநிலை நான் எல்லாம், நான் என்பது அல்ல. நான் என்பது அன்றியும் இல்லை. இவ் அநுபவம்-நான் என்னுதார் ஆர். நான் மாத்திரம் அல்லவே, இங்ஙனம் இருக்க; ஒவ்வொருவரும்-சிந்தித்து உணராமல், என்னைக் கேட்பது சொல்கற்றற்கோ?

**சூ-விடை—** இங்ஙனம் எல்லாம்-அகம் என்னும் பேதங்களைத் தெரிவித்தாற்போல இதனையுந் தெரிவிக்கில், அதனை உணர்ந்தாற் போல இதனையும் உணர்ந்து கொள்ளுதும், ஆதலிற் றெரிவிக்க வேண்டுமென்றனன்.

**ஞா-வி—** நான் எனலை அன்றி உலகம் யாதுக்குத் தோற்றும், ஒன்றுக்கும் அன்றாதலால், உலகத்தை அறியும் உன்னைப் பிறழாது உற்று உணர்ந்து சொல்லுதி யென?

**சூ-விடை—** யாதொன்றுந் தோன்றவில்லை யென்றனன்.

**ஞா-வி—** அங்ஙனந் தோன்றாமை யாதுக்கெனவினவ?

**சூ-விடை—** இருந்தால் அன்றோ காணப்படும், இல்லை ஆதலால் யாதுக்கென்பன், இங்ஙனம் எல்லாம் உற்று நின்று உமது வசனப்படி பார்க்கும் இடத்தில் எல்லாஞ் சூனியமா முடிதலின், எனது கட்சிக்குமாறாய ஒன்றுங் கண்டிலனே அகம் பிரமம் என்பதில் என் சிறப்பு, விவர்த்தம் விவர்த்தமென்றிகழ்ந்தனன்.

**ஞா-வி—** விவர்த்தம் எனப் பூர்வபட்சப் படுத்தியது ஒன்று இருந்துதானே; இன்றேல் பூர்வபட்சம் சித்தாந்தம் என்பது யாது இன்றாய் முடியும் ஆதலால், உற்றுநின்று யோசியாத குற்றம் உன் இடத்தில் வைத்துக்கொண்டு சூனியத்தை நாட்டலாமா? சூனியந் தன்னையேனும் அன்னியத்தையேனும் அறிதற் பாலதா? இதை எல்லாம் யோசியாது கூறுவது நியாயமா கண்டு கூறுதியெனின்?

**சூ-விடை—** ஒன்றிருந்து உணர்வது ஞாயமே; எனக்குக்காணாததென்னை யென்றனன்.

**ஞா-வி—** உனக்குக் காணாததால் இல்லை என்னலாமா? விவேகிகள் கூறும் வசனமா? தெரியாதகுற்றந் தான்பாலிருக்கக் கண்டு விசன முறாததென்னை?

சூ-விடை— விசனமுறின் இழிவுக்கு இடமன்றோ; இதனைக் குறிப்பாற்றெரிந்து கொள்ளாத தென்னையென்றனன்.

ஞா-வினா— நீ விசனம் உறுதற்கு அடையாளம் ஒன்றுங் கண்டிலனே; சொல்லால் அளக்கவல்லையோ என வினவ?

சூ-விடை— இதனை எங்ஙன மேனும் விளக்கிவிப்பது உன் கடமை எனச்சொல்லி வணங்கினன்.

ஞா-வினா— யாதோர் நினைவும் அற்றுச் சும்மாவிருக்குதி. இருக்குங்கால் யாதுகாணப் படுகின்றதோ அதனைத் தெரிவி யென வினவ?

சூ-விடை— முன்னர் பாழ் காணப்பட்டுச் சிறிது சிறிதா அகன்று மின்மினிபோற் காணப்படுகின்றதென்றனன்.

ஞா-வினா— அதை விடாது பற்றிநிற்கில் யாதாகின்றதோ அதனைக்கண்டு தெரிவியென வினவ?

சூ-விடை— அங்ஙன நிற்க நிற்கக் கடல்கவிழ்ந்தாற்போலப் பேரின்பம் பொங்கிப் பரவசநாட்டனாய் வணங்கி நிருவிகற்ப சமாதி யெய்தினனென்க.

கூ - வது, சூனியவாதிமதம்

முற்றிற்று.

---





உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

ώ - வது,

# மூடவாதிமதம்.

ஞா-வி௲— ஞாயவாதி மூடவாதியைநோக்கி விதிநிடேதத்தின் நெறிநில்லாது கண்டபடி சஞ்சரிப்பது என்கண்டோ வென வினவ?

மூ-விடை— விதி நிடேதந் தழுவி நடப்பதால் யாது பயனென்றனன்.

ஞா-வி௲— நின்போலும் விவேகிகள் பயனில்லாமை பற்றியா தழுவிநடந்தனர். இது பற்றி விசாரியாததென்னை? தழுவி நடப்பதால் இதனினுமிக்க சம்பத்து அடையலாம் எனவும், வழுவி நடப்பதாற் சிறுமை அனுபவிக்கலாம் எனவும், எல்லாமதத்தர் வேதங்களும் முறையிடுவதை அறிந்திலையோவென வினவ?

மூ-விடை— அப்பயன் அனைத்தையும் அனுபவிப்பது எப்பொழுதோ; இப்பொழுதெனின், மிக்க சம்பத்தினர் தாங்கள் அஞ்சாது செய்யுந் தீவினைகள் அனந்தமுள. அவற்றின்பயனை இப்போது அனுபவிக்கக் கண்டிலமே; மிக்கவறுமையுளோர் தாங்கள் பயபத்தியோடு கடவுளுக்குத் தொண்டுபுரிந்து செய்யுஞ் சற்கிருத்தியங்கள் அனந்தமுள. அவற்றின்பலனை இப்போது அனுபவிக்கக்கண்டிலமே, தழுவிநடப்பதால் யாது பயனென்றனன்.

ஞா-வி௲— வறியன் இடத்துஞ், செல்வ மிக்கோனிடத்தும் ஏக காலத்தில் உதித்த சிசுக்களுக்கு இடம் பொருள் ஏவல் இன்மையும், உண்மையும் வருதற்கேதென்னைகொலோ? படைப்பெனின், பக்ஷபாதத்திற்கு இடமன்றோ? இயற்கை எனின், ஒருபடித்தாக வாய்க்காததற்கு ஏது என்னையோ; வினை எனின், எப்போது இயற்றியதோ, முன் எனின், பின்னென வரற் கியையாதோ; இங்ஙனம் இருக்க. முன்பின் செனனம் இல்லை எனல் எங்ஙனமேற்கப் படுமெனின்?

மூ-விடை— அப்பிரத்தியக்ஷம் ஆதலால் ஏற்கப்படாது என்றனன்.

ஞா-வி—ஒவ்வொருவரும் இம்மையில் தானே தினந்தோறுங் கேவலத்தில் யாம் இப்போது இன்னபிறப்பினர் எனத் தெரிபவருளரோ, அங்ஙனந் தெரிந்து கொள்ளாததால் இப்பிறவி இல்லாமற் போயிற்றோ; அதுபோல இப்பிறவியில் முன்பின்சென்மங் காணப் படாததால் இல்லை எனப்படுமோ; இவையனைத்தும் விவர்த்த கேள்வியே அன்றி ஞாயத்துக்கு இயையுமா இதனை நன்குணராததென்னை?

மூ-விடை—சாக்கிராவஸ்தையைச் சுழுத்தி அவஸ்தைக்கு உவமையிட்டது யாதுபற்றியோ, அதனை விளங்கக் கூறவேண்டுமென்றனன்.

ஞா-வி—சனனாகாரம் நசித்தது ஒன்று. ஒடுங்கல் ஒன்று. நசித்தல், மரணம். ஒடுங்கல், சுழுத்தி. முன்னர் நசித்த தேகாகாரம் எங்ஙனங் காணப்படும். காணப்படுதற்கு ஏது இன்மையில் இங்ஙனமாக வினாதலை ஒழிக. இன்றேல் குதர்க்க மெனப்படாதாவெனின்?

மூ-விடை ஆகாரத்தையன்றித் தேகநானெனலின்றேல், முடிவுதான் என்றோ; இன்றெனின், விஸ்ராந்தி தானென்றோ; இன்றெனின், விதிநிடேத மேற்பதால் யாது பயனென்றனன்.

ஞா-வி—விதிநிடேதம் விடுவதால், யாது பயனெனக்கருதி மிருகங்களைப்போல உண்டல், உறங்கல், புணர்தல், செய்து, காமக்குரோதாதிகள் வயப்பட்டு, அல்லல் மீக்குற்று அலைவானேன்?

மூ-விடை—விதி தழுவி நடப்பதால் சுவர்க்காதி போகமும், தழுவாது நடப்பதால் ரவுரவாதி நரகமும் மறுமையில் எய்துமென்றனை; இவ்விருவகைப்பயனையும், தநுவெடுத்து அனுபவிக்க வேண்டும் என்றால் எல்லை இன்றி இவ்விருவினையும் மாறி மாறிச் செய்ய வேண்டிவரும். வரின், ஒய்வுக்கு இடம் இல்லாமற் போகும். இங்ஙனம் வராமைக்கு ஏதுகூறுக வென்றனன்.

ஞா-வி—என்றும் ஒய்வுக்கிடம் அவாவில், இருவினைக்கு உடன்படாது இருக்கவேண்டும். உடன்படா திருத்தற்கு இயைந்த புடைபெயர்ச்சி இனையதெனத் தெரியவேண்டும். தெரிந்தவிடத்து அவ்வாறு கட்டுண்டு நிற்கவேண்டும். இவ்வாறு வழுவின்றிப் பலகாலும் நிற்கில், இருவினை ஒப்பும் மலபரிபாகமுந் தானேவந்தமையும் இவ்வாறமைதற்கு இயைந்த நெறியாதென விசாரிக்கத் தேடுதியென வினவ?

மூ-விடை— எங்ஙனஞ் செய்யின் இருவினை யொப்பு வருமெ ன்றனன்.

ஞா-வி஡— தான்யாரென விசாரிக்கும் விசாரணையாகிய கேட் டல்-சிந்தித்தல்-தெளிதலில் வரும் ஆதலால், அந்நெறிகண்டு நிற்றி யெனக்கூற?

மூ-விடை— தான் என்பதை விசாரிப்பானேன் உடலை அன்றி வேறுளதோ வென்றனன்.

ஞா-வி஡— உடலை அன்றி வேறின்றெனின், உடல்படுக்கையில் இருக்கப் பலவிடத்திற்சென்று, பலவிவகாரஞ்செய்து, இன்ப துன் பங்களில் ஒன்றை அனுபவித்ததாகச் சொற்பனம் எய்தியது யாது? அதனைக்கண்டு கூறுதியென?

மூ-விடை— அங்ஙனங் கூறியபோதே? நெடுநேரம்யோசித்து உனது வசனப்படி உடலை அன்றி வேறுபுருஷனுளனாகச் சத்தியமா கக்காணப்படுகின்றனன். அவன் யாவன் என உன்னும் இடத்துச் சேய்மையனாகவும், உன்னாதவிடத்து அணிமையனாகவும், காணப்படு கின்றனனே இதற்கு யாதுசெய்வ னென்றனன்.

ஞா-வி஡— அவன் உன்னை அன்றி வேறுபுருஷனோ; அலனெ னில், உன்னை நீ விசாரித்துக் காண்டற்குத் தடையாது?

மூ-விடை— எனக்கு நான் அன்னியனாகில் விசாரணை வேண் டும். அன்னியன் அல்ல ஆதலின் விசாரணை யாதுக்கென்றனன்.

ஞா-வி஡— விசாரணை பண்ணாது நீ யார் கண்டு சொல்லுதி யென?

மூ-விடை— காணப்புகின் பாழாகவும், புகாதவிடத்து நாமரூப மாகவும், காணப்படுகின்றனனே; உன்னும் இடத்தில் இவை வேட மல்லாது அவனாகா. இவ்விருமையன்றி எங்ஙனந் தேடிப்பார்க்கினும் அவனைக் கண்டிலனென்றனன்.

ஞா-வி஡— "அறியாப்பொருள் காரணமாயை குறித்தறியும் பொருள் காரியமாமுலகிந், நெறியாற்றிகழ் நான்மறை அந்தமெலா நீ அன்றென வோதுநிரந்தரமே." என்னுங்கவியின் அனுபவம் உன க்குவாய்க்கக்கண்டேன். இவ்வாறினி மேன்மேற் செல்லுவையாயின், உன்னை நீ காண்டற்கு ஐயமில்லை. இதற்குயாது கூறுதியெனவினவ?

மூ-விடை— இதற்குமேற் செல்லுமாறு அறிந்திலன். இனிநீயே தஞ்சமன்றி வேறறிகிலன் என்று அவனடியில் வீழ்ந்தனனென்க.

ஞா-வி௵— இயமமுதலிய நெறித்தாகச் செலுத்திச், சமாதி பெறவைத்து அவனை விளக்கி, நினது அநுபவம் யாது கூறுதி என வினவ?

மு-விடை— அவனைப்பலகால் வணங்கி, உனது அநுக்கிரகத் தால் என்னையான் கண்டனன். கண்டதால் யான்பெற்றபயன் யாது எனின்; யானாகிய அறிவை அன்றி அயலாக ஒன்றிருக்கக் கண்டிலன் செகம் என்பது இல்லாமற் போயிற்றோ; உண்டெனின், தற்பிரத்தி யட்சத்தில் எங்கே; இல்லையெனின், தானாகக்கரைதலால் அன் னியமன்று உன்னியமெனின், அவை தானாகா எனவே; தன்னையன்றி யாதுமின்றெனவும், அவை தானன்றெனவுங் கண்டேனென்று தனதநுபூதி நிலையனைத்தையுந் தான் கண்டவாறு சொல்லித் திருவடி யில் வீழ்ந்தன னென்க.

ஞா-விடை—பந்தத்தில் உலகெனவும், விடுதியிற் பரமெனவுங் கோடற்கியைந்த தொன்றோ;பலவோ; இதனைக்கண்டு கூறுதியென?

மு-விடை—யானே; மருளாயவழி உலகாகவுந், தெருளாய வழி சிவமாகவும் நின்றதன்றி வேறு கண்டிலனென்றனன்.

ஞா-வி௵—ஆன்மா ஒன்றெனவும், பலவெனவுங் கோடற்கியை ந்தநெறி யாதோவெனவினவ?

மு-விடை—உபாதிசகித நாட்டத்தாற் பலவெனவும், உபாதி ரகித நாட்டத்தால் ஒன்றெனவுங் கோடற்கியைந்ததன்றி; ஆன்மா ஒன்றுமல்ல பலவுமல்ல வென்றனன்.

ஞா-வி௵—ஒன்றேயனைத்தாயின், சீவன் - கூடஸ்தன் - ஈசன் பிரமம் - எனப்பாகுபாடு வருவானேன்?

மு-விடை—சைதன்னியம் ஒன்றே; வியஷ்டியுடலைத் தானெ னலால் சீவனெனவும், சமஷ்டியுடலைத் தானெனலால் ஈசனென வும், வியஷ்டியளவாக அறிவைத் தானெனக் காண்டலாற் கூடஸ்த னெனவும், சமஷ்டியளவாக அறிவைத் தானெனக்காண்டலாற் பிர மமெனவும் வந்த பாகுபாடேயன்றி மற்றவற்றால் வந்த தன்றெ ன்றனன்.

ஞா-வி௵—அறிவுநாட்டத்தில் உபாதியளவு பாகுபாடு வருவா னேன்?

மு-விடை—வாசனையா லென்றனன்.

ஞா-வி஦ு— இப்பேதமு மெதுகாறு முண்டோவென்வினவ?

மூ-விடை— அறிவே தானுக வாகுமளவுமென்றனன்.

ஞா-வி஦ு— திருக்குதிரிசியபேதம் எதுகாறுமிருக்குமோ?

மூ-விடை— அறிவறியாமைபேத முள்ளளவுமென்றனன்.

ஞா-வி஦ு— யானெனதென்னு மகம்பாவமெதுகாறுமோ?

மூ-விடை— பிராதிபாலிகசத்து வுள்ளளவுமென்றனன்.

ஞா-வி஦ு— பிறப்பிறப்பென்னும் பேதமை எதுகாறு மிருக்குமோ எனவினவ?

மூ-விடை— தானே தானுகுமளவு மென்றனன்.

ஞா-வி஦ு—செகத்தாகார மாகாததற்கு யாது உபாயமெனவினவ?

மூ-விடை— தற்பிரகாச வடிவமாகப் பழகுவதே உபாயமென்றனன்.

ஞா-வி஦ு— திரிபுடி நாசத்துக்கு நெறியாதெனவினவ?

மூ-விடை— நடுநின்ற ஞானத்தை விளக்கிக்கொண்டு விடாது எங்குங் காண்பதே திரிபுடி நாசமென்றனன்.

ஞா-வி஦ு— செகங் காணப் படாமைக்கு நெறியாதோ வெனவினவ?

மூ-விடை— தனது அறியாமையை அறிவாகவிளக்கிக் காணில் அக்கணமே இன்றாய் முடியுமென்க.

ஞா-வி஦ு— உலகவாசனை சாஸ்திர வாசனைகட்கு அறுதியென்றோ வெனின்?

மூ-விடை—தனக்கு அயலின்றெனக் காணுமளவு மென்றனன்.

ஞா-வி஦ு— விடயமாவ தென்னே?

மூ-விடை— அநிர்த சடதுக்கமயமென்றனன்.

ஞா-வி஦ு—விடயமெனல் தனக்கெனச் சொரூபமொன்றின்றித் தோற்றமாத்திரமுஞ் சொன்மாத்திரமு மாயிருக்க; அநிர்தசடதுக்க விலக்கணத்தை யேற்றற் கியைந்த பொருளாகுமா?

மூ-விடை— அறியாமையையன்றி விடயமின்றாதலின், பொருளாகாதென்க.

ஞா-வி஦ு— மண்முதலியவைகட்கு அறியாமை யெங்ஙனமுதற்கருவியாகும், ஏற்குமாறு கூறுதியென?

மூ-விடை— சோதனையில், பூர்வபட்சமாதற்கு இயைந்த வடிவு நிறம் பல்வகையாயும், ஐவண்ணமாயும், முடிதலால் அறியாமையே வடிவ மென்றனன்.

ஞா-வி—— பரமாவ தென்னை;

மூ-விடை— சச்சிதானந்தமய மென்றனன்.

ஞா-வி— பரமெனல் தனக்கெனச் சொரூப மொன்றின்றித் தோற்றன் மாத்திரமாயும், சொன்மாத்திரமாயு மிருக்கச்; சச்சிதானந்த விலக்கணத்தை ஏற்றற் கியைந்த பொருளாகுமா?

மூ-விடை—அறிவையன்றிப் பரமின்றுதலின் பொருளாகாதென்க.

ஞா-வி— அறிவே பரமென லெங்ஙனமா மெனின்?

மூ-விடை—தீணபா லிடமாயும், அன்றுயு மெவ்வுயிரு மிருத்தலினும்; எவற்றையும் உணர்தற்பாலவாதலானும்; பிரவிர்த்தி நிவிர்த்திக்கு இயைந்த வினை முதலாயும், சகல கற்பனைகளாயும், அன்றுயுமிருக்கற் பாலதாதலானும்; அறிவே பரமெனப்படும்.

ஞா-வி— நானீமுதலியவை கற்பனையெனக் கூறுவதென் கருதியோ, அதனை விளங்கக் கூறுதியென?

மூ-விடை—அல்லவற்றை நானீயவ னவளெனவும், அண்ணன் தம்பி-தாய்-தந்தை - மாமன்-மருகனெனவும், சாத்தன் - கொற்றன் - தேவன் - பூதனெனவும் - சத்துரு மித்துரு வெனவும்-இன்னு மிவை போன்ற வண்ணப்பெயர் தந்து இன்னன் இன்னளெனவுங் கூறுவதா லென்க.

ஞா-வி— நடுநிலையாவதென்னை?

மூ-விடை— ஞானஞ்ஞான நிலைகண்டு இடை நிற்றல்.

ஞா-வி— ஞானஞ் சிறந்த தன்றோ?

மூ-விடை—சிறப்புற்றதேனுந் தானெனலையன்றி இவ்விருமையு மின்மையின், சிறப்பெனச் சாய்தல் கூடாதென்க.

ஞா-வி— வஸ்துவை யுளதெனவும், இலதெனவும், அன்றெனவும், ஆமெனவுங் கூறற்கு இடந்தருவ தெங்ஙனம்?

மூ-விடை— அந்தர்முக நாட்டத்தால் வஸ்துளதெனவும்; ஆமெனவும்; பகிர்முகநாட்டத்தால் இலதெனவும்; அன்றெனவு மியையப்பெறுமென்க.

ஞா-வி—அஞ்ஞான முதலிய மூன்றும் அகன்றனையெனத் திருவடி தீட்சை தந்து ஆசீர்வதிக்கத்; திருவடியில் வணங்கி நிர்விகற்பசமாதி எய்தினனென்க.

ய - வது, மூடவாதிமதம்

முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

௰௪ - வது

இனி

# சாத்தேயமதம்.



ஞா-வினா— ஞாயவாதி சாத்தேயனை நோக்கி, ஐயா! சாத்தேயமாவது யாது?

சா-விடை— சத்தியைப் பூசிப்பது.

ஞா-வினா— சத்தியாவது யாது?

சா-விடை— பரத்தினது வல்லபம்.

ஞா-வினா— அஃது இனையது எனத் தெரிவிக்க வேண்டுமென்றனன்?

சா-விடை— பரத்தினது அனந்தகோடி சத்திகளை யென்க.

ஞா-வினா— அந்தச் சத்தி ஒன்றோ, பலவோ?

சா-விடை— ஒன்றே பலவாக நிற்பதென வறிக.

ஞா-வினா— ஒன்று என்பதும் பலவென்பதும் யாது பெயருடையது?

சா-விடை— ஒன்று என்பது, சிற்சத்தி எனவும்; பலவென்பது, மாயாசத்தி எனவும் பெயர் பெறும்.

ஞா-வினா—பரத்தினது வல்லப மென்புழித்; தற்கிழமையாது, பிறிதின் கிழமை யாது?

சா-விடை— தற்கிழமை, சிற்சத்தி. பிறிதின்கிழமை, மாயாசத்தியென வுணர்க.

ஞா-வினா— இவ்விரண்டிற்கும் உதாரணம் யாதோ?

சா-விடை— கொற்றனது-கை-நிறம்-வேலை-இவைதற்கிழமை, ஆஸ்தி-வீடு-ஆயுள்-இவை-பிறிதின் கிழமையெனக் காண்க.

ஞா-வி — என்னையானறிவேன் எனல், சிற்சத்தி; அறியேன் எனல், மாயாசத்தி எனக்கோடல் போலுமோவெனின்?

சா-விடை— ஆமென்றனன்.

ஞா-வி— எதனைச் சத்தியெனல்?

சா-விடை— புடைபெயர்தலே.

ஞா-வி— இது யாதுபோலு மெனின்?

சா-விடை— பெயரும் எழுவாயும் போலு மென்க.

ஞா-வி— அஃது எங்ஙனமெனின்?

சா-விடை—புடைபெயர்தல் ஏலாமை- பெயர் எனவும், ஏற்றல்- எழுவாய் எனவுங் கொள்ளுமாறு போன்று, வஸ்து சலனம் இன்றி நிற்கின்-பிரமம் எனவும்; சலன முறின் சிற்சத்தி எனவும்; அந்தச் சலனம் செகசீவபரமாகப் பரிணமிக்கின் மாயை எனவும்; பெயர் பெறும். தன்னிலேக்கண் தானிலேயுறுவதும், சலனமுறுவதுமே அன்றி வேறு இடம் இன்மையின் "தன்னிலேக்கட் டன்னே நிறுப் பானுந் தன்னே, நிலேகலக்கிக் கீழிடுவானு-நிலேயினு, மேன்மேலு யர்த்தி நிறுப்பானுந் தன்னேத் தலேயாகச் செய்வானுந் தான்." என்ருரறிஞர்.

ஞா-வி— இது-யாதுபோல்வது, உபமானபூர்வமாக வெளிப் படுத்த வேண்டுமெனின்?

சா-விடை— ஆகாயமும்- வாய்வும்போலு மெனவறிக.

ஞா-வி— அஃது எங்ஙன மெனவினவ?

சா-விடை— ஆகாயமானது - தன்னிடத்தில் - தானே - சலிப்ப தால் வாய்வெனவும், இவ்விரண்டின் ஸ்புரிப்பே அக்கினி எனவும், இம்மூன்றின் சையோக ஸ்புரிப்பே நீரெனவும், இந்நான்கின் சையோக ஸ்புரிப்பே பிரிதிவு எனவும், இவ்வைந்தின் சையோக ஸ்புரிப் பே யண்ட பிண்டங்களெனவும் பெயராய்த் தன்னிடத்திற் ருனே விகாரமுற்று அமைதிபெறும். பெறினும், தனது பூரணத்துக்கு நட்டமுருது நிற்பதுபோலு மெனவறிக.

ஞா-வி— அங்ஙனமாயின், பரிபூரண மான பரமென்னுஞ் சத்தனைவிட்டுச் சத்தியை யேற்றல்; அஃதோர் பொருளன்றே, இதற்கு யாது கூறுதியெனின்?

சா-விடை—பரம் என்பதுஞ் சத்தியால் இயங்கப் படுவது அன்றித் தானே இயங்காது என்ச் "சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரினெத் தொழிலும் வல்லவாம், இவள்பிரிந்திடி னியங்குதற்கரி தரிதெனுமறை யிரைக்குமால்." இங்ஙனஞ் சான்றோர் வசன மிருப் பானேன் இதனை யோராததென்னை யென்றனன்.

ஞா-வி௫ — யாதோ ஒன்று; அனைத்தும் உண்டாகுக வெனச் சங்கற்பிக்க; அங்ஙனமே அனைத்தும் உண்டாயின என்று அருமறை களுங் கூறுவதால், என்னகருதி ஆணெனவும்; பெண்ணெனவுங் கூறவந்தது. இவற்றுள் ஒன்றாயின், ஆணல்லன் பெண்ணல்ல னல் லாவலியு மல்லனெனச் சான்றோர் கூறுவதென்கருதியோ?

சா-விடை—ஆண் பெண்ணென இரண்டு உண்டா யிருப்ப தென்னை; ஆணனைத்தும் பெண்வயப்பட்டுப் பிரியமோதப் பிர மோதமுற்று அகறற்கு இடம் இன்றிச் சலனமுற்று அதில்தானே சுழன்று சுழன்று அலைவானேன்? இதுபற்றிப் பரத்தை ஆணென வும், வல்லபத்தைப் பெண்ணெனவுங் கூறியதென்க.

ஞா-வி௫—கற்பனை ஆதலின் இவற்றிற்கு ஆண்பெண்ணலி முதலிய வெண்ணிறந்த பேதங்கள் வரலாம். முடிவிடத்து வருதற் கிடம் பெறாதே; சொல்வார்க்கின்றேனுங் கேட்பார்க்குமதி யின்றோ?

சா-விடை— எண்ணிறந்தபேதங்கள் கற்பனைகட்கு வரலாம் என் றீர். கற்பனைகள் என்றது இவ்வாறென விளக்கவேண்டு மென்றனன்.

ஞா-வி௫— பஞ்சபூதங்களை அன்றி உடல்களும், உடல்களை அன்றி ஆண் பெண் ணலிகளும் எங்கே; இன்றாதலாற் கற்பனை என் றாம். இதில் யாதுவழு?

சா-விடை— காமம் - தவித்தல் - ஊடல்-கூடல் -கருக்கோடல்- பிரசவித்தல்-வளர்த்தல்-காத்தல்முதலிய விவகாரமெற்றிற்கு, உண் டாயிருப்பதாற் கற்பனையென் றெங்ஙனமேற்கப்படும்.

ஞா-வி௫— எனதுவாதம், பாரமார்த்திகசத்து. உனதுவாதம், விவகாரிகசத்து. என்றால் எங்ஙனம் ஒருங்குறும், உறாததால் வாதிப் பதி லென்பயன்?

சா-விடை— இருவகைச்சத்தின் அர்த்தம் என்னை? தெரியா விடத்துப் பயனின்றெனல் மெய்யே; அவற்றைக் கூறுகவென்றனன்.

ஞா-வி௫— மண்ணுநூலும், பாரமார்த்திகம். கடமும்படமும் விவகாரிகம். இங்ஙனமாய உண்மை அர்த்தந் தெரியாது; சத்தன் - சத்தியென்று இரண்டாக்கின், வஸ்து விரண்டாம். இரண்டாயின், ஐயந்திரிபுக்கு இடமாய் மனமொருங்குறாது. சத்தனையன்றிச் சத்தி இல்லை எனின், வஸ்து ஒன்றாம். ஒன்றாயின், செகமும் பரமெனக் கோடல் வேண்டும். கொள்ளுதும் எனின்; வஸ்துவுக்குச் சுத்தம்-நிர்விகாரம் பூரணமெனற்கு இடமின்றாம். இதற்குயாதுகூறுதியெனின்?

சா-விடை— ஒன்று எனினும், பலவெனினும் விடாவழக்கா நிற்றலின் இது நீங்குமாறு எங்ஙனமென்றனன்.

ஞா-வி௫— வழக்கு இடுவோனை ஐயந்திரிபறக் கண்டவிடத்து அக்கணமே நீங்கும். இன்றேல் னீங்காது. ஒருதலைத் தீர்ப்பா முடியும். முடிவதால், அல்லலும் பிறவியும் அறுவாம். இதற்கு யாது கூறுதியெனின்?

சா-விடை— வழங்கிடுவோன் தன்னை உடல் எனக் காண்பதிலும் ஐயந்திரிபகறல் யாதுக்கென்றனன்.

ஞா-வி௫—உடல் எனல் அன்னமயகோசம். இதுவே தானாயின் ஏனையகோச நான்கெற்றிற்கு?

சா-விடை— இவ்வைந்துகோசமும் நான் அல்லனாயின், நான் எனல் யாதோ, அஃது எத்தகையது, எவ்விடத்தது, எக்காலத்தது. இதனை நன்கு உணர்த்த வேண்டும். இன்றேல், முன்போல் நிலை மாறுவனென்றன்.

ஞா-வி௫— சத்தியென்றனை; நினக்குக் காணப்படு நிலையைக் கூறுதியெனின்?

சா-விடை— பெண்வடிவாகக் காணப்படுகின்றதென்றனன்.

ஞா-வி௫— அகத்திலோ, புறத்திலோ?

சா-விடை— ஈரிடத்துமென்றனன்.

ஞா-வி௫—புறத்திற்காணப்படுவது; மண்முதலியவற்றாலாயது அகத்திற்காணப்படுவது யாதாலாயதோ? அதனைக்கண்டு கூறுதியென?

சா-விடை—முதற்கருவி இனையதென்றறிந்திலன். எனது கல்விஞான முற்று மொருங்குபடுத்தியுணரினும் இருப்பதாகத் தோற்று

கின்றது, இனையதென்று அறிந்திலன். இனி நீயே உணர்த்தவேண்டு மென்றனன்.

ஞா-வி௲—அவ்வடிவுக்கு, எட்டுப்புறத்தும் நிற்பது யாது, அதனைக்கண்டு இதனை யாதெனத் தெளிதியெனவினவ?

சா-விடை— அதனையுற்றுக்கண்டு இதனைக்காண, இன்னதிசையென்றில்லாமற்போய், ஏகவியாபகமாய்; சாட்சாத்காரமாய், ஆனந்தப்பிரவாகமாநின்றதென்று அதிசயித்து, அஞ்சலியோடு கீழ்ப்பணிந்து ஐயனே! எல்லாவழக்கு மொருங்குதொலைய வுண்மையை விளக்குவித்தனை யென்று பலகால் வழுத்திக் கேட்கவேண்டு மனைத்துங்கேட்டு நிர்விகற்ப சமாதியிலிருந்தனன்.

ம௲-வது சாத்தேயமதம்

முற்றிற்று.

---





உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

௰௨ - வது,

இனி

# பிரபலசுருதியற்பசுருதியினிலைமை.

ஞா-வி—மிகக்கற்றுணர்ந்த அந்தணனை நோக்கி வேதமானது பிரபலசுருதியெனவும் அற்பசுருதியெனவுங் கூறுவதென்னை?

அ-விடை— இலக்கியம் இங்ஙனம் இருத்தலி னென்க.

ஞா-வி— அஃதெங்ஙனமென வினவ?

அ-விடை— அறிவுமயமொன்று; அறியாமை மயமொன்றென நிற்றலினென்க.

ஞா-வி— இவ்விரண்டையும் இலக்கியமாக்கற்கு ஏதென்னை?

அ-விடை—சத்து-சித்து-ஆனந்தம்-முதலிய விலக்கணங்கட்கு அமைந்து நிற்றலின் அறிவை இலக்கியம் எனவும்; அநிர்த சட துக்க முதலிய இலக்கணங்கட்கு அமைந்துநிற்றலின் அறியாமையை இலக்கியம் எனவுங் கூறற் கியைந்ததென்க.

ஞா-வி— இவ் விருசுருதியு முடையோர் யார்?

அ-விடை— ஞானியுங் கன்மியுமென வறிக.

ஞா-வி— யானேற்றற்கு இயையத் தனித்தனி இனையரெனக் கூறவேண்டுமென?

அ-விடை— ஞானி; பரஞானி எனவும், அபரஞானி எனவும், கன்மி; பக்திகாண்டி எனவும், போககாண்டி எனவும் இருகூறதா நிற்பர். இவற்றை வேதவிதியுள் ஆங்காங்கு காணலாமென்றனன்.

ஞா-வி— இவற்றைச் சற்று வகுத்துக் கூறவேண்டு மென வினவ?

அ-விடை— அறிவேவடிவாய் விளங்கினோர் பரஞானிய ரெனவும், அன்றாய்த் தெளிந்தோர் அபரஞானியரெனவுஞ், சமஸ்த்தத்தையும் ஈஸ்வரார்ப்பணஞ்செய்வோர் பத்திகாண்டியரெனவுந், தம் பயனுக்காகச் செய்வோர் போககாண்டியரெனவும் பெயர்பெறும்.

ஞா-வி‌ஞ— இங்கே யிலக்கியமென்றது யாது?

அ-விடை— லட்சியார்த்தத்தை.

ஞா-வி‌ஞ—இலக்கியார்த்தத்தில் ஞானமஞ்ஞானமெனக் காண்பதெங்ஙன மெனின்?

அ-விடை— அவ்வவற்றின் இலக்கணத்தாலென்க.

ஞா-வி‌ஞ— அஃதெங்ஙனமெனின்?

அ-விடை—சமஸ்தமுஞ் சின்மாத்திரமாகக் கரைதற்கு இயையின் அதனை ஞானவிலக்கியமெனவும், உபாதானவுபாதேயமினையவென உன்னவொட்டாது சத்தியம்போலச் சமஸ்தமுங் காணப்படுதற்கு இயைவது அஞ்ஞான விலக்கியம் எனவும் அறிஞர்கூறுப. பரஞானிக்கே இவ்விருவகை இலக்கியமும் இலக்கணமும் அன்றி ஏனையோர்க்குத் தத்த இலக்கியமும் இலக்கணமும் உணரப்படாவென்க.

ஞா-வி‌ஞ— இங்ஙனம் இருக்கத்; தத்தம்பாடை யல்லாத வாத்ம விலக்கியம் இனையதெனக்கல்லார் அதற்கியையக்கண்டு இலக்கணம் படித்தல் எங்ஙனம் வாய்க்கும்?

அ-விடை— ஒருபோதும் வாய்க்காதென்க.

ஞா-வி‌ஞ— இவ்வுலகில் யாவர்பெரும்பாலரெனவினவ?

அ-விடை— போலிஞானியரும், அடாஞானியருமென்க.

ஞா-வி‌ஞ— இவ்விருதிறத்தினர் நிலைமையாது?

அ-விடை— ஏட்டுஞானியர், புகழுக்கும், குரு பீடத்துக்கும், அவாவலின் போலிஞானியரெனவுந்; தற்போதை காணுது கஞ்சா அபினிமுதலிய போதைக்குந், தன்னைத்தான் சுகிக்கவறியாது கைம்பெண் முதலியவைகளை அணைந்துசுகிக்கும் போகத்துக்கும் மிகக் கற்ருேர் அடாஞானிய ரெனவுங் கூறுப.

ஞா-வி‌ஞ—பெரும்பாலும் இத்தகையினராயின் தத்துவ ஞானி இனையரெனக்காண்டல் எங்ஙனமெனின்?

அ-விடை— யுத்திக்கு முரணுது சுருதியநுபவங் கூறுவரெனவறிக.

ஞா-வி‌ஞ— இதனுல் பரமஞானியர் அரியரெனக் கண்டாம். இத்தகையினராகிய விருதிறத்தரும் இருத்தலின், வேதமாதா; பிரபல சுருதியெனவும், அற்பசுருதி யெனவுங் கூறிற்று, இஃது ஏற்றற்பாலதே, பாஷையிருத்தல்பற்றி, இலக்கிய இலக்கணம் விதித்தாற்

போல, இங்ஙனமாய ஞானஞ்ஞான அநுபூதியிருத்தலின் இவற்றிற் கியைய விலக்கிய விலக்கணம் விதித்ததாகுமெனத் தோன்றுகின்றது இஃதேற்றற்பாற்றோ வன்றோ?

அ-விடை— ஐயமின்றி யேற்கப்படும். நீர் சுவாநுபூதியினர் அல்லரேல் வேதமாதாவின் உண்மை யெடுத்துரையீர் நன்று நன்று. நின்போலும் உலகெங்கணுந்தேடி யொருவரையுங் கண்டிலன். சரணஞ்சரணமென்று அஞ்சலிசெய்து, இங்ஙனமாயமுடிபு சங்கராசாரியரது பீடத்தினர்க்கன்றி யேனையோர்க்கு அறிவரிதென்றனன்.

ஞா-வி— அனுபூதிமுன்னரோ, வேதமுன்னரோ? வேதமெனின்' எதையுணர்த்த வேதம் வந்ததோ; அனுபூதியை. அன்றெனில், விடயம்-சம்பந்தம்-பயன்-அகாரியென்னு நான்கையும்; அனுபந்த சதுட்டயமென நூன்முகத்துக் கூறுவதென்னை? கூறுவதால் அனுபூதியே முன்னயதெனக் கோடற்கு யாதொன்றானுமுரணில்லை. இதற்கு யாது கூறுதியெனின்?

அ-விடை— இங்ஙனமிருக்கச்; சுருதியுத்தி அனுபவமென மாறி வழங்குவதென்கொண்டோ? இதுவுஞ்சான்றோர் வழக்கென்றனன்.

ஞா-வி—ஈஸ்வரவாக்கியம் வேதமாதியாதலால், அனுபூதியை யுத்திக்கு முரணின்றி விளக்கல் சத்தத்தாலேனும்; அஃது அருபமாதலின், அன்னியருக்கும், பின்வருபவர்க்குங் கூடாமையின் வரிவடிவாக்கியதாம். இங்ஙனமிருக்கச்; சுருதியுத்தியனுபவமென மாறிக் கூறுவதென்னை?

அ-விடை— அநுபவமுன்னையதேனும், அது; பலவாகச் சிதைந்து நிற்றலைக்காட்ட யுத்தியும், அந்தயுத்தி; தர்க்கம்-குதர்க்கமெனத் தெரியாது நிற்றலைக்காட்ட வரிவடிவாகிய சுருதியும் வந்தமுறை நீர் கூறியதேயொக்கும். "பழையனகழிதலும் புதியனபுகுதலு"மென்ற விதியால்; பின்னுள்ள நமக்குச் சுருதியன்றி யுத்தியும் யுத்தியன்றி அனுபூதியுஞ் சான்றோரனுபவித்த வண்ணம் யாமுநிலைப்பான் வேண்டிச் சுருதியுத்தி யனுபவமென்றது வழுவன்றெனவுணர்க.

ஞா-வி— சுருதியையேனும் யுத்திக்கொத்துக்கூறத்தெரியாவிடத்து வேதாந்த சாம்பிரதாயத்தாரென்பதில் யாதுபயன்?

அ-விடை— அவர்கள் கூறினும் யாமேற்றற்கு யாதுடன்பாடுளது. இன்றாதலால், அவர்களைப் பாமரரினுங் கீழாய் அவரெனப்புறங் கணித்தல் பிறர்மயங்காமைக்கேதென்க.

ஞா-வி௲— இங்ஙனஞ்செய்வதற்கும்; அவர்கள் நாணமுறாத தென்னை?

அ-விடை— அவர்போல்வார் புகழ்வதாலென்க.

ஞா-வி௲— இவர்கட்குச் சுகந்தான் யாதோவெனின்?

அ-விடை— இம்மையிற் பாமரராற் புகழும், விடய நுகர்தலில் தளர்வுறாமையுமே யென்க.

ஞா-வி௲— இவ்வாறாய இழிவை அவர்கள் உணர்வுறாததற்கு ஏதென்னை?

அ-விடை— அவர்கள் பரம்பரையாயுள்ள மூடசாம்பிரதாயத் தாலென்க.

ஞா-வி௲— இவர்களுக்கு இருப்பிட மெங்ஙனே?

அ-விடை— எங்கணுமென்றனன்.

௰க - வது

பிரபலசுருதியற்பசுருதியினிலைமை

முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

இனி

# அத்துவிதம்.

ஞா-வினா— அத்துவிதமாவதென்னை?

அ-விடை— இரண்டறநிற்றல்.

ஞா-வினா— இரண்டற நிற்றலென்பதென்னை?

அ-விடை— தன்னையன்றிக் காரணகாரிய மில்லாமை.

ஞா-வினா— அங்ஙனமு முளதோவெனில்?

அ-விடை— கடபடமென்ற விடத்து மண்ணையன்றிக் கடமும் நூலையன்றிப்படமும் இல்லையெனக் குறியாநிற்கும். நிற்கவே, கடபடத்தைப் பற்றி மண்ணும் நூலும் காரணமெனவும், இவை காரணமாதல்பற்றிக் கடபடங் காரியமெனவும், வழங்குமன்றோ. இங்ஙனம் வழங்குவதைக் காணும் இடத்து மண்ணுநூலுமே காரணமாகவுங் காரியமாகவும் அன்றி வேறில்லையென்பது விளக்கநின்றதுபோல, ஞானமுந் தன்னையன்றித் திரிசியம் வேறில்லையென்பதனால் ஞானமே காரணகாரிய மென்பதாயிற்றென வறிக.

ஞா-வினா— இங்ஙனங் கூறுவது சுருதிசம்மதமோ வெனின்?

அ-விடை— தத்துவமசியென்னும் வேதமுடிவாயுள்ள மகாவாக்கியங்காரணமாகவென்றனன்.

ஞா-வினா— எங்ஙனமெனின்?

அ-விடை— தத்-துவம்-அசி-யெனப்பிரித்து-தத்-அது, துவம்-நீ, அசி-ஆனாய் எனப் பொருள்கொண்டு, அதுவே நீ. நீயே-அது. எனத்தொக்கு நின்ற ஏகாரத்தை விரித்துத் தோற்றப் பொருளாக் கற்கு இடமானதாலெனக்காட்ட-அசி-ஆனாய்-எனநின்றதெனவறிக.

ஞா-வினா—துவிதம்-விசிட்டாத்துவிதமென்னும் இரண்டுவிதக் கட்சியாக்கியதற்கு மாறாகத்தானோ தத்வமசிவாக்கியத்தை இவ்வாறு பிரித்து இங்ஙனம் பொருள் கொண்டதெனின்?

அ-விடை—அல்ல; இங்ஙனம் பொருள்கோடற்கு உத்தியனுபவம் பூரணமாயிருத்தலினென்க.

ஞா-வி—— யுத்தி; ஆன்மாக்கள் தேக போக கன்ம அபிமானத் தாற் பற்பல கோடிபேதமாயிருக்க, ஏகமெனச் சாதித்தல் கூடாதே, யெங்ஙனஞ் சீவேஸ்வரானுக்கு ஏகத்துவஞ் சாதிக்கக் கூடுமெனின்?

அ-விடை—— உபாதித்திரியம் ஆன்மாவல்லவே, யுபாதித் திரிய மாகக் கருதி லக்குவைக்கில், ஆன்மா பலவாகவும்; அங்ஙனங் கரு தாது ஆன்மலக்குவைக்கில் ஏகமாகவும் விளங்குமன்றோ? இதறியார் எத்தனை சாதித்தாலும் யாதுபயனுளதாம். அதுபோல, ஆன்மா வும் ஞானமே. பரமும் ஞானமே. அன்றேல், சமஷ்டி வியஷ்டிகார ணகாரிய வுபாதித்திரியமாகவேண்டும். ஆகுமெனின், என்னுடல்-என்மனம்-என்னறியாமை யென்றுதிருக்கவேண்டும். இல்லையெனில், ஆன்மா இவையல்ல வாகவேண்டும். இவையல்லவாகவே ஆன்மா வும் பரமும் ஞானமாகவேண்டும். தன்மை யுணர்தற் பாலதன்றே யெனின், அஞ்ஞானமாகவேண்டும். ஞானத்துக்கு வேறெனின், அறிவையன்றி அறியாமைக்குச் சொரூபம் வேறிருக்க வேண்டும். இருக்கின்றதென்பமேயெனின், திரிகாலஞானமும்-கல்விஞானமும் தன்னையறிய முயலாது அன்னியத்தை யறிய முயலில் அஞ்ஞான மெனவும்; தன்னை யறிய முயலில் ஞானமெனவும் பெயர் பெறும். ஆதலின் ஞானமொன்றே அஞ்ஞானம் எனப்படும் அன்றி வேரு காது. சிற்றறிவும் பேரறிவும் எனப்படுவது சமஷ்டி வியஷ்டி யுபாதித் திரியத்தால் அன்றி வேறெனற்கு யாதொரு காரணமேயில்லை. இத ஞல் பரசீவருக்கு ஐக்கியஞ் சாதிக்கக்கூடுமென வறிக.

ஞா-வி—— பரசீவர் ஏகமானற் சீவர்கள் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடா யிருப்பானேன்?

அ-விடை—— விசாரியாவிடத்தெனவறிக.

ஞா-வி—— விசாரியாவிடத்துள்ள இப்பேதங்கள், விசாரித்த விடத்து எவ்வாறு எங்ஙன மகன்றனவோ வெனின்?

அ-விடை——பழுதையினிடத்துப்பாம்புங்கட்டையிற்கள்ளனும் விசாரித்தவிடத் தெங்கே. இதனைச்சொல்லில் அதனைச் சொல்லுவ னென்றனன்.

ஞா-வி—— ஆனல் இருப்பதுதான் யாதோவெனின்?

அ-விடை—— பிரமமாத்திரமென்றனன்.

ஞா-வி—— எதனைப் பிரமமென்றதெனின்?

அ-விடை—— சுத்த சைதன்யத்தை யென்றனன்.

ஞா-விஞ— எதனைச் சைதன்யமென்பதெனின்?

அ-விடை— அறிவை யென்றனன்.

ஞா-விஞ—எழுவகைத்தோற்றவுயிரும் உணர்வன்றோ கிஞ்சிக் ஞமாதலின் பரவஸ்து வாகுமாவெனின்?

அ-விடை— உபாதித்திரியத்தைத்தள்ளி உணர்வை மாத்திரம் எடுத்துத் தனியே சிந்திக்கில் திரிபுடியின்றித் தான்மாத்திரம் விளங் கும். இங்ஙனஞ் சிந்திப்பாரில்லாததால் வேறெனப்பட்டது. வேறு எனினுஞ் சோதனை முடிவில் ஞானமாகவே முடியும். இதுபற்றி யன்றோ,சான்றோர் பலரும் சரியை-கிரியை-யோகமெனக்கூறி அந்தத் தில் ஞானமெனமுடித்தார். இதனல் ஞானத்தை யன்றிப் பரமெனல் இல்லையென்பதற்கு உதாரணம். வாசிட்டம். "தீவினை யெலாமகற்றி மங்கலமெலாமுதவுந் தேவபூசை" என்பதனுனும்; "தேகமுதற்சிறி யனவா" மென்பதிஞலும்; இக்கருத்து ஞாயத்துக்கு அணுவேனு மாருயதன்றென்னும் யுத்தியானும்; இந்த யுத்தி, சைதன்ய இலக்கண விலக்கிய பரிட்சைக்கு இயைந்ததென்னும் அனுபவத் தானும்; உயிர் பரமாகுமென வுணர்க.

ஞா-விஞ— யுத்தியாவது யாதெனின்?

அ-விடை— அத்தியாரோபமெனவும், அபவாதமெனவும் கூற ப்படுவனவாகிய இவ்விரண்டுமே யுத்தியெனப்படும்.

ஞா-விஞ— இவ்விரண்டிற்கும் அருத்தமென்னை?

அ-விடை— பந்தமெனவும்-வீடெனவுமாம்.

ஞா-விஞ— அப்படியென்ருல் கருத்தென்னை?

அ-விடை— பொருளல்லாததைப் பொருளெனவும், பொரு ளைப் பொருளெனவுங் கோடலென வறிக.

ஞா-விஞ—இவ்விரண்டு கொள்கையில் வேதாந்திக்கும், ஏனைய மதத்தருக்கும் யாது சம்மதமெனின்?

அ-விடை— "திரிபைச்சுயம்பென்னுஞ் சிந்தைதிடத்தை, யொ ருவுதல் வேதாந்தத் துண்மை-யொருவாமை, யேனைமதத்துண்மை யெதுகடியுமுக்குற்றம், சோனைபோற் பேசினுமென் சொல்." எ-து. கல்தீது-கலைறீது-முள்தீது-முலைடீது என்றுற்போலத் திரியாத திரி பதார்த்தங்க ளில்லை. இல்லாதனவாயிருக்க இவற்றைத் திரிபென்று அணுவேனுமுணராமல்சுயம்பெனக்கொண்ட சிந்தனையின்திடத்தை

ஐயந்திரிபற அகற்றல் வேதாந்தத்தின் உண்மை நிலையாம். அதனை இறையளவும் அகற்றுமை மற்றமதங்களின் உண்மை நிலையாம். இங்ஙனமிருக்க; முக்குற்றங்களையு மாற்றத்தகுவது இவ்விரண்டில் யாது இதனை யறியாது சோனுமாரிபோல் பயனின் மொழிகளை விடாது பேசினும் யாதுபயன் நீயே சொல்லுதி. எனவே, வேதாந்தம்போல் உண்மைநிலை எம்மதத்தும் இல்லையெனக்குறிப்பித்ததென அறிக.

ஞா-வி—ஏனையமதத்தர் மெய்போற் காட்டும் பிரளியைத் தெரிந்தவளவு சொல்லவேண்டுமெனில்?

அ-விடை—"சுயம்புலகாமென்பர் சுயம்பிதெனக்காட்டார், சுயம்புபரமென்பதெவன் சொல்லை-யியம்பறியார், வேதாந்தம்போலெதையும் மேலாங்குருவென்பர், நாதாந்தங்கண்டவர்போனங்கு" எ-து. பெரும்பாலும் எங்கணும் பெரும்பிரளிசெய்யும் ஏனையமதங்களின் நிலையை விரித்துச்சொல்லுதும். அதாவது; உலகமனாதி நித்தியமாதலிற் சுயம்பென்பர். சுயம்பெனல் இஃதெனச்சுட்டிக்காட்ட அறியார். இவர்கள் பரவஸ்து சுயம்பு பதார்த்தமெனக் கூறுவது என்ன மடமை. இங்ஙனங்கூறுவது வெறுஞ்சொல்லே, வேதாந்தம் போல் எப்பொருளினையும் ஐயந்திரிபற விளக்கத்தெரியார்-இவரோ தம்மைத்தாமே மேலானகுருபீடமென நன்குமதித்து அகங்கரிப்பர். ஆரைப்போலெனின், பிரிதிவு தத்துவமுதல் நாததத்துவ மீறுகச் சொல்லப்பட்ட தொண்ணூற்றாறு தத்துவங்களில் முடிபாயுள்ள நாதாந்தங்கண்டுள்ள மகான்களைப்போல. இதனால் யாதுபயனும் இல்லை யெனவறிக.

ஞா-வி—"திரிவிதவுலகத் தரிதொருஞானி" யென வருமையிற் கூறுவானேன் யாதுபற்றி யெனின்?

அ-விடை—அறிவென்றும், அறிபடுபொருளென்றும் இரண்டாம். இவற்றுள்; ஞானேந்திரிய மைந்து - கர்மேந்திரிய மைந்து-கரணநான்கு-சீவன்-ஈஸ்வரன் - சாட்சி ஆகிய இவையனைத்திற்கும் அறிவென்றும்; பூதாதி பௌதிகங்களும்-பற்பல அண்டாண்டகோடி நிரைகளுமாகிய இவை அனைத்திற்கும் அறிபடு பொருளென்றும் அறிஞர் கூறுவர். சகசீவபரங்கள் ஒவ்வொன்று மளவில்லை. அவற்றை எல்லாஞ்சுருக்கிச்சகசீவபர மூன்று எனவும், அம்மூன்றையுஞ் சுருக்கி அறிவு அறிபடுபொருள் என இரண்டு எனவும், அறிபடு பொருள் அறியாமை அன்றி இன்மை ஆதலின், அறிவு அறியாமை எனவும் ஆக்கி-அறிவன்றி அறியாமைக்கு வேறுபொருளின்மையின்

அறிவொன்றேயெனவும், அவ்வறிவுந்தன்னையன்றி இன்மையின் தானே தானெனவும், சுருதிகுருசுவானுபவத்தால் ஐயந்திரிபறத் தெளிதல் அருமை ஆதலின் திரிவிதவுலகத்தரிதொருஞானி எனவும், பொருளமையப்பெற்றும். ஞானமும் அஞ்ஞானமுந் தன்னையன்றி இல்லையென்பது கருத்தென அறிக.

ஞா-விஞ— அறியாமையே அண்டாண்ட பிண்டங்களென்றது எங்ஙன மேற்கப்படுமெனின்?

அ-விடை— அண்டாண்ட பிண்டங்கள் அனைத்தும், அணுக்குழு சையோகவிகாரமெனத் தெளியாது சுயம்பெனக்கோடல் அறியாமை அன்றோ; அன்றெனின், எவ்வளவு நுட்பமும் எவ்வளவு மகத்தும் ஆராய்ச்சியில் தனக்கெனச் சொரூபமின்றிப் போவானேன். போதலால் அவ்வவ் விகாரப்பொருள் சுயம்புபோல் தோற்றினுந் தோற்றம் என அறியாது மெய்ப்பொருளெனக் கருதி நானீ அவனவளதுவென்றும், தந்தை-தாய்-மகன்-மகள்-அண்ணன்-தம்பி-மாமன்-மச்சான்-பேரன்-பாட்டன்-உறவு-அயலான் - இன்னவருணத்தான்-இன்னஆசிரமத்தான் - சத்துரு - மித்துருவென்றும், மயங்குவது பிராந்தியன்றோ; இந்தப்பிராந்தி அறிவின் விகற்பமாதலால் அறியாமையே திரிசியமெனப் பட்டதென வறிக.

ஞா-விஞ—அறிவே அறியாமையென்றது எங்ஙனமாமெனின்?

அ-விடை— அறிவானது அகம்புறத்தில் நின்று தானே சின்னமாகவும் அவிச்சின்னமாகவும் பரிணமித்து அவற்றை அன்னியமாகக் கருதி இச்சாஞானக்கிரியை புரிந்து அவலமுறுவது ஆதலால் அந்த அவசரத்தில் தனக்கு அறியாமை எனவும்; இவை எல்லாந் தன்னை தவிரவில்லையென்று ஐயந் திரிபறத் தெளிந்த அவசரத்தில் தனக்கு அறிவு எனவும், அனுபவம் வரலால் அறிவே அறியாமை என்றதற்கு ஐயமில்லையென வறிக.

ஞா-விஞ— தான் எதுவாக விளங்குவது முடிபோ வெனில்?

அ-விடை--தான் அறிவாக விளங்குவதே தீர்ந்தநிலையென்றனன்.

ஞா-விஞ— தானென்பது யாதோவெனில்?

அ-விடை— தானென்பது அறிவறியாமையாகவும், அல்லாததாகவும் விளங்கித் தான்மாத்திரமாயிருப்பது.

ஞா-விஞ— தானே தானுகவென்னுது அறிவாக விளங்குவது முடிபென்பானேன்?

அ-விடை— தான் அறிவாகவிளங்காவிடின் தானேதானுதல் கூடாதெனவறிக.

ஞா-வி௵— தான் அறிவாக விளங்க முயலுவானேன்?

அ-விடை— அறியாமையாக விளங்கி நின்றதைப்பற்றி யென வறிக.

ஞா-வி௵— அறிவறியாமைக்குப் பேதமென்னை?

அ-விடை— அறிவாவது தன்னையன்றிக் காரணகாரியம் இன்ருகவும், தானன்ருகவும் விளங்குவதெனவறிக.

ஞா-வி௵— அறியாமை யென்பதோ வெனில்?

அ-விடை—அளவிறந்த சீவபேதங்களாகவும், அளவிறந்த அண்டாண்டகோடி பேதங்களாகவும், அனேக ஈஸ்வரபேதங்களாகவும், தூல-சூக்கும-காரண-மகாகாரணபேதங்களாகவும், எடுக்குந்துறையும் முடிக்குந்துறையும் ஒன்றுபடற்கு இடம் இன்ருகவும், அனர்த்தத்திற்கும் மோகாதிவிளைவுக்கும் வித்தாகவும் நிற்பதெனவறிக.

ஞா-வி௵— அறிவாகவும் அறியாமையாகவும் நிற்கும் அவசரத்தில் ஒன்றில் ஒன்று இல்லாமையாகிய அன்னியோன்னியாபாவத்தை யேலாதது யாதோவெனில்?

அ-விடை— இவ்விரண்டிற்கும் விலட்சண சலட்சணமாய் இருப்பதுதானென வறிக.

ஞா-வி௵— தானேதானுகநிற்கு முடிவான அனுபவநிலை இன்னதென விளங்கற்கு உபமானம் யாதோவெனில்?

அ-விடை— களங்கமற்ற கண்ணுடிக்குமுன் களங்கமற்ற கண்ணுடி காட்டினுற்போலுமெனவறிக.

ஞா-வி௵— இங்ஙனநிற்க; என்றும் இருந்தபடி இருப்பதில் இயல்பேயென ஞானநூல்கள் கூறுவானேன்?

அ-விடை— விகற்பித்ததுபோலவும், நிர்விகற்பமானது போலவுந் தோற்றுவதே அன்றி எதார்த்தமா யின்றெனவறிக.

ஞா-வி௵— கானல்நீரும் பழுதைபாம்பும் உண்டானதும் இல்லை அழிந்ததும் இல்லை என்னுந் திருட்டாந்தம் வஸ்துவின் இருப்பைக் காட்டுதற்கு என்பது மெய்யே; இங்ஙனமாய பிராந்தி வருதற்கு ஏதென்னையோ வெனின்?

அ-விடை— காணுமறதியினுலெனவறிக.

ஞா-விணு— மறதிவருவானேன்?

அ-விடை— பிரவிர்த்தி நிவிர்த்தியென்னும் இரண்டு சத்திகள் பிரமத்திற்கு இயல்பாதலின் வந்ததென வுணர்க.

ஞா-விணு—இயல்பாயின் நீங்குமாறுதான் எங்ஙனேயெனின்?

அ-விடை— "வாயுஸ்தம்பனஞ் சலஸ்தம்பன மணிமந்திரமருந் தாலே, தேயுஸ்தம்பனஞ் செய்திடலதிலதிற் சிறந்த சத்திகளெங்கே நீயச்சச்சிதானந்தமாய் வேறென்று நினைந்திடா திருப்பா யேல், மாயைச் சத்திபோ மீதன்றி மந்திரமறைகளிற் காணேமே" என்ற வாறு இருக்கிற் பிரவிர்த்திக் கிடமின்றெனவறிக.

ஞா-விணு — மாயை என்பது தோற்றன் மாத்திரமோ எதார்த் தமோ?

அ-விடை— தோற்றன் மாத்திரமெனவறிக.

ஞா-விணு— யாதுபோலெனின்?

அ-விடை— பளிங்குக் கண்ணுடியிற் றோற்றும் பலவித நிறம் போலுமெனவறிக.

ஞா-விணு— இவ் உபமானங் கூறவந்தது பிரமத்தில் யாது குறி பற்றியெனின்?

அ-விடை— பிரமம், சச்சிதானந்த மாகையால் அச் சச்சிதா னந்தமே அனிர்த சட துக்கமாகத் தோற்றுகின்றது. இத்தோற்றம் யாதெனில், சகசீவ பரமென வறிக.

ஞா-விணு—இந்தச் சகசீவபரம் உண்மையாய் அனுதிநித்தியமா யிருக்க, அனிர்த சட துக்க மென்னலாமா வெனின்?

அ-விடை— பதார்த்த சோதனையில் அல்லவல்லவெனப்போய் இம் மூன்றும் அறிவாய் முடிதலால் சொல்லலாமென வறிக.

ஞா-விணு— எங்ஙனமெனின்?

அ-விடை— பிரிதிவாதி தத்துவங்களில் ஒரு மண்ணை விசா ரிக்குமிடத்துக், காரியங்களையெல்லாந் தத்தமக்குரிய காரணங்களில் ஒடுக்கிக்கொண்டுபோக முடிவில் அறிவாய் முடிதலில் சத்தே அசத்தெனப் படுமென வறிக.

ஞா-விணு—காரண காரிய வாதமுதலிய அபேதவாத ஐந்தா னும் வருந்திப் பொருள் கொண்டு அத்துவிதஞ் சாதிப்பானேன்? அதது இருந்தபடி யிருக்கத் துவிதஞ் சாதிக்கலாகாதா?

அ-விடை— சுயம்பானுல் சாதிக்கலாம்.

ஞா-வி௵— அதைக்குறித்து நமக்கென்ன?

அ-விடை— விசாரமற்ற பாமரநிலேயே சிறப்புற்றிருக்கவேண்டும். அங்ஙனம் இல்லேயே இதென்னமதி யென்றனன்.

ஞா-வி௵—திரிபதார்த்த விசாரத்திலோ கல்விவிசாரத்திலோ? திரிபதார்த்த விசாரத்தில் எனின், சற்குருவாகிய எதார்த்த ஞானி சன்னிதானத்தில் விசாரித்துத்தெளிய வேண்டும். தெளியினும், அவனது பூரண கிருபை இன்றேல் ஞானேதயம் இன்ரும். பூரண கிருபை உண்டாயினும் கதகர்ம புண்ணிய பரிபாக மின்றேல் அக்கினியில் வாழைக்கட்டைபோல் ஞானேதயம் இன்ரும். கடாக்கினியில் வாழை முதலிய அபக்குவ விருட்சங்களும், பெரும்பாறை முதலிய மகா பர்வதங்களும், வெந்து நீருயுருகியோடும்; அதுபோல ஞானசான்பால் ஞானக்கினி மேலிட்ட விடத்தில் அந்தச் சன்னிதியில் எதிரிட்ட அபக்குவவுயிருக்கும் ஞானேதயமாம். கல்வி விசாரத்திலோ பாஷை ஐயந்திரிபற விளங்கும். திரிகால ஞானத்திலோ ராஜத திரிசியங்கள் எல்லாம் விளங்கும். இங்ஙனமிருக்க, நீர் விசாகம் என்றது எதனையோ வெனின்?

அ-விடை— ஆத்ம ஞான விசாரமென்றனன்.

ஞா-வி௵— ஆத்மஞானவிசாரம் யாதோவெனின்?

அ-விடை— நானுர், என்போன்ற உயிர்களார், எனக்கு வெதிருத்தமாயுள்ள சடபேதம் யாது, என விசாரிப்பதென வறிக.

ஞா-வி௵— இதனுல் யாது பயனெனின்?

அ-விடை— எங்குந் தானே தானுக இருத்தலென்றனன்.

ஞா-வி௵— இதனினும் வேறுபயனின்ருேவெனின்?

அ-விடை— உண்டாயிற் சொல்லுகவென்றனன்.

ஞா-வி௵— மற்ற விசிட்டாத்துவிதிக்கும், துவிதிக்கும், இத்தகையபேறு இல்லாததற்கு ஏதென்னை யெனின்?

அ-விடை— மூன்று இலக்கணவாக்கிய அனுசந்தான மில்லாததாலென்க.

ஞா-வி௵— "எல்லாமா யல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டி" யெனக் கூறுவானேன்?

அ-விடை— அவர்களணையில் நிற்காததாலென்க.

ஞா-வி௵— அவர்கள் அணையாவ தென்ன?

அ-விடை— திரிபதார்த்தமும் என்றும் அநாதி-நித்திய மெனக் கோடல்.

ஞா-வி௵— சமுத்திரத்தை எங்குஞ் சலமயம் என்றாற்போலச், சமஸ்தத்தையும் எங்குஞ் சிவமயமென்ற தென்னை யெனின்?

அ-விடை— சிவத்தின் வியாபகத்திலன்றிச் சமஸ்தமு முற்பத்தி, ஸ்திதி, லய, மாதற்கு வேறிடமின்மையின் அங்ஙனங்கூறப்பட்ட தென்க.

ஞா-வி௵— சிவமாகுமா?

அ-விடை— சிவத்தின் சங்கற்பத்தாலாயது ஆதலின், சிவமே யெனக்கொள்க.

ஞா-வி௵— சேணியனலாய வஸ்திரங்களைச் சேணிய னென்னலாமா?

அ-விடை— அங்ஙனமன்றே; சிவத்தை அன்றிப் படைப்புக்கு முன் துணைக்காரணமும் முதற்காரணமும் இன்றாதலால் சிவமே மூன்றுகாரணமாம் என்பது பெற்றாம். பெறவே சிவத்தை அன்றி ஒன்றுமில்லையென்பதாயிற்று.

ஞா-வி௵—இது அத்துவிதம் அன்றோ, திரிபதார்த்தம் எங்கே யெனின்?

அ-விடை— இல்லையெனவறிக.

ஞா-வி௵— முன்னர் உண்டாயிருந்த திரிபதார்த்தமும் இப்போது எங்கேயெனின்?

அ-விடை— முன்னர் உண்டாயிருந்தால் அன்றோ, பின்னர் இல்லாது இருக்கலாம். பழுதையிற் பாம்புபோலும், கானலினீர் போலு, நான்கு காலத்திலு மில்லையென வறிக.

ஞா-வி௵— நான்கு காலத்திலும் இல்லாதிருந்தால் அத்தியாரோபம் அபவாதம் யாதுக்காகவெனின்?

அ-விடை— உள்ளதுபோற் றோற்றலினா லென்க.

ஞா-வி௵— உள்ளதன்றாயின் கர்ம்மமும்-பத்தியுமெனக்காண்டம் இரண்டாக்குவானேன்?

அ-விடை— பொருள் அல்லவற்றைப் பொருளென்று உணர்பவர்க்கென்க.

ஞா-வி௵— ஆயின் பொருளாவது யாதெனின்?

அ-விடை—தானே சகல காரண காரியங்களா நின்றும் அல்லா திருப்பதென வுணர்க.

ஞா-வி௵— தனக்குகாரணமொன்று மின்றாய்த் தான் காரியப் படாதிருப்பது ஒன்றுமின்றே, இங்ஙம் பார்க்கின் அநவத்தா தோ டமாமுடியுமே, இதற்கு யாது கூறுதி யெனின்?

அ-விடை— சொல்லடுக்காலோ, வஸ்துசோதனையாலோ? சொ ல்லடுக்காலெனின், பயனின்றி முடியும். சோதனையாலெனின், ஐயந் திரிபின்றி முடியும். எங்ஙனம் எனின்,

சொல்லடுக்காவது:—அண்டபிண்டங்கள்; சுயம்போ-விகாரமோ? சுயம்பெனின், அணுக்குழூ சையோகம் இன்றி இருக்கவேண்டும். விகாரமெனின், படைப்பென்றுது இருக்கவேண்டும். விகாரமெனக் கொள்வதே துணிபெனின், காரணகாரியம் ஏற்க வமையும். காரணமோ, ஐம்பூதமென வரும். வரின், அண்டபிண்டங்கள் காரிய மெனச்சொல்லாதமையும். பூதமிருவகைப்படும். அது; ஸ்தூலம்-சூக்குமம் என்பன. சூக்குமத்தை அன்றித் தூலபூதம் இருக்கவேண் டும். இல்லாமையால், தூலபூதம் காரியமெனவும், சூக்கும பூதம் காரணம் எனவுமாம். சூக்கும பூதத்திற்குக்காரணம் அவித்தை. அவித்தைக்குக்காரணம்-மாயை. மாயைக்குக்காரணம் அறியாமை. அறியாமைக்குக்காரணம் அறிவு. அறிவுக்குக்காரணம்-பேரறிவு. பேரறிவுக்குக்காரணம் இல்லை எனின், நமக்குத் தோன்றாமையால் இல்லை என்னலாமா? இருக்கின்றதெனின், இப்படியே போகில் எல்லை இன்றிக் குறிபாவங்களுக்கிடமின்றி விவர்த்தமா முடியும்.

வஸ்து சோதனையாவது:— பிண்டமாவது, தேகம் என்பது யாது? யானெனப்படுவதெனின், என்றால் அறியப்படாதிருக்கவேண் டும். இதையன்றி யானெனற்குப்பொருளாயுள்ள கர்த்தத்துவம் எவ் வுயிர்க்கும் இல்லையே எனின், மலவுடலாதலால் மலம் நானெனப் படுமா; படாதெனின், அதற்குப்பாத்திரமாயுள்ள உடலும் நானென் னக்கூடுமா; கூடாதெனின், தேகவளவு நானென்னும் பாவம் வர வேண்டுவதின்றே; வந்திருக்கின்றதே எனின், அது தேகத்தின்தர்ம மா; தேகம்பாவிக்காது செடமெனின், அறிவினதாகவேண்டும். அறி வு மூன்றவத்தையினும் விஸ்வன்-தைசதன்-பிராக்ஞன்-என்னும் அ பிமானிநாமத்தை ஏற்று அந்தந்த அவஸ்தைக்குத் தக்கவாறிருந்து

விவகரிக்கும். இங்ஙனமிருக்கினும், அறிவின்ஸ்புரிப்பாகிய ஸ்மரணை உண்டாயின் அதனது பரிணமிப்பின் அவசரநிலையே தூல-சூக்கும-காரண வடிவாகத்தோற்றலே அன்றி வேறின்றெனத்தெளிதல்.

இவ்விரண்டில், நிரதிசயானந்தத்தைத்தாத்தக்கது வஸ்து சோதனையெனவறிக.

ஞா-வி— காரணகாரியமாயும், அல்லாததாயும் இருப்பது எதுவோ, அதுவெனக் கூறில் குருடர் குறியொக்கும்.' இதுவெனக் கூறில் வஸ்துவின் இலக்கனங்களை ஒத்துப் பார்க்க வினையில் இது தான் பரவஸ்து எனப்படுவது என்றும், இலக்கணங்கட்கு முரணில் அல்லவெனப்படுவதென்றுங், கொள்ளவுந் தள்ளவுங் கூடும். ஆதலின் இது வெனக் கூறவேண்டுமெனின்?

அ-விடை— மெய்ஞ்ஞானமென்றனன்.

ஞா-வி— பொய்யுணர் உண்டோ வெனின்?

அ-விடை— உண்டு.

ஞா-வி— அஃதியாது?

அ-விடை— விகாரத்தைச் சுயம்பென வுணர்தல்.

ஞா-வி— இவ்விருவகை உணர்வையும் விளங்கச்சொல்ல வேண்டு மெனின்?

அ-விடை— தன்னைத்தானறிவது மெய்யுணர்வென்றும், தன்னில் வேருயறிவது பொய்யுணர்வென்றுஞ் சொல்வதென வறிக.

ஞா-வி— உணர்வு இரண்டெனப்படுமே யெனின்?

அ-விடை—சூரியனொன்றே, சலத்தில் பிரதிபலித்து இரண்டாகக் காண்டலே அன்றி வேறின்றுதல்போல மெய்யுணர்வே, புத்தி விகற்பத்தால் அயலுணர்வாகக் காண்டலே யன்றி வேறின்றென வுணர்க.

ஞா-வி- இங்ஙனமெல்லாங்கூறவேண்டியது யாதுக்கெனின்?

அ-விடை— ஐயந்திரிபின்றி யேக சைதன்யமாக விளங்கற்கு என்க.

ஞா-வி— எழுவகைத் தோற்றமாயுள்ள சித்து பேதங்கள் அனைத்துஞ் சைதன்யப்பிரதி பலன் என்பது உத்திக்குமுரணாது நிற்றலின், ஏகசைதன்யமாவிளங்கும் என்பதைக் கிஞ்சித்துந் தடுப்போமல்லம். பூதபௌதிகங்களும் - அண்டாண்ட பிண்டங்களும் - சட

மன்றோ, சித்துக்கு விசாதிகமன்றோ? இவைகள் எங்ஙனம் ஏகசை தன்யமாகவிளங்கும். இவ் ஐயந் தவிர்க்க வேண்டு மெனின்?

அ-விடை— அரசன் கொலுமண்டபத்துச் சென்றானென்புழி, ஆடையாபரண விருதுகளோ டெனச் சொல்லவேண்டுமோ, அது போலச் சகல கற்பனைகளின் வயத்ததாகாது தன்வயத்ததாகித் தனித்ததெனச் சொல்லவேண்டுமோ வேண்டுவ தின்றென வறிக.

ஞா-வி— அகம்புறத்திற் றோற்றுகின்ற தேகாதி சடபேதங்களை எங்ஙனஞ் சின்மாத்திரமாக்குவதோ வெனின்?

அ-விடை— சைதன்யத்தை அன்றி ஒன்றும் இல்லை எனக் கற்றுக் கேட்டவாறு சாட்சாத்காரமாக்கியக்கண் அந்நாட்டத்தினின்று கணமும் அகலாது நின்று எதிர்த்த விடயங்கள் அனைத்தையும் அதுவாகத் தரிசிக்கில் அக்கணமே பிறிதாகாது சின்மாத்திரமாக அப்பில் உப்புபோற்கரைந்து இரண்டுபடாது விளங்குமென வறிக.

ஞா-வி— சைதன்யம் விகாரிப்பதுந் தவிர்வதும் அதற்கு இயல் போவெனின்?

அ-விடை—வேறு இடம் இல்லாமையால் இவ் இரண்டும் அத்தியாசமென வறிக.

ஞா-வி— எங்ஙனந் தான் அறிந்து நிற்பதோ வெனின்?

அ-விடை— அதுவாகில் அதுவே சொல்லுமென வறிக.

௰௨ - வது,

அ த் து வி த ம்

மு ற் றி ற் று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

## ௰௩ - வது,

## இம்மூன்றின்

# அவசரநிலை.



ஞா-வி௱— மூன்ருவதுயாது?

அ-விடை—துவிதம்-விசிட்டாத்துவிதம்—அத்துவிதமென்பன.

ஞா-வி௱—இம்மூன்றும் அவசரநிலையெனல் எங்ஙனமாமெனில்?

அ-விடை— தேகபோகத்தில் யாதோர் ஏதுவாலன்றி உண்மை யாகவே சலிப்பு நேரிட்டவிடத்துப் பகவத்தியான முண்டாய்ச் சரியை கிரியை செய்வான் ஒருவன் பதிபசுபாசம் உண்டெனவும்; அவை மூன்று எனவும், வெவ்வேறு இடத்தது எனவும் பெயர் உபாதி உடல் உணர்வு என்பவற்ருல் மேல் கீழதெனவுங் கொண்டு ஆண்டானடிமைத்திறம் பூண்டொழுகல் துவிதமாதலால் இந்த அவசர நிலையைத் துவித மென்பர். மற்ருேரன்பன் பதியைப் பரமாத்மா எனக்கொண்டு அந்தப் பரமாத்ம வியாபகத்திற் பசுவும் பாசமும் வியாப்பியமெனவுந் தனித்தனி இலக்கண மூன்றிற்கும் வெவ்வேறு எனவும் பின்ன பின்னம் எனவும் இங்ஙனநிற்றல் அநாதி எனவும், எங்கே பூசிக்கினும் அன்னேனுக்கே எனவும் திடமுற்று ஆண்டான் அடிமை பூண்டு ஒழுகும் அவசரத்தை விசிட்டாத்துவிதம் என்பர். இவ்விரண்டு அவசர நிலையுங் கடந்த நிட்காமி ஒருவன் தன்மை முன்னிலை படர்க்கை எனல்; மூன்ருே ஒன்ருே? மூன்று எனில் உபாதிகுணந்தொழில் முதலன்ருமையாலும்; முதலாயின் பூர்வபட்சப்படாதிருக்கவேண்டும ஆதலானும்; மூன்று அன்று. ஒன்றெனில் மூன்று எனக் கொள்ளு மயக்கம் வாராதிருக்கவேண்டும். வருவதால் ஒன்றன்று. எனச்சுருதி யுத்தி அனுபவத்துக்கொத்து விசாரித்துத் தெளிதல் என்னும் அவசரத்தை அத்துவிதம் என்பர். இம்மூன்று அவசரநிலையும் ஒன்றில் ஒன்று மிசிரிம்பிக்கிற் பயன்படாதெனவறிக.

ஞா-வி௱— விடயப் பிரியமோதப் பிரமோதனுக்கு மேலாய தைப்போதிக்கினும் தன்னடையேமேற்கோடல்போன்று இம்மூன்று அவசர நிலையினரு நிற்பரோ? நிற்பரெனின், சிலர் மேலான தாயின் சிரவணமனனுதிகள் செய்தும் பயன்பட்டிலர். சிலர் தத்த நிலைக்கு

மேலான தெனக் கண்டு கேட்டல் சிந்தித்தல் தெளிதலால் அஞ்ஞா னஞ் சந்தேகம் விபரீதங்களைக் களைந்து துக்க நிவிர்த்தி தடையற்ற ஆனந்தமுற்றனர். இங்ஙனம் இருக்க; மிசிரிம்பிக்கிற் பயன்படா தென்பதென்னை?

அ-விடை— உத்தமருக்கே அன்றி ஏனையோருக்கு அன்றென வுணர்க.

ஞா-வி௲— இம்மூன்று அவசரநிலையினுள் யாது சிறந்ததெனின்

அ-விடை— அத்துவிதமே சிறந்ததென்க.

ஞா-வி௲— எங்ஙனமெனில்?

அ-விடை— உபக்கிரம உபசங்காரத்தினுலென்க.

ஞா-வி௲— கடபடாதிகள் உற்பத்திக்குமுன் மண்ணூலாதி களாய் நின்றவாறு போன்று, சகசீவபரங்கள் உற்பத்திக்கு முன் சத் தாமாத்திரமா நின்றது என்பதையும், அங்ஙன நின்ற சத்து சுசாதிக விசாதிக சுகதபேத மற்றது என்பதையும் உணர்த்துவது உபக்கிரமம் எனவும்; இச்சத்தே கூடஸ்த பிரமம் அன்றி உபயம் இன்றெனக் களைந்து ஏகமாக விளங்குதலை உபசங்காரம் எனவு முன்னமே உணர்த்தினீர் இதனுல் யாம் உணரற்பாலது யாதெனின்?

அ-விடை— சத்தா சாமானியமான ஞானத்தை அன்றி அன் னியம் இல்லை என்பதும், அன்னியம் உண்டாகத் தோற்றின் சோத னையிற் சின்மாத்திரம் ஆகாது இருக்கவேண்டும். சின்மாத்திரம் ஆத லின், இந்தச் சத்தைப்போல வேறின்றென்பதும் யாம் உணரக் கிடந்ததென வறிக.

ஞா-வி௲— இதனை யாதினுலறியலாமெனின்?

அ-விடை— எங்கெங்கே ஸ்மரணை உண்டோ அங்கங்கே சக முளதாயும், எங்கெங்கே ஸ்மரணை இல்லையோ அங்கங்கே இலதாயும் இருப்பதில் யாவர்க்கும் அனுபம் அன்றோ? இதுவே தக்க பிரமாண மெனவறிக.

ஞா-வி௲— ஆயின் ஸ்மரணை ரூபமோ செகத்தெனின்?

அ-விடை— ஆம்.

ஞா-வி௲— எங்ஙனமெனின்?

அ-விடை— சோதனையில் அனைத்தும் ஸ்மரணையாக முடிதலி னென்க.

ஞா-வி௲—இங்ஙனம் உணர்தலினுய பயன் எமக்கியாதெனின்?

அ-விடை— கிருதகிர்த்தியம் துக்காபாவம் சர்வகாமாப்திகம் பிராப்தி பிராப்பிய முறுவதே பயனென வுணர்க.

ஞா-வி௵— இப்பயன் ஏனையதுவிதம் விசிட்டாத்துவிதம் உறா ததற்கேதென்னை?

அ-விடை— உபாதிரகிதக் கருத்தும் அஃதுறுதற்கு இயைந்த சாதனமும் இல்லாமையா லென்க.

ஞா-வி௵— ஆனால் சகசீவபரமாகத்தோற்றுவது இருந்தல்ல வோவெனின்?

அ-விடை—இருந்ததாயின் ஆராய்ச்சியிற் சிற்பிரகாசமாக முடியுமா? முடிதலிற் சிற்பிரகாசமே இங்ஙனமாகத்தோற்றுதலெனவறிக.

ஞா-வி௵— இதற்குச் சுருதிப் பிரமாணமுண்டோ வெனின்?

அ-விடை— வாசிட்டத்தில் "தானுகுமிகநொய்தாமாகாயத்திற் சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானே கோட்டும், ஆனதவுலகமெல்லாந் தனதுசோதியாதலினுற் றனக்குவே றயலொன்றில்லை." யென்பதினலறிக.

ஞா-வி௵— இங்ஙனமாகத் தீர்ந்த நிலையினையும் அவசர நிலையென்பதென்னை?

அ-விடை— நிர்க்குணத்துக்கு இது சகுணமாதலினென்க.

ஞா-வி௵— சகுணம் - நிர்க்குணம் - இனையவெனக் கொஞ்சந் தெரிவிக்கவேண்டுமெனின்?

அ-விடை—நித்தியம்-பூரணம்-ஏகம்-பரமார்த்தம்-பரப்பிரமம்-நிதானம்-சாந்தம்-சத்தியம்-கேவலம்-துரியம்-சமம்-திருக்கு - கூடஸ்தன்-சாட்சி-போதம் முதலிய எண்ணிறந்ததைச் சகுணமெனவும்; அசலம்-நிரஞ்சனம்-அமிர்தம்-அப்பிரமேயம் - விமலம் - வசனாதீதம்-அசடம்- அனுமயம்-அசங்கம்-அதுலம் - நிரந்தரம் - அகனு - நிரூபம்-அகண்டம்-முதலிய எண்ணிறந்ததை நிர்க்குணமெனவும்; கூறுப.

ஞா-வி௵—நிர்க்குணவஸ்துவைச் சகுணமாகக்கூறுவதென்னை?

அ-விடை— வஸ்துநிலை இனையதென விளக்கிவிப்பதற்கென்க.

ஞா-வி௵— இங்ஙனம் இருக்கத் துவிதமும் விசிட்டாத்துவிதமும் அத்துவிதமும் திரநிலையென அந்தந்தக் கொள்கையர் பிரதிவாதிப்பதென்னை?

அ-விடை— அப்பானேக்கும் வகை வேண்டாமையா லென்க.

ஞா-வி௵— இம்மூன்றினுஞ் சிறந்தது யாதெனில்?

அ-விடை— சகலத்தையும் ஞானாகாரமாகக்கரைக்கும் அத்தா விதமே சிறந்ததென்க.

ஞா-வி௵— எங்ஙனமெனின்?

அ-விடை— சகசீவபரமாகிய அனைத்தும் அறிவின் ஸ்புரிப்பு ஆதலானும், அவ்வறிவாகவே மீண்டுமாதலானும் ஞானமே சிறந்த தென்க.

ஞா-வி௵— பரத்தினுஞ் சிறந்ததோ ஞானமெனின்?

அ-விடை— பரமும் அறிபடுபொருளாதலின் ஞானமே சிறந்த தென்க.

ஞா-வி௵— அறிவுக்கும் அறிபடுபொருளுக்கும் பேதமென்னை?

அ-விடை— அறிவு; சத்துசித்தானந்தத்தையும்; அறிபடு பொருள்; அநிர்தசடதுக்கத்தையும் ஏற்றற்பாலவென முன்னமே உணர்த்தியதால் அதுவே பேதமென வுணர்க.

ஞா-வி௵— பரமும் அறிபடு பொருளாமென்றது எங்ஙனம் ஏற்றற்பாலதெனின்?

அ-விடை— இது பரமென எட்டி அறியப் புகும் அறிவினுக் கெல்லையும், தன்மை நிலை இனைய தெனக்காணுந் திறமுந் தக்கோர் பால் உணரற்பாலதின்மையினானும்; முன்னிலை நிலையதெனத் தன்மை நிலைத்துறை அனைத்தையுங் கருதிச்சேறலினானும்; ஒன்றை ஒன்றாய் அனுபவித்தலினானும் அறிபடுபொருளே யெனவறிக.

ஞா-வி௵— ஆயின் அறிபடுபொருளின்றோ வெனின்?

அ-விடை— சூரியப்பிரகாசமே கானல்சலமாகத்தோற்றுமாறு போன்று, ஞானப்பிரகாசமே சகசீவபரமாகத்தோற்றுதல் அன்றி வேறின்றாதலின் அன்னியமில்லை யென்றறிக.

ஞா-வி௵—இருப்பதை இல்லையென்னலாமா?

அ-விடை—இருந்தாற் சோதனையில் இல்லாமற் போவானேன். போதலால் இல்லையெனவறிக.

ஞா-வி௵—இல்லையெனில் விவகரித்திடலும் இல்லாமற் போக வேண்டும். போகவில்லையே எங்ஙனம் அசத்தெனப்படுமெனின்?

அ-விடை— கடபடம் என்னும் இடத்து இவ்விரண்டும் உண்மை எனல் பற்றி இவற்றிற்கு உபாதானகாரணமும் உண்மை எனப் படும். மண்ணுநூலும் அன்றிக் கடபடம் உண்மையாகுமா? ஆகும்

எனின், மண் நூல் என்னும் இவற்றின் விகாரமாகவன்றி இருக்க வேண்டும். இல்லை எனின், விவகாரிக்கு நிமித்தந் தோற்றன் மாத்திர மாய் உள்ள கடபடத்தை உண்டெனக் கொள்வதன்றி எதார்த்த வகையால் எங்ஙனம் உண்டெனக் கொள்ளப்படும். காரியமித்தையா யின், காரணமும் மித்தையாகாதோ வெனின், காரணமன்றிக் காரி யம் இல்லை ஆதலானும், காரியமாக விகாரித்துக்காண்பது காரணம் ஆதலானும், மண்ணு நூலுமன்றிக் காரியம் உண்டானால் மண்ணு நூலும் அன்றிக் காரணம் உண்டாகலாம். இல்லை எனின், இவ் விரண்டுமாக விளங்குவதும் அன்றாகவிளங்குவதும் மண்ணு நூலும் ஆதலால் ஒன்றேயெனவிளங்கப், "படமுநூலும்போற்செய்த பணி யும்பொன்னும்போற்பார்க்கிற், கடமுமண்ணும்போலொன்றாங் காரி யகாரணங்களெனவும்; எல்லையில்திசைகள்காலம் புறம்பெனு மிவற் றிற்கேற்பப், பல்லுருவா யெங்கெவ்வா றெழுந்ததப்படியங்காகும், செல்லுமிந்நெறியாலிந்தச் செகமெனும் பிரமகற்பம், புல்லுகாரண மிலாத பொருளெனப்புந்திசெய்க" எனவும் சான்றோர் வசன மிருப்பதைக்காண்க.

ஞா-வினா— இம்மூன்றவசரநிலையு முக்கியமாக வேண்டற்பால தெனவும், இம்முறை இயற்றிற் சேறற்பாலன துக்காபாவம் கிருத கிர்த்தியம் சர்வகாமாப்திகம் ப்ராப்திப்ராப்யமெனவும் ஐயந்திரிபின் றியுணர்ந்தேன். இனி யான் கேட்கவேண்டியது ஒன்றுண்டு. அஃது யாது எனின்; அறிவு அறிபடு பொருள் என்னும் இரண்டில் அடங் காதன ஓராணுவேனுங்கண்டிலன். நீர் கூறுமொழிகளில் ஒன்றி னுமையமில்லை. இது அவரவர் கொள்கையன்றோ? இதில் எது உமது பட்சமெனின்?

அ-விடை— ஞாயத்துக்குஞ் சோதனைக்கும் வழுவின்றியது என்றனன்.

௰௩ - வது,

அ வ ச ர நி லை

மு ற் றி ற் று.

---

திருச்சிற்றம்பலம்.
சிவமயம்.

௰௪ - வது

# ஞாயவாதி அபிப்பிராயவிளக்கம்.

## அவஸ்தாத்திரிய நிலை.

### வெண்பா.

எந்நிலையுங் கண்டுணர்ந்தீ ரேதோ வுமதுநிலை
அந்நிலையைச் சற்றிங் கறையுமெனின்—இன்னதென
ஞாயவா தப்புலவ ஞட்டப் புகுந்தனன்காண்
ஞாயமய மேமயமா நன்கு.

ஞா-வின— அஃதியாதெனின்?

**அ-விடை**— அவஸ்தைகள் பல. அவற்றைச் சுருக்கிச் சத்தாவத்தை எனவும், அவற்றைச் சுருக்கிப் பஞ்சாவத்தை எனவும், அவற்றைச் சுருக்கி அவத்தாத்திரியம் எனவும், அவற்றைச் சுருக்கிச் சகலகேவலம் எனவும், சத்துக்கள் விதியாநின்றனர். இங்ஙனம் இருக்க; எனது அபிப்பிராயம் விளக்க அவத்தாத்திரிய நிலை காரணமாகக் கூறுகின்றனன்.

ஞா-வின— அவ்வபிப்பிராயம் யாதெனின்?

**அ-விடை**— பிரமா விஷ்ட்ணு முதலிய பஞ்சமூர்த்திகளும், தேவர் முதலிய சராசரமாயுள்ள எழுவகைத்தோற்ற உயிர்களும் யாதுக்காக வியங்குதலும், அவத்தாத்திரியம் எய்துதலும், சுகமடைதற்பொருட்டு அன்றோ? அங்ஙனஞ் சுகம் நுகர்தற்பாலது பஞ்சகோசம் அன்றே. பஞ்சகோசம் எனின், தன்னைத்தான் உணர்தற்கும் இயைபுடையதாக வேண்டும். ஆகும் எனின், தூலதேகமும்; பிராணாதி தசவாய்வும், ஆனந்தமயமும், தம்மையுந், தமக்கயலையுஞ் சற்றும் உணர்தற்பாலதன்று. மனோமயம், விஞ்ஞானமயனும் தம்மை உணர்தற்பாலதன்று. ஆதலின், மெய்யுணர்வதாகவேண்டும். பொய் உணர்வு உண்டோவெனின், மனோமயமும், விஞ்ஞானமயமும் ஆதலில் உண்டு. உண்டாயினும்; மெய்யுணர்வின் பிரதிபலனமே யன்றி வேறு அன்றாதலின், சுகத்தை அவாவத்தக்கது அறிவாயிற்று. ஆகவே எவ்வுயிரும் அறிவெனற்கு ஐயம் இல்லை. இல்லை என்ற திடத்தால் அறிவு ஆனந்தம் என்ற விரண்டுமே பூர்வபட்சப்படுத்தற்கு

இடம் இன்றி நிலை நிறுத்தற்கு இடமாயிற்று. இவ்வறிவானந்தம் இல்லாத அவஸ்தைகள் இல்லை. அவஸ்தாத்திரியம் அறிவு அந்தந்த அவஸ்தாகோலமா நின்று சுகத்தை அனுபவித்தற்கு இடம் ஆதலின் அறிவும் ஆனந்தமுமே சேடித்து நின்றதெனவறிக.

ஞா-விஞ— சீவன் ஈஸ்வரன் செகத்து என்னுந் திரிபதார்த்தங் கட்குங் கதியென்னை?

அ-விடை— அறிவன்றி இல்லையெனவறிக.

ஞா-விஞ— அறிவு அன்றிச் சீவேசர் இல்லை என்பது; இவ் விரண்டுஞ் சித்தினது பிரதிபலனம் ஆதலால் ஏற்றனம். தேகாதிப் பிரபஞ்சமுதலிய சகல அண்டபேதங்களும் சடமாய் இருக்க; எங் ஙனம் அறிவன்றி இல்லை எனப்படு மெனின்?

அ-விடை— விசாரிக்கும் இடத்துப் பாரமார்த்திக சத்தாகிய ஞெப்தி மாத்திரமா முடியாது இருக்கவேண்டும். முடிதலின், ஞெப்தியினது பிரதிபலன மென வறிக.

ஞா-விஞ— எதனைஞெப்தி யென்றதெனின்?

அ-விடை— அகண்டபரிபூரணமா விளங்குஞ் சைதன்னியத் தின் ஸ்புரிப்பை யென வறிக.

ஞா-விஞ— இதனை உபமானத்தால் விளக்கவேண்டு மெனின்?

அ-விடை— சமுத்திரத்தின் திவலைபோலுமென வறிக.

ஞா-விஞ— பிரமம் என்னுது சைதன்னியம் என்றது என்னை யெனின்?

அ-விடை— ஞானத்தை அன்றிப் பிரமம் எனற்குப் பொருள் வேறின்ருதலி னென்க.

ஞா-விஞ— சமஸ்தமும் பிரமத்தின் ஸ்புரிப்பாயின் அந்த ஸ்புரிப்பு பிரமத்தின் விகாரம் அன்ருே? இங்ஙனம் இருக்க; நிர் விகாரப்பிரம மென்பானேன்?

அ-விடை— திரிகாலத்தும் விகாரம் உண்டானுல் அன்ருே நிர் விகாரம் ஏற்கப்படும். இவ்விரண்டும் அவசர நிலையால் அன்றி அதற்கு உண்மையா யின்றெனவறிக.

ஞா-விஞ — அஃது எங்ஙனந் தெரிந்துகொள்ளப்படுமெனின்?

அ-விடை— கடபட என்பவற்றுள்; கடமென்பது காரியம் ஆத லின், அதனை நோக்குமிடத்து அதுவேவிளங்கும். விளங்கினும்; மண்

ணுகிய உபாதானத்தை அன்றிக் கடமாகிய உபாதேயம் ஓர்முதலாக இருக்கவேண்டும். இல்லாமையால் மண்ணினது விகாரரூபமாகவேண்டும். அவ்விகாரம் மண்ணை அன்றி இல்லாமையால் அப்போது மண் விகாரதர்மத்தை ஏற்கும். இந்தக்கடவிகாரம் மண்ணினிடத்து உண்டாவென்று அம்மண்ணை உற்று நோக்கும் இடத்து அந்த மண்ணே விளங்குமன்றிக் கடமில்லாமையால் அப்போது மண் நிர்விகாரதர்மத்தை ஏற்கும். இவ்விரு நோக்காலன்றி மண் இவ்விரு தர்மத்தையும் ஏற்குமா? ஏலாதே, ஏற்றதாகக் காண்டல் நமது நோக்கின் பிறழ்வே அன்றி மண்ணின் பிறழ்வல்லவே அல்ல. அது எக்காலத்தும் இருந்தபடி இருக்கின்றது. இதுபோலப் பிரமத்திற்கும் இவ்விரு தர்மமும் வந்ததென வறிக. இதற்குதாரணம், "கடநோக்கில் மண்டிரிபாக் காணுமே மண்ணை, விடாநோக்கிலெங்கே விகாரம்-உடையதுபோற், காணு மிருவகையுங் கற்பனையே நாட்டபிழை, கோணனிமிர்வெங்கே கொளல்." என்பதினாற் காண்க.

ஞா-வி௫— இந்த நாட்டபேதமும் யாதின் விகற்பமெனின்?

அ-விடை— புத்தி விகற்பமென வறிக.

ஞா-வி௫— புத்தியாவது யாதெனின்?

அ-விடை— சைதன்னியத்தின் ஸ்புரிப்பென வறிக.

ஞா-வி௫— அந்தப் புத்திக்கு நாட்டபேதம் வருவானேன்?

அ-விடை— விஸ்மரணை தஸ்மரணையாலென வறிக.

ஞா-வி௫— விஸ்மரணை என்பதை யாதினு லறியலாம்?

அ-விடை— அசுத்த அவஸ்தாத்திரயத்தா லறியலாம்.

ஞா-வி௫— தஸ்மரணையை யாதினுலறியலாம்?

அ-விடை—சுத்தா அவஸ்தாத்திரயத்தால் அறியலாம். ஆனால், அசுத்தம் என்பது விடயமயம் எனவும், சுத்தம் என்பது ஞானமயமெனவுமாம்.

ஞா-வி௫— புத்தி என்பது ஏகமாவ தென்று?

அ-விடை— இங்ஙனம் விசாரித்துத்தெளிந்தவளவி லென்க.

ஞா-வி௫—அவஸ்தைகளின் நிலை உணர்ந்தேன்-எல்லா அவஸ்தைகளும் இருக்கச் சாக்ரா அவஸ்தை சிறந்ததென்பானேன்?

அ-விடை— பந்தமுத்திக் கேதுவாதலி னென்க.

ஞா-வி௫— எங்ஙன மெனின்?

அ-விடை— செகசீவபரம் உண்மையெனக் கோடலும், கொண்டவாறு அவை உண்மையாகத் தோற்றலும், ஆகிய இவ்வேதுக்

களாற் கற்பிதத்தை யானெனதெனக் கோடற்கும், மோகித்து அவ்வாறு பிறந்து இறத்தற்கும் இயைந்த நிலையாதலால் இதனைப்பந்தம் எனவும், இவ்வாறு நின்று பல்லூழிகாலம் அநுபவிக்கினும், நித்திய திருத்தி கணமும் இல்லாமையால் இவற்றில் எய்ப்புவரும். வரவே இந்த நித்தியதிருத்தியைத் தரற்பாலது யாதெனவரும். வரவே சிரவணாதிகள் செய்யவரும். வரவே பொய்மெய் சோதனை வரும். வரவே எது தானெனத்தெளிவுறுகின்றதோ அதுவே மெய்யெனவும், அல்லவை பொய்யெனவும், தேறும். இங்ஙனந் தேறுவதே முத்தியெனவும் கோடற்கியைந்தது பற்றி யென்க.

ஞா-வி-னா— மற்ற அவத்தைகளில் அறிவின்றோ வெனின்?

அ-விடை— இல்லை எனின், சாக்ராவத்தாக்காட்சிகள் தனது சுயப்பிரதிபலனும், சொப்பன அவத்தாக் காட்சிகள் தனது கற்பிதப் பிரதிபலனும், சுழுத்தி அவத்தாக்காட்சிகள் தனது கற்பன அசதியிற்றோற்றும் பிரதிபலனும் ஆதலின், இவை அறிவை அன்றி நிகழா? நிகழுமாயின், அங்கங்கே இருந்து அறிவது தன்னை அன்றி இருக்க வேண்டும். இருக்கும் எனின், சாக்கிரத்திலுஞ் சொப்பனத்திலும் போனேன் வந்தேன்-சுகித்தேன்-துக்கித்தேன்-என்றும், சுழுத்தியில் பாழானேன்-தோற்றரவற்றேன்-சும்மாவிருந்தேன்-நன்றாயுறங்கி ஆறுதல் ஆனேன் என்றுங் கொள்ளாதிருக்க வேண்டும். கொள்ளுதல் அநுபவம் ஆதலின் எங்கணும் அறிவன்றி இல்லையென வறிக. இதற்கு உதாரணம், "அறிவன்றி யெப்பொருளு மாங்காங்குளதேல், அறிவன்றிப்போவதெவனுயில்-அறிவொன்றே, யுண்மையெனக் கொண்டா முடன்படார் வேறெதுவோ, நுண்மையறி வெங்கே நுமக்கு."

ஞா-வி-னா— மற்ற அவத்தைகளில் தான் விகாரித்துநிற்கச் சாக்ராவத்தையில் மாத்திரம் பந்தமுத்தி விளைதற் கேதென்னை?

அ-விடை— சுயப்பிரதிபலனமாதல் பற்றி யென்க.

ஞா-வி-னா— அதனிற் பந்த முறுவானேன்?

அ-விடை— உண்மை எனக் கருதியதா லென்க.

ஞா-வி-னா— விடுதியெனல் ஏன்வரு மெனின்?

அ-விடை—அந்தத்தில் பயன் இன்மை உண்மையாகத் தோற்றுவதைப்பற்றி யென்க.

ஞா-வி-னா— இதுநிற்க; பந்த முறுவதும், விடுதி பெறுவதுஞ் சகசமாகக் காணுகின்றதேயன்றி முடிவின்றோ? முடிவுண்டெனின்,

காலவரையறை இல்லாமற்போக வேண்டும். போயிற்று எனின், முத்தி பெற்றார் என்னும் வசனம் இல்லாமற் போகவேண்டும். போகவில்லையே, பந்தத்துக்குமுன் காலம் இருக்க வேண்டும். இல்லை யெனின், முத்திக்குப்பின் காலம் இல்லாமற் போயிற்றே? இல்லையே; பந்தத்துக்கு ஆதி இல்லை என்பது கூடாது. கூடாது பற்றி முத்திக்கு முடிவு உண்டு என்பது கூடாது. பந்த முத்திக்கு முன்னும் பின்னுங் காலம் இருப்பதால் இவ்விரண்டிற்கும் வரையறை இல்லை யென அருத்தாபத்தியாற் காண்கின்றதே எங்ஙனம் விஸ்ராந்தி அடைந்து இருப்பதெனின்?

**அ-விடை—** இங்ஙனம் உன்னுவது எல்லாம் அறிவினது விலாசத்தில் ஆதலின் அறிவுநாட்டம் அகலாது இருப்பதே விஸ்ராந்தி நிலை யெனவறிக.

**ஞா-வி—** அப்போது பந்த முத்தி என்பதின்றோ வெனின்?

**அ-விடை—** யாவுஞ் சின்மாத்திரமா விளங்கலின் அவ்விகற்பம் இன்றெனவறிக.

**ஞா-வி—** பிரமாணம் உண்டோ வெனின்?

**அ-விடை—** "இந்த நிச்சயமுத்தருளனுபவமிருப்ப தெப்படி யென்றாற், சிந்தையற்றபூ மண்டலவிராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர், பந்தமுத்திகள் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகை யாவர், அந்தரத்தையுண் டுமிழ்ந்ததோர் கொதுகெனு மவர்களை நகையாரோ." எனவும், "என்னையேயல்லாமல் யான்பெற்றதேது மிலை, என்னைநான் பெற்றிருந்த தெப்போதும்-என்னையன்றிப், பந்த முத்தியில்லையால் பார்க்கிலிவை யாராயுஞ், சிந்தனையு மில்லாததே." எனவுங்காண்க.

௰௪ - வது

## ஞாயவாதி அபிப்பிராயவிளக்கம்

முற்றிற்று.

---





திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

ம்ரு - வது, தனது,

# சுவானுபூதிவினோத விளக்கம்.

## நான்மணிமாலை.

### வெண்பா

வெளிநாட்டத் தெங்கே விபரீதம் போல
ஒளிநாட்டத் தெங்கே யுலகம்—ஒளித்ததெனில்
ஆதார நாட்டத் தவலமாப் போவதெவன்
ஆதேய மெல்லா மகன்று. (க)

### கட்டளைக்கலித்துறை.

அகன்றன வாகி லகலாது காண்பதென் னக்கணத்தில்
அகன்றவ ணிற்றனு மில்லாமை யாலன் றகன்றதெஃ
தகன்றது நம்மய லல்ல வுலக மஃதெங்ஙனம்
அகன்ற மயலன்றி யெங்கே யுலகுள தாயுமினே. (உ)

### விருத்தம்.

ஆய்ந்திடி னுலக மனுக்குழு வாக வஃதொருமுதலெனக் கொளலென்
ஆய்ந்திடா முனரே லாய்ந்திடி லெங்கே யவ்விரு தர்மமு மெதன்பால்
தோய்ந்திடல்கடமேல் தோற்றமதாகுஞ்சுயம்பெனின் மண்ணன்றி யெங்கே
ஓய்ந்தது வாதம் நம்மயலன்றி யுலகுள தெனலெவ ணிலையே. (ங)

### அகவல்.

இலையுல கென்னி லிருப்ப தறிவே
பலகலை சம்மதம் பார்த்து மறியார்
எவரெவர் நாட்ட மெவ்வண மவ்வணம்
அவரவர்க் கிலகு மதுவது வாகத்
தெரிவெனல் பொய்யோ தேர்ந்த வறிஞர்
முரணிதி லென்கொலோ முழுது முணர்ந்தும்
ஏலா திருத்த லெவரு மறிகிலம்
மாலா யுழல மகிழ்ந்தனர் பலரும்
சமய நிச்சயந் தலைகா லொருங்கெங்
கமையக் கண்டன ராரு மிலையே

பலபல வாகப் படித்தீர்
கலைக மிலாநிலை கண்டவெந் நிலையே. (௪)

வெண்பா.

நிலையெது வென்னி னிறைந்த வறிவே
இலையொன்றும் வேறு யிருந்தும்—இலையென்னும்
பட்டமே கோடலெவன் பார்த்துணர்ந்திங் காயுங்கால்
விட்டிதனைக் கொண்மின் விரைந்து. (௫)

கட்டளைக்கலித்துறை.

விரைந்துடல்வீழ்முன் விசாரந்தலைக்கொளல் வேண்டுமன்றே
நிரந்தரங்கொள்ளி லறிவொன்றுமேமிஞ்சி நிற்குமெனல்
தெரிந்ததுவாக விளங்கத்தெரிந்தனந் தேசிகனால்
மருந்தொன்றிலைமயல் மாற்றவிதுவே மருந்துய்ம்மினே. (௬)

விருத்தம்.

உய்வதற்கனேக வுறுதிகளிருந்து முளதுலகென்பதை யகற்று [தொன்றே
பொய்யைப்பொய்யென்றும் மெய்யைமெய்யென்றும் புகலும்வேதாந்தம
மெய்யெது வென்னி லறிவெனவொன்றே வேறெலாமன்றெனும் வேதம்
அய்யமொன்றுளதே லாய்ந்திடவம்மி னகற்றுதுமன்னதிக் கணமே. (௭)

அகவல்.

இக்கண மக்கண மிலையறி வன்றி
எக்கண மேனு மிலாதெவ னென்றிலொன்
றந்தந் தவசரத் தறிவென வின்றேல்
எந்தெந்த வாறங் கிலகு மதுவது
அறிவினைத் தள்ளி யனுவினைத் தெரிக்கில்
பிறிதே கால பேத மனைத்தும்
காட்ட வகையிலீர் கற்றுமென் னனைத்தும்
நாட்டச் சமைய நன்குணர்ந் தீரோ
பேதமை பேதமை பெரிதும்
ஈதறிந் துய்ம்மி னிரும்புல வோரே. (௮)

வெண்பா.

புலமையாம் வேண்டிடுதல் போதமே தானாய்
இலகிடுதற் கன்றி யிலையாம்—அலவென்னில்
தானலதைத் தானெனற்காஞ் சற்றுந் துயரகலா
மானிடரென் றெங்கே வகை. (௯)

## கட்டளைக்கலித்துறை.

வகையறிந் தென்பய னேட்டாலறிவின் மலமறுமோ
சுகமேயறிவிங் கறிவேசுகமெனல் சொல்லளவாம்
இகமுத்திரமென லெங்கேயறுநினைப் பின்மையொடு
புகவிருண்ஞானத் தினகரன்றோன்றிடிற் போய்விடுமே. (௪0)

## விருத்தம்.

போய்விடுமெனலும் வந்திங்கெனலும் புகல்மொழிமாத்திர மன்றி
யாய்ந்திடில் மயலோர் முதலலாமையினு லன்னதுவேறெனு ரறிஞர்
ஓய்ந்திடக்கனவு விழித்திடிலெங்கே யுலகுயிர்பரமெனு மூன்றுந்
தோய்ந்தசின்மயத்தி லிஃதெனக்காணுத் துணிபினைச்சொலவறிந் திலனே()

## அகவல்.

அறிந்தில னெவையு மனுமவத் தென்றால்
அறிந்திலா முனமு மறிவன்றி யில்லை
யென்ன வேண்டுமோ வெதன்பிழை யென்னில்
உன்னிடாக் குற்றமே யுறுதிவே றின்றிப்
பகுதி விகுதி பார்க்கி லிரண்டாம்
பகுதி மறதி பகருடல் விகுதி
இங்ஙன மாத லிலகு மறிவே
எங்ஙன மென்னி லிவ்விரண்டாக
அன்னிய முளதே லவையிலா தெவன்கொல்
அன்னியோன் னியத்தி லறிவன்றி யங்கோ
எந்த வகையினு மில்லை
இந்த நிலையை யெடுத்திடும் பகுப்பே. (௪௨)

## வெண்பா.

பகுதி மறதியெனல் பாங்கா விளக்கில்
விகுதி யுடலென்னல் வேண்டா—சகத்தூடன்காண்
என்னில் விகார மெவையுமஃ தின்றென்னில்
அன்னமதே யாதியென லாம். (௪௩)

## கட்டளைக்கலித்துறை.

ஆமென் றலவென் றறிவ தறிவன்றி யாதியுண்டோ
ஆமென் றலவென்று தன்னைக் கணிக்கவு மாகுமன்றோ
ஆமென்ற தேதிங் கலவென்ற தேதிவ் வறிவை யன்றி
ஆமென்ற தேயல வாக முடிதலி னுமிதனே. (௪௪)

## விருத்தம்.

மின்னெனக்காணு முடலினையெவரு மெய்யெனக்கண்டு நானென்பர்
அன்னியமன்றே லென்தெனப்படுமோ வழியுமோவனர்த்தம தாமோ
இன்னதென்றுறக்கத் திலாவகையாமோ வெவர்மரணந்தனை யகன்றோர்
உன்னிடிற்பிறப்பு மிறப்புமேதுணர்வுக் குடற்கெனலூகம தாமே. (கரு)

## அகவல்.

ஊக மிருந்து முணர்ந்திடா தென்னே
தேக மிதுவெனத் தேகி யிதுவென
மானிட ராகியு மயக்கெங் ககன்றோர்
ஈன மிருக மிவரெனற் கிடரென்
தன்னை யுணர்ந்தோர் தாமே மானிடர்
அன்னிய மெல்லா மறிவுரு வாக
என்ன தனுபவ மிதுவே
என்னவென் றுரைப்பே னிதின்மகி மையையே. (கசா)

## வெண்பா.

மகிமை யுருவத்தில் மாற்றி மினுக்கி
அகமகிழ்ந் திந்நா ளழிந்தேன்—சுகநிலையைக்
கண்டேன் குருவருளாற் காணே னயலொன்றும்
அண்டா துறைமனமு மாங்கு. (கஎ)

## கட்டளைக்கலித்துறை.

ஆங்கேயறிவொன்று மிஞ்சிவிளங்கலென் னாச்சரியம்
ஈங்கேவிகார வடிவேமயமா யிருப்பதென்னே
ஓங்கியதானெங் ஙனமங்ஙனமென வோதினன்காண்
பாங்கறிந்தேன்மரு ளேன்வெருளேனினிப் பார்த்துய்ம்மினே. (கஅ)

## விருத்தம்.

பார்வைதனக்குல கன்றியெவர்க்கும் பகருமிலக்குளதோ
தீர்விதுவென்னி லிலாவகையென்னே திரியுமுறக்கமதில்
பார்வையதின்றெனி லங்குளகாட்சி பகல்போற் றெரிவானேன்
ஓர்தலிறந்தீ ருணர்வேமயமென வுன்னுமினுத்தமரே. (ககூ)

## அகவல்.

உத்தம மத்திம மொழிந்த ததமம்
உத்தமர்க் குலக முணர்வா விளங்கும்
மத்திமர்க் கைய மயமா முலகம்
சத்தெனக் காணுந் தகைய ததமர்க்

கிப்படி காணி லெதுவோ வுலகம்
அப்படி யப்படி யாகு மென்னில்
எங்ஙன மிலக்கி லிருப்ப தென்னில்
அங்ஙன மங்ஙன மாகியு மாகா
திருப்ப தியல்பே யெமதுரு
இருப்ப தப்படி யெமது முடிவே. (உ0)

வெண்பா.

முடிவென்னில் வாதமோ மோனமோ சிந்தை
முடிவோ மறையோ முதலோ—தடையின்றிக்
கூறுக வென்னிற் குணங்குறிக ளென்றுணர்க
ஈறுமுத லில்லாத தில். (உக)

கட்டளைக்கலித்துறை.

இல்லையுண்டென்பதென் னேபரமாயதை யின்னதெனச்
சொல்லவுமெண்ணவு மின்மையிலின்றெனச் சொல்வதுகாண்
இல்லையென்றோர்தலு மின்றேவுளதென் றிசைக்குமறை
எல்லையிலிவ்வழக் கெங்கேயறிஞருக் கெண்ணுமினே. (உஉ)

விருத்தம்.

எண்ணமொன்றின்றி யுடலநாளுக விருக்குதலோவய லாக
உண்ணினைந்தயர்ந்து தீர்வகையின்றி யுயர்பரமகற்றுமென் றெனலோ
தண்ணருள்சுரக்கில் முயற்சியென்செய்யுந்தடையிலை யென்றகங்கொளலோ
எண்ணிடுமுத்தி யெவையுநாளுக விலகுதலென்னுமா மறையே. (உங)

அகவல்.

மறையென லிந்து மறையே மறையாம்
பிறமயக் ககற்றுப் பிரேத மறையே
பகுதி விகுதி பகுப்பையொன் றுக்குந்
தகுதி யிலாமையில் தவிர்ந்தன மவற்றை
இந்து மறையிலு மிலாதென் னொருமை
இந்த பேத மிசைத்தகற் றுதற்கே
பருவத் தளவாப் பகர்ந்தழைத் துப்போய்
இருமைய தொருமைய தாக்கித் தனிக்கச்
செயுமிதின் மகிமை செப்ப
வியையா தெவர்க்கு மிதுதிண் ணமதே. (உச)

வெண்பா.

திண்ண மிதனைத் தெரிக்கா விடிற்குரவன்
சண்முகி யாதிகுறி தானகும்—உண்மையதேல்

தேக வளவினதோ தேவநிலை யென்னமதி
ஊகத்துக் கொன்று றில். (உரு)

கட்டளைக்கலித்துறை.

உறுதியொன் றில்லை யுணர்வினைத்தள்ளி லொருபொழுதும்
மறதியொன்றேயனர்த் தத்துக்கிடமெனல் வாய்மையன்றே
இறுதி மட்டாய்ந்திடி லெல்லாமறதி யெனக்குறிக்கும்
அறுதற்கிடமிலை ஞானமல்லாதிதை யாயுமினே. (உசு)

விருத்தம்.

ஆயுமவர்க்கே யலதிதுகாணு தனந்ததவர்க்கெனினும்
மீயுயர்சடகோபப்பெரு மாடன்—விமலமொழித்திறமீ
தோயுனர்யாரோவிருத்திக ளவரே யுயர்பதமடைவார்கள்
நீயுநானெனவுமுபாதிகள் மட்டே நீக்கில்சிதம்பரமே. (உஎ)

அகவல்.

சிதம்பரத் தலமோ சிதம்பரக் குறியாம்
சிதம்பர மென்னல் திரியாச் சுயம்பு
மற்றவை யெல்லா மாறு தொன்றிலை
இற்றதென் றுணரா விரும்பொரு ளதுவே
மேல்கீ ழொப்பிவை மேவிடா ததனால்
சால்புடைத் தாகத் தயங்கா விடமிலை
கற்பித மின்றிய காட்சி
அற்புத மிதுபோ லதிசய மிலையே. (உஅ)

வெண்பா.

இலையெனலை யேலா திருப்பதா வொன்றும்
மலைவின்றி யாருணர்த்த வல்லார்—இலையோ
குருவெனற்குப் பஞ்சமிலை கூறற் கறியார்
பொருவஞ்ச கங்கரந்த பேர். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

பேராயிரங்கற்றுப் பேசியுமெட்டார் பிணக்கறுக்கார்
நேரேயிருக்கு முலகையென்றுலிவர் நின்றெவர்க்குந்
தீராவழக்கைத் தொலைத்துப்பரத்தைத் தெரிசிப்பரோ
தேராவிவரை விடுத்துக்குருபரன் தேடுமினே. (௩௦)

விருத்தம்.

தேடிடுந்தன்னைத் தவிர்ந்தயல்பரமாத் தேடிடிற்றேற்றுமற் புதங்கள்
நாடிடிற்றனது சுத்தகற்பிதமே நண்ணுமுன்னசுத்தகற் பிதங்கள்

கூடுமேற்றனது மயல்புறம்பென்னக் கூடுமேயவைதெளி வயலாக்
கூடிடாதெனிற்று றெனத்தேடிக் குறைவரவிருப்பர்ஞா னியரே. (௩க)

அகவல்.

ஞான மெனலை நாடிடுங் காலை
தானே காரணந் தானே காரிய
மாகுத லெதுவோ வதுவே ஞானம்
ஏக மேவாத் துவித மென்பம்
ஞான மலதஞ் ஞான முளதேல்
ஈன மேக மேவாத் துவிதம்
என்ன வருமே லினியொன்று சொல்லுதும்
அன்னதுண் டிலையென் றறைதரு தகைமை
யேலா தொருபொரு ளின்னதென் றிசைக்கின்
தோலாது நும்மொழி சொல்வா தத்தால்
யாது பயனோ விலையே
ஓதி யுணர்மி னுண்மை நிலையே. (௩௨)

வெண்பா.

உண்மை யலவே யுயர்ஞானம் போல்பவைகள்
உண்மையென் றேனையவை யுற்றாலும்—கண்புதைந்த
மாந்த ருவப்பர் மதியா ருயர்ஞானி
சாந்தனையுங் கண்டிடினுந் தான். (௩௩)

கட்டளைக்கலித்துறை.

தானெனலில்லாத் திணையிலையுண்டேல் சதுமறைகள்
தானெனபதேமுக் கியமென்னுமோவிந்தச் சற்றுமுன்னீர்
தானெனல்மூவிட மைம்பாலிருதிணைச் சார்ந்துமல
தானெனல்கண்டவ ரன்றோ வெவற்றினுஞ் சத்தியரே. (௩௪)

விருத்தம்.

சத்தியமென்பர் சகபரமுயிரைத் தன்சுயவடிவினைக் காணார்
மெத்தவாசித்து மென்பயன்செருக்கே மேவிடற்கிடமலா துண்டோ
எத்தனைபிறப்பி லிஃதொருபிறப்பா மிதனைநானென்னுமவ் வளவும்
முத்தியேயில்லை யுளதெனின்மயக்க முடிந்ததன்றென்பர்ஞா னிகளே (௩௫)

அகவல்.

ஞானமு திக்கி னசிக்கு மயக்கம்
ஏனைய வற்றா லெங்ஙன மசையும்
மயக்க மென்னல் மதிமயக் கேனைய
மயக்க மன்று மதிமயக்காவது

ஒன்றையொன் றாக வுன்னி லதுவே
ஒன்றுவொன் றாக வுறுமே யெதிரில்
இன்னதென் றைய மிகந்து
தன்னுரு கண்டு தான்விளங் குவரே. (௩௬)

## வெண்பா.

விளக்க மிரண்டாம் விடயமொடு ஞானம்
துளக்கறுத்தல் மெய்ஞ்ஞானச் சோதி—அளக்கலிலா
மெய்ப்பரம நீதே மிகப்படித்தும் வேறென்பார்
பொய்ச்சகத்தை மெய்யென்பர் போய். (௩௭)

## கட்டளைக்கலித்துறை.

போய்நெடுந் தூரமும் பாழன்றிக்காணார் புவியனைத்துஞ்
சேய்மனையாதிய சுற்றமுமெய்யெனச் சிந்தைசெய்து
ஓய்விலதாகச் சுகதுக்கமெய்தி யுழலுவதென்
போய்நற்குருபரன் றாள்பற்றிவாழுமின் போதகரே. (௩௮)

## விருத்தம்.

போதகரென்பீர் போதமீதென்னப் புகலவுங்கேட்டுநீ ரறியீர்
யாதுமெவ்வணுவி னிதமுதித்தொடுங்கும் யானெனல்யாதுயிர் பலவும்
ஓதிநன்குணரி லறிவலாதின்றென் றுணர்த்துவதன்றியென் னுணர்த்தும்
நீதிசோதனையால் தீர்விதுவாகு நிலையெனச்சொல்வர்ஞா னிகளே. (௩௯)

## அகவல்.

ஞானமே சரியை ஞானமே கிரியை
ஞானமே யோகம் ஞானமே ஞானம்
வேறெனின் ஞாயம் வேறெனற் கென்னை
வேறுவே றாதலின் வேறெனப் படுமெனின்
அறிவினைத் தள்ளி யவைநான் கெங்கே
அறிவவை யாயி னயலாத் தோற்றலென்
கான னீர்போற் காணுமென் றுணர்த்தற்
கீனமில் சுருதி யிருப்ப தறியீர்
எடுக்குந் துறையி லிணக்கங் காட்டி
முடித்தொன் றாக்கின் முடிவிதென் றனர்காண்
அதாஅன்று—ஒன்றெனப் படுதலு மன்றெனப் படுதலும்
நன்றெனத் தீதென நாட்டப் படுதலும்
இன்ன தென்று மீதல தென்றும்
பன்னப் படுதலும் பன்னப் படாதலும்

உண்டென்றிலையென் றுணர்த்தப்படுதலும்
பண்டையதென்றும் பழையதன்றென்றும்
இன்னவாறெல்லா மிசைக்கப்படுதலும்
அன்னியமுன்னிய மாக்கப்படுதலும்
ஏற்றற்குரிய திரும்பொருளொன்றுண்
டேற்றமில்லாதார்க் குரியதன்று
தக்கசிரவணந் தக்கமனனம்
மிக்கவிடத்தே மிகுமேதெளிவு
இதுமிகத்தனிக்க வியையுமக்கணம்
இதுவதுவென்று விரும்பொருடோன்றும்
இம்முறையல்லார்க் கிலகாதிலகா
தம்மவம்ம வதிசயமிதுபோல்
இல்லையில்லை யிதனையுணர்ந்தார்
நல்லரேயல்லார் நல்லர்போற்காண்பர்
ஆரவர்நலரெனி லறிந்தவளவு
தேரச்சொல்லுதுஞ் சிறந்தசங்கரா
சாரியரவர்தண் சரணமடைந்தோர்
ஓரியல்பாக வொளிர்சடகோபர்
அன்னவர் தம்மடி யகலாவடியவர்
முன்னுமையவள்பால் முகந்தருந்தியசம்
மந்தரொடுநால்வர் மலரடியகலார்
இந்தபரம்பரைக் குரியர்கல்லால்
நிழற்கட்டெளிந்தார் நினைவுசின்மாத்திர
நிழலையகலா நிமலதேசிகர்
முதலியோர்பதத்தை முடிமிசைதரித்து
மதமெலாமுறிய மாற்றியமுனிவர்
சரணேயெமது தலைக்குப்
பெருமுடிவேறே பெறுமுடியிலையே. (௪0)

௫-வது, தனது

சுவானுபூதி விநோதவிளக்கம்.

முற்றிற்று.

---